# பெருந்தெய்வக் கோயில்களும் உள்ளூர் மரபுகளும்

(திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்கள்)

மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக
முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்படும் ஆய்வேடு

**ச. நவநீதகிருஷ்ணன்**
பதிவு எண் : 1224




தமிழியல் துறை
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்
திருநெல்வேலி - 627 012

நவம்பர் 2007

**நெறியாளர்**

**முனைவர் தொ.பரமசிவன்**

பேராசிரியர் & துறைத்தலைவர் (பணிநிறைவு)

தமிழியல் துறை

மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்

திருநெல்வேலி.12

**இணை நெறியாளர்**

**முனைவர் ஆ.செல்லபெருமாள்**

இணைப்பேராசிரியர் & துறைத்தலைவர்

மானிடவியல் துறை

புதுவைப் பல்கலைக்கழகம்

புதுச்சேரி

திருநெல்வேலி-12

31.10.2007

## சான்றிதழ்

**'பெருந்தெய்வக் கோயில்களும் உள்ளூர் மரபுகளும் (திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்கள்)'** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வேடு மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டத்திற்காகச் சமர்ப்பிக்கப்படுகிறது. இந்த ஆய்வேடு எமது மேற்பார்வையில் ச.நவநீதகிருஷ்ணன் அவர்களால் தன்னியலாக உருவாக்கப்பெற்றது எனவும், இந்த ஆய்வேடு வேறு எந்தப் பட்டத்திற்காகவும் பயன்படுத்தப்பெறவில்லை எனவும் சான்றளிக்கப்படுகிறது.

இணைநெறியாளர்

Dr. A. CHELLAPERUMAL
HEAD
DEPARTMENT OF ANTHROPOLOGY
PONDICHERRY UNIVERSITY
PUDUCHERRY-605 014.

31/10/2007
நெறியாளர்

**ச.நவநீதகிருஷ்ணன்**
ஆய்வாளர், தமிழியல் துறை
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்
திருநெல்வேலி-12

திருநெல்வேலி
31.10.2007

## ஆய்வாளர் உறுதிமொழி

**'பெருந்தெய்வக் கோயில்களும் உள்ளூர் மரபுகளும் (திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்கள்)'** என்னும் தலைப்பில் மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக உருவாக்கப்பெற்றுள்ள இவ்வாய்வேடு எனது சொந்த முயற்சியால் உருவானது என்றும் இதற்குமுன் வேறெந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்காகவும் இவ்வாய்வேடு பயன்படுத்தப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

31.10.2007

நெறியாளர்

ஆய்வாளர்

# நன்றியுரை

இவ்வாய்விற்கு துணை செய்தோர் பலர். அனைவருக்கும் எனது நன்றிகள். எங்களது வாழ்விற்காக தனது வாழ்வினை அர்ப்பணித்துக் கொண்டிருக்கும் எனது தாய்க்கு முதலில் எனது நன்றி.

வகுப்பறை மாணவனாக அவரிடம் கல்வி கற்காத என்னை, ஆய்வு மாணவனாக ஏற்றுக்கொண்டு நூல்கள் வழங்கியும், களப்பணிக்கு அழைச்சென்றும் ஆய்விற்கு வழிகாட்டியது மட்டுமல்லாமல் காணும் ஒவ்வொரு சொல்லிலும் பொதிந்திருக்கும் கருத்தினையும் கற்கும் வழியையும் கற்றுக் கொடுத்த தொ.பரமசிவன் அவர்களுக்கு முதலில் என் நன்றி. இதனையே நான் என் வாழ்வில் பெற்ற பேறாகக் கருதுகிறேன்.

அவருடைய வீட்டிற்குச் செல்லும் ஒவ்வொரு முறையும் அன்புடன் வரவேற்று என் தாயைப் போன்று என்மீது அக்கறை செலுத்திய தொ.ப அவர்களின் துணைவியார் திருமதி.பாப்பா அவர்களுக்கு என் நன்றி கலந்த வணக்கங்கள். ஆறு ஆண்டுகாலம் பல்கலைக்கழகத்தில் ஆய்வு செய்த காலத்திலும் அதற்கு முன்னரும் என்னுடன் நண்பராய் பழகிய பேரா.அ.ராமசாமி அவர்களுக்கு நன்றி.

எனது முதுகலைப்பட்ட ஆசிரியரும் இவ்வாய்வின் இணை நெறியாளருமான ஆ.செல்லபெருமாள் (புதுவை பல்கலைக்கழகம்) அவர்களுக்கும் நன்றி. கல்வெட்டு குறித்த நுணுக்கமான தரவுகளைத் தந்துதவியதோடு எனக்கு ஏற்பட்ட சந்தேகங்களையும் நான் சென்ற நேரத்தில் தீர்த்து வைத்து, நூல்கள் தந்துதவிய திரு.செந்தில் செல்வக் குமரன் (மாவட்ட தொல்லியல் அதிகாரி, திருநெல்வேலி மாவட்டம்) அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றி. இவ்வாய்வேடு வடிவம் பெற அறிவுரைகள் வழங்கி நூல்கள் கொடுத்துதவிய அண்ணன் பேரா.ஞ.ஸ்டீபன் அவர்களுக்கும் அவருடைய குடும்பத்தாருக்கும் எனது நன்றி.

நட்புடன் பழகிய தமிழியல் துறை பேராசிரியர் பே.நடராஜன் அவர்களுக்கும் அமர்வதற்கு இடமின்றி திரிந்த போது இருப்பதற்கு இடமளித்த செல்வி சகாயமேரி அவர்களுக்கும் உதவித்தொகை பெறுவதற்கு பணிகள் செய்த வனத்துரை, சாந்தமணி அவர்களுக்கும் என் நன்றி. உடன் பிறந்த சகோதரிகளாய் பழகிய செல்வி. கு.சண்முகப் பிரியா, அஸ்வினி கிருத்திகா ஆகியோருக்கு என் நன்றி. தமிழியல் துறை நண்பர்கள் இராமர் பாண்டி, திருமதி கிருத்திகா, அருள் மனோகரி ஆகியோருக்கு என் நன்றிகள். கடந்த பலபத்தாண்டுகளாக என்னுடைய வாழ்வில் அக்கறை கொண்டு பழகும் நண்பர் அ.வெங்கடாசலத்திற்கும் அவரது குடும்பத்தாருக்கும் எனது நன்றி.

என் நன்றிக்குரியோர்

பேரா.தே.லூர்து, பாளை

பேரா ந.இராமச்சந்திரன் நாட்டார் வழக்காற்றியல் துறை, பாளை.

பேரா ஆ.தனஞ்செயன், நாட்டார் வழக்காற்றியல் துறை

நிதித்துறை அலுவலர்கள் ம.சு. பல்கலைக்கழகம்

சிவானந்தம் ம.சு. பல்கலைக்கழகம்

முத்துராஜா, நூலகர், நாட்டார் வழக்காற்றியல் மையம், பாளை

நேரு, ரமேசு, அலுவலர்கள் நூலகம் ம.சு. பல்கலைக்கழகம்

சுரேஷ், மகா ஜெராக்ஸ், திருநெல்வேலி நகரம்.

தகவலாளிகள், திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டம்

வைகை குமாரசாமி, காந்திநகர்

இரா.இலக்குவன், மு.அறிவழகன், நதிரா, கென்னடி

மூவருக்கு நன்றி சொல்லாமல் இந்த நன்றி உரை நிறைவு பெறாது. மனம் சோர்வுற்றிருக்கும் பொழுதெல்லாம் தங்களது சிரிப்பினால் எனக்குப் புத்துணர்ச்சி வழங்கிய என் அன்புக் குழந்தைகள் ந.பிரபா சங்கருக்கும், ந.கௌதம சித்தார்த்துக்கும் என் அன்பு கலந்த நன்றிகள். என் துணைவியார் ச.மாரியம்மாள் அவர்களுக்கும் என் நன்றி.

ச.நவநீதகிருஷ்ணன்

# சுருக்கக்குறியீடுகள்

| | | |
|---|---|---|
| க.வெ | .... | கல்வெட்டு |
| ம.பெ.இ | .... | மன்னன் பெயர் இல்லை |
| ப.ஆ | .... | பதிப்பு ஆசிரியர் |
| ப.ஆர் | .... | பதிப்பு ஆசிரியர்கள் |
| பொ.பதி | .... | பொதுப் பதிப்பாசிரியர் |
| மொ.பெய | .... | மொழி பெயர்ப்பு |
| மறு.பதி | .... | மறுபதிப்பு |
| அகம் | .... | அகநானூறு |
| தொல் | .... | தொல்காப்பியம் |
| புறம் | .... | புறநானூறு |
| மணி | .... | மணிமேகலை |
| சிலம்பு | .... | சிலப்பதிகாரம் |
| பதி | .... | பதிப்பு |
| இரண் | .... | இரண்டாம் |
| மூன்றா | .... | மூன்றாம் |
| நான் | .... | நான்காம் |
| ஆ.இ | .... | ஆண்டு இல்லை |
| சடா. | .... | சடாவர்மன் |
| திரு.சை.சி.நூ.ப | .... | திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| வை.சி.நூ.ப | .... | வைணவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |

SII .... South Indian Inscriptions (Archaeological Survey of India).

EI .... Epigraphica Indica

ed.. edition

## உள்ளடக்கம்

ஆய்வுத்தலைப்பு

ஆய்வுப்பொருள்

ஆய்வு நோக்கம்

ஆய்வின் கருதுகோள்

ஆய்வுக்களம்

ஆய்வுத்தரவுகள்

ஆய்வு முன்னோடிகள்

ஆய்வேட்டின் அமைப்பு

# முன்னுரை

## முன்னுரை

ஆதிகாலத்தில் மனித சமூகம் இடி, மின்னல், மழை போன்ற இயற்கை நிகழ்வுகளுக்கு அஞ்சியது. அந்த அச்சத்தின் விளைவாக இயற்கையினை அக்கால மக்கள் வழிபடத்தொடங்கினர். இந்த வழிபாடு இடி, மழை எனத் தொடங்கி மரம், பறவை, விலங்கு ஆகியவற்றின் உருவங்கள், கோட்டங்கள், பெருங்கோயில்கள் எனக் காலப்போக்கில் வளர்ச்சியடைந்தது. இது சமூக வளர்ச்சியோடு இணைந்து அமைந்தது. அதாவது, உணவு சேகரிப்புச் சமூகம், வேட்டைச் சமூகம், கால்நடைவளர்ப்புச் சமூகம், வேளாண் சமூகம் என உணவு உற்பத்தி முறையில் சமூகம் வளர்ச்சியடைந்தது. இந்தச் சமூக வளர்நிலைகளுக்கு ஏற்ப வழிபாட்டு முறையும் வளர்ந்தது. காலவோட்டத்தில் மக்கள் குழுக்களின் பெருக்கத்தினாலும் அரசு எந்திரத்தின் வளர்ச்சியினாலும் அது பன்முகத் தன்மை பெற்றது எனலாம். பின்னர் வழிபாடு என்பது பண்பாட்டின் கூறுகளில் ஒன்றாக இடம்பெற்றது. இவ்வழிபாட்டுக்கூறு தமிழியல், நாட்டார்வழக்காற்றியல், மானிடவியல், சமூகவியல் ஆகிய துறைகளில் ஆய்வு செய்யப்பட்டு, வகைபாடு செய்யப்பட்டது. தெய்வவழிபாடுகளில் காணப்படும் சடங்குகளின் தன்மை, வழிபடும் மக்கள் ஆகிய அடிப்படைகளில் தொடக்கநிலையில் ஆய்வாளர்கள் வழிபாட்டைச் 'சிறுதெய்வ வழிபாடு', 'பெருந்தெய்வ வழிபாடு' என இரண்டாகப் பகுத்துள்ளனர்.

*"இராபர்ட் ரெட்பீல்டு (Robert Red Field) என்ற மானிடவியல் அறிஞர், சமூகத்தைச் சிறுமரபு (little Tradition), பெருமரபு (great Tradition) என இரண்டாக வகைப்படுத்தினார்"* (Milton Singer:1972:67). மேலும் அவர் *"பெருமரபு என்பது எம்.என் சீனிவாசன் முன்மொழிந்த சமஸ்கிருதமயமாதல்*

*என்ற கருத்தாக்கத்திற்கு ஓரளவு ஒத்ததாகும். சமஸ்கிருதமயம் என்பது பிராமணர்களின் பொது நடவடிக்கைகளும், நம்பிக்கைகளும் ஆகும். இது இந்தியா முழுவதிலும் பரவியுள்ளது. இது உள்ளூர் (local), பிரதேச (regional) அளவில் மட்டும் பரவும் மரபிற்கு எதிரானதாகும்''* என்கிறார் (1972:68). இக்கருத்தாக்கத்திலிருந்து சிறுதெய்வ வழிபாடு, பெருந்தெய்வ வழிபாடு என்ற சொற்கள் பெறப்பட்டன.'சிறுதெய்வங்கள்' என்பன சமூகத்தின் அடித்தட்டு மக்களின் தெய்வங்களாகும். *''இத்தெய்வக்கோயில்கள் பொதுவாக ஊர்மந்தை, ஊரின்எல்லை, குளக்கரை, கண்மாய்க்கரை, களத்துமேடு, வயற்புறம், அழிந்த கோட்டைகளின் வாசற்பகுதி இருந்த இடம், நெடுஞ்சாலை ஓரம் ஆகிய இடங்களில் அமைந்திருக்கும்''* (தொ.பரமசிவன்:1995:112). அந்த இடங்கள் அனைத்தும் காவலுக்குரிய இடங்களாகும்.

*''சிறுதெய்வங்கள் என அழைக்கப்படும் கிராமத்தெய்வங்களின் செயல்பாடுகளில் ஒன்று அவை கிராமக்காவலாளியாக இருப்பதாகும். மேலும் அவை நோய், இயற்கைச் சீற்றங்களைக் கட்டுப்படுத்தும் சக்தி வாய்ந்தவையாகவும் உள்ளன''* (Henry Whitehead:1986:16). *''சிறுதெய்வச் சமயமரபினை, பெருந்தெய்வச் சமயமரபிற்கான 'மாற்றுப் பண்பாடு(Alternative Tradition)', எதிர்ப்புப்பண்பாடு(Counter Tradition)''* என்கிறார் இ.முத்தையா(1998:40). *''நாட்டார் தெய்வங்கள் என்ற சொல்லாட்சி நம் மனங்களில் சாமியாட்டம், குருதிப்பலி, பலிவடிவங்கள் ஆகிய படங்களாகவே மூடநம்பிக்கைகளோடு பின்னிப்பிணைந்தவையாக விரிந்து கிடப்பது உண்மை. ஆனால் அவை முற்றிலும் தவறான பிம்பங்கள்''* என தொ.பரமசிவனின் 'தெய்வம் என்பதோர்' என்ற நூலுக்கு எழுதிய அணிந்துரையில் ச.தமிழ்ச்செல்வன் குறிப்பிடுகிறார்.

'பெருந்தெய்வங்கள்' என்பன சமூகத்தின் 'மேல்தட்டு' மக்களின் வழிபடு தெய்வங்களாகும். இத்தெய்வக்கோயில்கள் பெரும்பாலும் ஊரின் மையத்தில் கட்டப்பட்டுள்ளன. அவற்றின் மூலத்திருமேனிகள் பிராமணர்களால் பூசைகள் செய்யப்படுகின்றன. அங்கு அரசதிகாரத்தின் பண்புக் கூறுகளைக் கொண்ட தெய்வங்கள் வடிவமைக்கப்பட்டன.

சிறுதெய்வத்திற்கும் பெருந்தெய்வத்திற்கும் இடையே காணப்படும் முரண்பாட்டை இ.முத்தையா, *"சிறுதெய்வச் சமயமரபிற்கும் பெருந்தெய்வச் சமயமரபிற்கும் இடையில் எதிர்மறையான பண்புகள் காணப்பட்டாலும் அவை மோதிக்கொள்வதற்கான சமூகநிலை உருவாகும்வரை அவை இரண்டும் ஒன்றின்பண்புகளை இன்னொன்று தமதாக்க முயற்சி செய்துகொண்டு வருகின்றன. ஆகவே இவற்றை மாற்றுப்பண்பாடுகள் எனலாம். இவ்விரண்டும் சிலநேரங்களில் தத்தம் பண்பாட்டு மரபுகளைத் தக்கவைத்துக் கொண்டு அதேநேரத்தில் ஒன்றின் பண்புகளின்மீது இன்னொன்று மேலாதிக்கம் செலுத்த முயற்சி மேற்கொண்டு வருகின்றன. அப்போது நாட்டுப்புறப் பண்பாட்டு மரபு எதிர்ப்புப் பண்பாட்டு மரபாகின்றது* (1998:43)" என்கிறார்.

'சிறுதெய்வம்', 'பெருந்தெய்வம்' என்ற கலைச் சொல்லாக்கத்தினை இக்கால ஆய்வாளர்கள் ஏற்றுக்கொள்வதில்லை. அவைகளின் மீது விமர்சனங்கள் முன் வைக்கப்படுகின்றன. 'சிறு', 'பெரு' என்ற அடைகள் வழிபாட்டில் தாழ்ந்த, உயர்ந்த என்ற பொருளினைத் தருவதாக உள்ளன. வழிபாட்டில் இவ்வாறான ஏற்றத்தாழ்வுகள் எவையும் கிடையாது. ஆகவே சிறு, பெரு என்ற சொற்கள் ஏற்புடையதன்று என்பது அவர்கள் கூற்று. இதனால் சிறுதெய்வத்தைக் குறிக்க தற்போது 'நாட்டார்தெய்வங்கள்', 'நாட்டுப்புறத்தெய்வங்கள்', 'சனங்களின்சாமிகள்', 'கிராமத்தெய்வங்கள்' என்ற சொற்கள் பயன்படுத்தப்பெறுகின்றன. பெருங்கோயிலைக் குறிப்பதற்கான

மாற்றுச்சொல் இன்னும் வழக்கத்தில் வரவில்லை என்பதால் இவ்வாய்விலும் பெருங்கோயில் என்னும் சொல்லே பயன்படுத்தப்படுகிறது.

பெருங்கோயில்கள் அரசர்கள், தளபதிகள் ஆகியோரின் கொடைகளால் கட்டப்பட்டன. பின்னர் அவை கலைக்கூடம், கல்விச்சாலை, நீதிமன்றம் எனப் பல பரிமாணங்களில் வளர்ச்சி பெற்றன. *"பெருங்கோயில்களின் பொருளாதாரச் செயல்பாடுகளே அச்சமூகத்தின் பிற பொருளாதாரச் செயல்பாடுகளுக்கு அடிப்படையாக விளங்கின. பெருங்கோயில்கள் கடன்கொடுப்பவராக, வேலைவாய்ப்பளிப்பவராக, வங்கிகளாக, நிலப்பிரபுவாக, நுகர்வோராக, வரிவசூலிப்பவராக, வேளாண் உற்பத்தியின் மையமாகச் செயல்பட்டன"* (David Ludden:2005:33). இத்தகைய பண்புகளைக் கொண்ட பெருங்கோயில் என்ற நிறுவனம் தான் கொண்டிருந்த அரசதிகாரத்தின் வழியாக அடித்தட்டு மக்களின் வாழ்வியல் நடைமுறைகளில் கட்டுப்பாடுகளை விதித்திருந்தது. இப்பெருங்கோயில் குறித்து கதைகள், பழமரபுக்கதைகள், தலபுராணங்கள், சொல்லடைகள், நம்பிக்கைகள், பழமொழிகள் எனப் பல்வேறு வாய்மொழி வழக்காறுகளை மக்கள் கொண்டுள்ளனர். இதனால் கோயில்கள் தமிழ்ச் சமூகத்தின் வரலாறு, பண்பாடு ஆகியவற்றை வெளிப்படுத்தும் கூறுகளில் முதன்மையானவையாக விளங்குகின்றன.

பெருங்கோயில்களில் நிகழ்த்தப்படும் சடங்குகளும், திருவிழாக்களும் எல்லாத் தலங்களிலும் ஒன்றுபோல் நிகழ்த்தப்படுவதில்லை. ஒவ்வொரு கோயிலிலும் பொதுத்தன்மையான சடங்குகளுடன் தனித்தன்மையுடைய சில சடங்குகளும் நிகழ்த்தப்படுகின்றன. இந்தத் தனித்தன்மையான சடங்குகளை 'உள்ளூர் மரபுகள்' எனலாம். கோயில்களின் உள்ளூர்த் தன்மை குறித்த ஆய்வுகள் பெரும்பாலும் இல்லை என்றே கூறலாம். உள்ளூர் மரபுகளின் முக்கியத்துவத்தை வெளிக்கொணரும் வகையில் இவ்வாய்வு அமைகின்றது.

**ஆய்வுத்தலைப்பு:**

திருநெல்வேலி, தூத்துக்குடி ஆகிய இருமாவட்டங்களும் ஆறுகள் பாயும் நிலப்பகுதிகளாகும். தாமிரபரணி, சிற்றாறு, நம்பியாறு ஆகியன இங்கு பாயும் முக்கியமான ஆறுகளாகும். இவ்வாற்றங்கரை ஊர்களில் சைவ, வைணவக் கோயில்கள் அமைந்துள்ளன. இப்பெருங்கோயில்களின் தெய்வப்பெயர்கள், சடங்குகள், புராணங்கள், அடியவர்களுக்கும் கோயில்களுக்கும் இடையிலான உறவு குறித்து இவ்வாய்வு ஆராய்கின்றது. இதனைச் சுட்டிக்காட்டும் விதமாக இவ்வாய்விற்குப் **"பெருந்தெய்வக் கோயில்களும் உள்ளூர் மரபுகளும்"** *(திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்கள்)* எனத் தலைப்பிடப்பட்டுள்ளது.

**கலைச்சொல்லாக்க வரையறைகள்**

ஆய்வேட்டில் பயன்படுத்தப்படும் சில கலைச்சொற்கள் அதன் தெளிவிற்காக இங்கு வரையறுக்கப்படுகின்றன.

**பெருந்தெய்வக்கோயில்**

பெருந்தெய்வக்கோயில்கள் ஆகமநெறியிலான சடங்குகளும், திருவிழாக்களும் நடத்தப்படுகின்றன. இங்குள்ள தெய்வங்கள் பிராமணர்களால் பூசைசெய்யப்படுகின்றன. இக்கோயில்களில் இரத்தப்பலி தவிர்க்கப்பட்டு, தெய்வங்களுக்குச் சைவஉணவுகளே படைக்கப்படுகின்றன. இங்கு ஆண்டிற்கு ஒருமுறை அல்லது இருமுறை 10, 11 நாள் திருவிழாக்கள் நடத்தப்படுகின்றன. இவை சொத்துடைமை நிறுவனங்களாகவும், ஊரின் வெளிப்பங்கீட்டிற்குரிய காரணியாகவும் அமைகின்றன.

**ஆகமநெறிகள்**

'ஆகமநெறிகள்' என்பன கோயில்களின் கட்டடஅமைப்பு, சடங்கு

நிகழ்த்து முறைகள், தெய்வ உருவஅளவீடுகள் ஆகியன பற்றிய பனுவல்களாகும். *"பழமை மிகுந்த ஆகமங்கள் மூன்றாவது நூற்றாண்டிலிருந்து ஏழாம் நூற்றாண்டு வரையிலான காலத்தைச் சார்ந்தவை"* (சி.ஜே.புல்லர் 1999:172) ஆகும். ஆகம நூல்கள் எதுவும் நமக்கு முழுமையாகக் கிடைக்கவில்லை. ஆகமங்களைப் பட்டியலிடுவதிலும் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. சைவக்கோயில்களில் 'சிவ ஆகமநெறிகளும்', வைணவக்கோயில்களில் 'வைணவ ஆகமநெறிகளும்' பின்பற்றப்படுகின்றன.

சைவ ஆகமநெறிகள் இருபத்தெட்டு என்கிறார் ஆறுமுக நாவலர். அவை *"காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அஜிதம், தீப்தம், குஸ்மம், ஸஹஸ்ரம், அம்சுமான், சுப்ரபேதம், விஜயம், நிச்வாசம், சுவாயம்புவம், அநலம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், பிம்பம், ப்ரோத்கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேச்வரம், கிரணம், வாதுளம் ஆகியன. இவை இறைவனின் ஐந்து முகங்களிலிருந்து தோன்றின"* (1999:7). இந்த ஆகமநெறிகள் இருபத்தெட்டும் 'மூல ஆகமங்கள்' என்று சொல்லப்படுகின்றன.

வைணவ ஆகமநெறிகள் 'வைகானசம்', 'பாஞ்சராத்திரம்' என இரண்டாகும். இவ்விரண்டில் ஏதேனும் ஒன்று வைணவக்கோயில்களில் பின்பற்றப்படுகின்றது. *"வைகானசம், பாஞ்சராத்திரம் ஆகிய இரண்டும் வேறுபட்ட நடைமுறைகளைக் கொண்டுள்ளன. அந்தந்தக் கோயில்களில் அந்த நபரே அனுமதிக்கப்படுவார். இவற்றில் மாற்றம் ஏற்பட்டால் 'பிராயசித்தம்" என்னும் சடங்கு செய்யவேண்டும்'* என்கிறார் எம்.எஸ். ரமேஷ்(2000:50). மேலும் அவர் இரண்டு ஆகமங்களுக்கிடையிலான வேறுபாட்டையும் அட்டவணைப்படுத்தியுள்ளார்.

**பிராமணப் பணியாளர்கள்**

பெருங்கோயிலின் பண்புக்கூறுகளில் மற்றொன்று அவை பிராமணர்களால் பூசை செய்யப்படுவதாகும். சைவக்கோயில்களில் சிவப்பிராமணர்களும், வைணவக்கோயில்களில் வைணவப் பிராமணர்களும் பூசை செய்கின்றனர். மடைப்பள்ளி, பரிசாரகர் பணிக்கும் பிராமணர்களே நியமிக்கப்படுகின்றனர்.

**திருவிழாக்கள்**

தமிழகத்துச் சைவ, வைணவக் கோயில்களில் ஆகம விதிகளின் அடிப்படையில் நாள்தோறும், வாரம், மாதம், ஆண்டு ஆகிய கால இடைவெளியில் சடங்குகளும், திருவிழாக்களும் நடத்தப்படுகின்றன. வருவாய் நிறைந்த கோயில்களில் பெரும்பாலும் ஆண்டுக்கு ஒருமுறை அல்லது இருமுறை 9, 10, 11 நாள் கொண்ட பெருந்திருவிழாக்கள் நடத்தப்படுகின்றன. இவற்றுள் குறிப்பிடத்தகுந்தது தேர்த்திருவிழாவாகும். திருவிழாக்களின் ஒவ்வொரு நிகழ்விற்கும் கட்டளைத்தாரர்கள் நிரந்தரமாக நியமிக்கப்பட்டுள்ளனர். இத்திருவிழாக்கள் பெரும்பாலும் மன்னர் ஆட்சிக்காலத்தில் ஏற்படுத்தப்பட்டவையாம். திருவிழாவின் போது தெய்வங்கள் 'வீதி உலா' என்னும் பெயரில் மாடவீதி அல்லது தேர்வீதிக்குச் செல்கின்றன. சில திருவிழாக்களில் நீண்ட தொலைவிற்குப் பயணம் செய்வதுமுண்டு.

**உணவு முறைகள்**

இக்கோயில்களில் மேற்சாதியாரின் உணவு முறையே கடைப்பிடிக்கப்படுகின்றன. கோயில்களில் சில உணவுகள் சேர்க்கப்படுகின்றன, சில தவிர்க்கப்படுகின்றன. உணவினை மடைப்பள்ளியில்

ஆக்குவதற்கும் அதனைக் கருவறைக்கு எடுத்துச் செல்வதற்கும் வரையறுக்கப்பட்ட பணியாளர்கள் உள்ளனர்.

**சொத்துடைமை நிறுவனம்**

பெருங்கோயில்கள் கருவறை முதல் மதிற்சுவர் வரையிலான பெரிய கட்டடங்கள், கோபுரங்கள், திருவிழா மண்டபங்கள், உலாவாகனங்கள் ஆகியனவற்றைக் கொண்டுள்ளன. இவை அரசர்கள், தளபதிகள், அமைச்சர்கள் ஆகிய அரசதிகாரிகளின் கொடைகளால் கட்டப்பட்டனவாகும். பெருங்கோயில்கள் விளை நிலங்களாக, கால்நடைகளாக, பொன் அணிகலன்களாக, பொற்காசுகளாக, பண்டபாத்திரங்களாகச் சொத்துக்களைக் கொண்டுள்ளன. ஆகவே கோயில்களைச் 'சொத்துடைமை நிறுவனங்கள்' எனலாம். இந்தச் சொத்துடைமைகளில் முதன்மையானது நிலம் என்பதால் இவற்றை 'நிலவுடைமை நிறுவனங்கள்' எனவும் அழைக்கலாம்.

**வெளிப்பங்கீடு (Space Distribution)**

தமிழகத்தின் ஊரமைப்புப் பண்புகளில் ஒன்று, அவை சாதியை மையமாகக் கொண்ட குடியிருப்புக்களைக் கொண்டிருப்பதாகும். இங்கு, பெருங்கோயிலை மையமாகக் கொண்டு ஊர் பங்கிடப்பட்டுக் குடிமக்களுக்கு வழங்கப்பட்டுள்ளது. *"கோயில் ஊரின் மையத்தில் இருக்கும். கோயிலைச்சுற்றிய முதல் தெருவில் பார்ப்பனரும் (அக்கிரகாரம்) அதற்கு அடுத்தடுத்த தெருக்களில் பார்ப்பனரல்லாத உயர் சாதியினரும் இடைநிலைச் சாதியினரும் தத்தம் சாதியப் பாரம்பரியப் படிநிலை வரிசையில் குடியிருப்பர். ஊருக்கு வெளியே சேரியில் தாழ்த்தப்பட்டோர் குடியிருப்புகள் உண்டு"* (கோ.கேசவன்:1997:14). இதனை மேலும் ஆழ்ந்து பார்க்கும்போது விரிவான ஊரமைப்பு முறை கிடைக்கின்றது. கோயிலுக்கும் உயர்சாதியார்

வாழும் குடியிருப்புகளுக்கும் இடைப்பட்ட 'முடுக்கு' அல்லது 'சந்து' என அழைக்கப்படுகின்ற பகுதிகளில் இசைக்கருவிகள் வாசிக்கும் 'இசை வேளாளர்', கோயிலின் நந்தவனப் பணிசெய்யும் 'பண்டாரம்' போன்ற சேவைச்சாதியார் வாழ்கின்றனர். இதனை அடுத்த பகுதியில் இடைநிலைச் சாதியார் வாழ்கின்றனர். இதனை அடுத்து ஆறு, கால்வாய், குளம் போன்ற நீர் நிலைகள் அமைந்துள்ளன. இந்த நீர் நிலைகளை அடுத்து வயல்வெளிகளை ஒட்டி தாழ்த்தப்பட்டோரான பள்ளர், பறையர் சாதியினர் வாழ்கின்றனர். இது திருநெல்வேலி மாவட்டத்து ஊர் என்ற வெளியின் பங்கீட்டு முறையாகும். கால ஓட்டத்தில் இவற்றில் மாற்றங்கள் நிகழ்ந்திருப்பினும் நிலை மாறிய கிராமங்களில் இவற்றின் எச்சங்களை இன்றும் காணமுடிகின்றது.

**இலக்கியங்கள்**

பெருங்கோயில்கள் தமக்கென இலக்கியங்களைக் கொண்டுள்ளன. அவற்றுள் முதன்மையானது தலபுராணமாகும். அவை இறைவன் தலத்தில் தோன்றிய முறை, அதற்கான காரணம், அவனது திருவிளையாடல்கள் ஆகியனவற்றைப் பேசுகின்றன. இவை சடங்காகவும் கோயில்களில் நிகழ்த்திக்காட்டப்படுகின்றன. கோயில்களில் சில அத்தலத்திற்கு மட்டுமே உரிமையுடைய சிற்றிலக்கிய வகைகளைக் கொண்டுள்ளன. ஆழ்வார் திருநகரி, ஆழ்வார்கோயில் (நம்மாழ்வார் திருத்தாலாட்டு, ஸ்ரீசடகோபன் சந்திரகலா மாலை, திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக்குறம், நம்மாழ்வார் பிள்ளைத்தமிழ்), திருக்கோளூர் வைத்தமாநிதி பெருமாள் கோயில் (திருக்கோளூர்ப் பெண்பிள்ளை இரகசியம்), நெல்லையப்பர் கோயில் (காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்), திருவைகுண்டம் கள்ளப்பிரான கோயில்(திருவைகுண்ட நாதன் பிள்ளைத்தமிழ்), துலைவில்லிமங்கலம் (தேவர்பிரான் சந்திரகலா மாலை), தென்திருப்பேரை மகரநெடுங்குழைக்காதர்

கோயில் (குழைக்காதர் திருப்பணிமாலை), பெருங்குளம் மாயக்கூத்தன் கோயில் (மாயக்கூத்தன் ஊஞ்சல் பாடல்கள்) என்பவை போல சிற்றிலக்கியத்தைக் கொண்டுள்ளன. இவ்விலக்கியங்கள் இறைவன் முன்னால் வாசிக்கப்படுகின்றன அல்லது பாடப்படுகின்றன. இக்கோயில்களில் சடங்குகளின் போது தோல், காற்று, கம்பி இசைக்கருவிகள் வாசிக்கப்படுகின்றன, நாடகங்கள் நிகழ்த்தப்படுகின்றன. இதன் மூலம் இயல், இசை, நாடகம் ஆகிய கலைகளோடு கோயில்கள் தொடர்பு கொண்டுள்ள முறையினை அறியலாம்.

மேற்குறித்த பண்புகளைக் கொண்டுள்ள கோயில்களைப் பெருந்தெய்வக் கோயில்கள் என வரையறை செய்யலாம். பெருந்தெய்வக்கோயில் என்ற சொல் இனி, இவ்வாய்வில் **'பெருங்கோயில்'** என்றே பயன்படுத்தப்படுகின்றது.

**உள்ளூர் மரபுகள்**

இவ்வாய்வேட்டில் பயன்படுத்தப்படும் மற்றொரு கலைச்சொல் 'உள்ளூர் மரபு' என்பதாகும். 'Local' என்ற ஆங்கிலச் சொல்லிற்கு இணையாக 'உள்ளூர்' என்ற சொல் தமிழில் பயன்படுத்தப்படுகின்றது. ஒரு குறிப்பிட்ட பண்பாட்டு எல்லைக்குள் வாழ்கின்ற மக்களுக்கு மட்டுமே உரியதாக அமைவதால் 'உள்ளூர்' எனக் குறிக்கப்படுகின்றது. *"தங்களுக்குள் பண்பாட்டினைப் பரிமாறிக்கொள்ளும், ஒரு குறிப்பிட்ட கடவுளை வழிபடும் மக்களுக்கிடையில் பெருங்கோயில்கள் சமூகக்குழு, சமூகவெளி என்ற உணர்வை ஏற்படுத்துகின்றன அல்லது அதற்கான எல்லையாக அமைகின்றன"* (1985:454) எனப் பெருங்கோயில் பண்பாட்டு எல்லை ஒன்றை உருவாக்குவதை பர்டன் ஸ்டெயின் (Burton Stein) கூறுகிறார்.

'உள்ளூர்' என்பது பண்பாடு சார்ந்த வரையறையாகும். இது அரசு நிர்வாக வசதிக்காக வகுக்கப்பட்டுள்ள வட்டாரம் (தாலுகா), பேரூராட்சி, ஊராட்சி, மாநகராட்சி போன்று நிலம் சார்ந்தது அன்று. உள்ளூர் என்பது சில நேரங்களில் ஒரு கிராமம் அல்லது நகரமாக இருக்கலாம். இவற்றின் எல்லைகள் பெரும்பாலும் அடுத்து அமைந்துள்ள பெருங்கோயிலின் எல்லைகளாம். அதாவது பெருங்கோயில் குறித்து ஒத்த கருத்துக்களையும் வழக்கத்தையும் கொண்டுள்ள மக்கள் வாழ்கின்ற பகுதியை 'உள்ளூர்' எனலாம்.

தமிழகத்துச் சைவ, வைணவக் கோயில்களில் ஆகம விதிகளின் அடிப்படையிலான சடங்குகளும் திருவிழாக்களும் நடத்தப்படுகின்றன. அவற்றுடன் ஒவ்வொரு கோயிலிலும் சில தனித்தன்மையான சடங்குகளும் பல நூற்றாண்டுகளாக நிகழ்த்தப்படுகின்றன. இவை அக்கோயில் மட்டும் நிகழ்த்தப்படுவனவாகும். இந்தத் தனித்தன்மையான கூறுகளே 'உள்ளூர் மரபுகள்' என அழைக்கப்படுகின்றன. இது தெய்வப்பெயராக, சடங்கியல் நடைமுறைகளாக, திருவிழாவின் தனித்தன்மையான நிகழ்வுகளாக, நிகழ்வுகள் சார்ந்த கதையாடல்களாக இருக்கலாம்

உள்ளூர் மரபினை ஒரு குறிப்பிட்ட நில எல்லையிலுள்ள அடியவர்கள் மட்டுமே அறிந்து உணர்வுகளில் ஏந்தியிருப்பர். உள்ளூர் மரபுகளின் முதல் படியாகத் தெய்வப்பெயரிடுதலைக் குறிப்பிடலாம் என்கிறார் சி.ஜே.புல்லர். *"சிவனுடைய உருவங்கள் அல்லது மூர்த்திகளைப் பொதுவாக இரண்டு பெருவகையாகப் பிரிக்கலாம். புராணங்களில் தெளிவாக வெளிப்படுத்தக்கூடிய பைரவர், பிக்சாடனர், சந்திரசேகரர், நடராசர் போன்ற பல உருவங்கள், இது முதல் வகையாகும். சிவபெருமானுடைய இரண்டாவது உருவவகைகள் உள்ளூர்க் கோயில்களில் மட்டும் வெளிப்படுத்தப் பட்டவையாகும். அதாவது ஒவ்வொரு கோயிலிலும்*

*சிவனுக்குத் தனிப்பெயர் உண்டு"* (1999:10). இதே கருத்தினைத் தமிழகச் சைவக்கோயில்களின் தலபுராணங்களை ஆராய்ந்த டேவிட் டீன் சுல்மன் (David Dean Shulman) பின்வருமாறு பதிவு செய்கிறார்.

*"ஒவ்வொரு கோயிலுக்கும் தனிப்பட்ட 'ஸ்தலபுராணம்' அல்லது புராணக்கதை உண்டு. இது சிவனை அங்கு ஏன் வணங்குகிறார்கள் என்றும் அவருடைய தனிக் குணங்கள் என்னவென்றும் விவரமாக எடுத்துரைக்கின்றது. இந்தப் புராணக்கதைகள் எல்லாவற்றையும் ஒன்றாகப் பார்க்கும் போது ஒரு நிரந்தரக்கேள்வி எழுகின்றது. உலகளாவிய சிவன் எவ்வாறு ஒரே நேரத்தில் தனித்துவமான வெவ்வேறு உள்ளூர் வடிவங்களைப் பெற்றிருக்கிறார்"* (1980:41). இந்தக் கேள்விக்கு விடையளிக்கும் விதமாக இவ்வாய்வு அமைகின்றது.

## மரபு

*"மரபு என்ற கருத்து பாண்பாடு, அறிவியல், கலை, கல்வி, சட்டம், அரசியல், சமயம் ஆகிய துறைகளில் பயன்படுத்தப்படுகின்றது. சமயத்துறையில் இது பாடகர்கள், நூல்கள், சமயச்சடங்காளர்கள், நிறுவனங்கள் ஆகியவை மூலம் இறைநம்பிக்கைகள், சடங்குவிதிகள் ஆகியவை ஒரு தலைமுறையிலிருந்து அடுத்தத் தலைமுறைக்கு எடுத்துச் செல்லப்படுவதாகும். இந்தமரபுகள் பேச்சு அல்லது எழுதப்பட்டு வாய்மொழி சார்ந்தும் சைகைகள், உருவப்படங்கள் போன்று வாய்மொழிசாராமலும் எடுத்துச்செல்லப்படுகின்றன"* (The Encyclopedia of Religion Vol XV: 60).

'மரபு' என்பது பலஆண்டுகளாகப் பின்பற்றப்படும் செயல் எனப் பொருள் தருவதாகும். கோயில்களில் விழாக்களும் சடங்குகளும் பல நூற்றாண்டுகளாகப் பின்பற்றப்பட்டு வருவதால் அவை மரபுகள் என அழைக்கப்படுகின்றன. களப்பகுதிகளில் அமைந்துள்ள கோயில்கள் கி.பி

7ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி 13ஆம் நூற்றாண்டு வரையினதான காலகட்டத்தில் கட்டப்பட்டவையாகும். திருநெல்வேலி, குற்றாலம் சிவத்தலங்கள் சம்பந்தரால் பாடல்பெற்றவை ஆகும். ஆகவே அதன் காலத்தைச் சம்பந்தரின் காலமான கி.பி ஏழாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாகக் கருதலாம். *"நெல்லையப்பர் கோயிலின் தோற்றமும், மற்ற பழங்கோயில்களைப் போலவே, ஒரு புதிராகவே உள்ளது. சம்பந்தர் பாடிய பதிகம் ஒன்றைக் கொண்டு, இக்கோயில் கி.பி ஏழாம் நூற்றாண்டில் இருந்தது, இது 1300 ஆண்டுகளாகப் படிப்படியாக வளர்ச்சி பெற்று வந்தது எனலாம்"* (உமாமகேசுவரி:1990:58).

*"மன்னார்கோயில் இராசகோபாலசுவாமி கோயிலில் இக்கோயில் கட்டப்பட்டது தொடர்பான நேரிடையான செய்தி தரும் கல்வெட்டுக்களும் இக்கோயிலுக்கு நிவந்தங்கள் அளிக்கபட்டமை கூறும் கல்வெட்டுக்களும் இடன்பெற்றுள்ளன. அதன்படி சோழப்பேரரசர் இராசேந்திரசோழனது இருபத்திநான்காவது ஆட்சியாண்டில் (கி.பி 1036) சேரமானார் இராசசிம்மனால் இக்கோயில் கட்டுவிக்கப்பட்டது என்றும், இக்கோயிலுக்கு இராசேந்திரனது பெயர் இடப்பட்டு 'இராசேந்திர விண்ணகரம்' என்றும் அழைக்கப்பட்டது"* என்கிறார் எல்.மணிவண்ணன்(1999:27). ஆய்வுப்பகுதியிலுள்ள கோயில்களின் காலத்தை நோக்கும் போது அவை அதிகபட்சமாக 1300 ஆண்டுகள் முதல் குறைந்த பட்சமாக 700 ஆண்டுகள் வரையிலான காலப் பழமையினைக் கொண்டவையாகும். எனவே இங்குப் பேசப்படும் உள்ளூர் மரபுகள் 700 ஆண்டு முதல் 1300 ஆண்டு காலம் வரையினதான பழமையைக் கொண்டவையாம்.

**ஆய்வுப்பொருள்**

திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்களில் அமைந்துள்ள சைவ, வைணவக்கோயில்கள் மட்டும் ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

குறிப்பாகத் தாமிரபரணி, சிற்றாறு, கடனையாறு, நம்பியாறு ஆகிய ஆறுகளின் நதிக்கரைகளில் கட்டப்பட்டுள்ள பெருங்கோயில்களின் தெய்வப்பெயர்கள், அங்குள்ள சடங்குமுறைகளில் காணப்படும் உள்ளூர் மரபுகள், அம்மரபுகள் குறித்த கதையாடல்கள், பிறவழகாறுகள் ஆகியன ஆய்வுப் பொருளாகின்றன.

**ஆய்வு நோக்கம்**

தமிழகம் சங்ககாலத்தில் பல்வேறு பகுதிகளாக இனக்குழுத் தலைவர்களால் ஆளப்பட்டது. பின்னர் அது மைய அரசாக(state) மாறியவுடன் சேர, சோழ, பாண்டிய வேந்தர்களாலும் வேற்றுமொழி மன்னர்களாலும் ஆட்சி செய்யப்பட்டது. இம்மன்னர்கள் தங்கள் ஆட்சிக்காலத்தில் அரண்மனைகளோடு கோயில்களையும் கட்டினர். அரசர்கள், அரசதிகாரிகள், தளபதிகள், அமைச்சர்கள் ஆகியோர் தம்விருப்பப்படிக் கட்டி அரசதிகாரத்துடன் வாழ்ந்த மாளிகைகள் தமிழகத்தில் பெரும்பாலும் சுவடற்று அழிந்து விட்டன. கங்கை கொண்ட சோழபுரத்தில் மட்டும் சோழர்களின் அரண்மனை இருந்த இடம் ஒன்று அண்மையில் தொல்லியல் ஆய்வாளர்களால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அரண்மனை இருந்த இடங்கள் இன்று ‘மாளிகைமேடு’, ‘பாங்(பாழ்ங்)கோட்டைமேடு’ என மக்களால் அழைக்கப்படுவதைக் காணமுடிகின்றது. இவற்றில் அழிந்த கோட்டையின் சுவடுகள் மட்டும் அகழாய்வின்போது கிடைக்கின்றன. அதாவது அரசர்களின் பண்பாட்டினை விளக்கும் கட்டடத் தடையங்கள் சிதைந்தனவாகவே நமக்குக் கிடைக்கின்றன. அதுவும் அரிதாகவே கிடைக்கின்றன.

கோயிலோடு நெருங்கிய தொடர்பு கொண்டு வாழ்ந்தவர்கள் பிராமணர்கள். தமிழகத்தின் தென்மாவட்டங்களில் இவர்கள் செழிப்புடன்

வாழ்ந்த தெருக்களும், கிராமங்களும் இன்று பெரும்பாலும் அழிந்து விட்டன. கோயிலை மையமாகக் கொண்ட பிராமணக் குடியிருப்புகளில் (பிறசாதியார் நுழைய அனுமதி மறுக்கப்பட்ட பகுதிகளில்) தற்போது பிராமணர்அல்லாதோர் குடியேறியுள்ளனர். கட்டட அமைப்புக்கள் மாற்றியமைக்கப்பட்டுள்ளன. கட்டட அமைப்புகளும் பண்பாட்டில் அவை கொண்டிருந்த கருத்துக்களும், விழுமியங்களும் சிதைந்தும், மாறியும், அழிந்தும் வருகின்றன. அதாவது அரசர்கள் வாழ்ந்த அரண்மனைகளும் அவர்களால் ஏற்படுத்தப்பட்ட பிராமணக்குடியிருப்புகளும் அழிந்துவிட்டன. இவர்களால் கட்டப்பட்ட பெருங்கோயில்களின் நிலை யாது? என்பது கேள்வியாக நிற்கின்றது.

அரசர்கள், அமைச்சர்களின் கொடையால் கட்டப்பட்டுப் பிராமணர்களால் பூசை செய்யப்பட்டு அரசதிகாரத்துடன் வாழ்ந்த பெருங்கோயில்கள் என்ற கட்டடஅமைப்புகளும், அவற்றின் அன்றாடச் செயல்பாடுகளும், அவை கொண்டுள்ள கருத்துக்களும் பலநூறு ஆண்டுகளைத் தாண்டி இன்று வரை வாழ்ந்து வருகின்றன. இவற்றில் மாற்றங்கள் ஏற்பட்டிருப்பினும் அவை தவிர்க்கக்கூடிய அளவினதாகவே உள்ளன. தமது பண்புக்கூறுகளில் பெரும்பங்கினை அழியாமல் பாதுகாத்து வாழ்கின்றன. இந்த உயிர் வாழ்விற்குத் துணை செய்யும் காரணிகளைக் கண்டறிவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வின்கருதுகோள்**

பெருங்கோயில்கள் ஆகமநெறிகளுக்கு உட்பட்ட கட்டடஅமைப்பு, தெய்வஉருவங்கள், நாள்சடங்குகள், திருவிழாக்கள் ஆகியவற்றையே கொண்டுள்ளன. இத்துடன் இங்கு ஆகம நெறிகளில் குறிப்பிடப்படாத உள்ளூர் மரபுச் சடங்குகளும், திருவிழாக்களும் நிகழ்த்தப்படுகின்றன.

இது குறித்து அந்நிலப்பகுதி மக்கள் பல்வேறு நம்பிக்கைகள், சொல்லாடல்கள், கதையாடல்கள், விழுமியங்கள் ஆகியவற்றைக் கொண்டுள்ளனர்.

கோயில், உள்ளூர் மரபு, மக்கள் ஆகிய மூன்றிற்கும் இடையில் நெருங்கிய உறவுகள் காணப்படுகின்றன. இந்த உறவுகளே கோயில் என்ற நிறுவனம் உயிருடன் வாழ வழிவகுக்கின்றனவா? என ஆராய்ந்துகாண முயல்வது இவ்வாய்வின் நோக்கமாகும். பெருந்தெய்வக் கோயில்கள் உள்ளூர் மரபுகளை நடைமுறைப் படுத்துவதால் மட்டுமே இன்றும் நிலை பெற்று வாழ்கின்றன என்பதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வுக்களம்**

தமிழகத்தில் சைவ, வைணவப் பெருங்கோயில்கள் சில ஊர்களில் நிறையக் காணப்படுகின்றன. காஞ்சிபுரம் 'கோயில்மாநகரம்' என அழைக்கப்படுகின்றது. ஆய்வுப்பகுதியில் ஐந்து பெருங்கோயில்களைக் கொண்டுள்ள சேரன்மாதேவி 'கோயில் நகரம்' எனச் சுட்டப்படுகின்றது. ஆய்வுத்துறையில் கோயில் பற்றிய ஆய்வுகள் பெருமளவில் நடைபெற்றுள்ளன. இவை கோயில்களின் ஏதேனும் ஒரு கூறு (கலை, கட்டஅமைப்பு) பற்றிய ஆய்வுகளாக வெளிவந்துள்ளன. தனியொரு கோயிலை மட்டும் ஆய்வு செய்வது என்பது அக்கோயிலின் கட்டட அமைப்பு, சடங்கியல், திருவிழாக்கள் போன்றவற்றை விவரித்தலாக உள்ளது. தமிழியல், நாட்டார் வழக்காற்றியல், சமயவியல், தொல்லியல், வரலாறு ஆகிய கல்வித் துறையினர் கோயில் ஆய்வுகளில் ஈடுபடுகின்றனர்.

தொல்லியல் ஆய்வாளர்களின் முயற்சியால் கோயில் கல்வெட்டினைப் படியெடுத்துத் 'தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகள் (SII - South Indian Inscription)', 'Annual Report on Epigraphy ' ஆகியன வெளிவந்துள்ளன.

மாவட்ட அளவிலான தொல்லியல் கையேடுகளும், ஆண்டறிக்கைகளும் வெளிவந்துள்ளன.

இவ்வாய்வேடு திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்களில் அமைந்துள்ள பெருங்கோயில்களில் காணப்படும் உள்ளூர் மரபுகளை ஆராய்கின்றது. இப்பகுதி மன்னராட்சிக் காலத்தில் 'பாண்டி மண்டலம்' என அழைக்கப்பட்டுப் பல்வேறு சிறு நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. தற்போது இந்நிலப்பகுதி தமிழக அரசின் இரண்டு வருவாய் மாவட்டங்களாகச் செயல்பட்டுவருகின்றது. இதன் மையப்பகுதியினை 'ஆற்றங்கரை நாகரிகப்' பகுதி எனலாம். தாமிரபரணி ஆறு திருநெல்வேலி மாவட்டத்துப் பொதிகையில் தோன்றி, தூத்துக்குடி மாவட்டத்தில் புன்னைக்காயல் என்ற இடத்தில் கடலில் கலக்கின்றது. இவ்வாற்றங்கரையிலே தான் பெரும்பாலான பெருங்கோயில்கள் எழுப்பப்பட்டுள்ளன.

**ஆய்வுத்தரவுகள்**

இவ்வாய்வு களப்பணியை மையமாகக் கொண்டதாகும். இவ்வாய்வுக்கான தரவுகள் களப்பணி செய்து திரட்டப்பட்டவையாகும். இவற்றில் திருவிழாக்கள், சடங்குகளின் தரவுகள் உற்று நோக்கல் முறையில் சேகரிக்கப்பட்டன. கோயில் குறித்த நம்பிக்கைகள், கதையாடல்கள், சொல்லாடல்கள் ஆகியன பேட்டிகள் மூலம் திரட்டப்பட்டன. களப்பணித் தரவுகளே இங்கு முதல் நிலைத்தரவுகளாகக் கருதப்படுகின்றன. பிற கோயில் ஆய்வுகளிலிருந்து கிடைக்கப்பெற்ற தரவுகள் இரண்டாம் நிலைத்தரவுகளாகப் பயன்படுத்தப்பெற்றுள்ளன. கோயில்குறித்து நாளிதழ்கள், வார, மாத இதழ்கள் வெளியிடும் செய்திகளும் தரவுகளாகக் கொள்ளப்பட்டுள்ளன.

கோயில்களில் நடைபெறும் திருவிழாக்கள், சடங்கு நாட்கள், நேரம், கட்டளை ஆகியன கோயில்கள் வெளியிடும் திருவிழா அழைப்பிதழ்கள் வழியாகவும் நேரிலும் சேகரிக்கப்பட்டன. கோயில் திருவிழாக்கள், சடங்குகள் ஆகியன உற்று நோக்கல் முறையில் கள ஆய்வு செய்யப்பட்டன. உற்று நோக்கலின் போது குறிப்புகள் எழுதப்பட்டன, ஒளிப்படங்களும் எடுக்கப்பட்டன. திருவிழா குறித்த கதையாடல்கள், நம்பிக்கைகள் ஆகியன அடியவர்கள், கோயில் பணியாளர்கள் ஆகியோரைப் பேட்டி கண்டு ஒலிநாடாவில் பதிவு செய்யப்பட்டன. கோயில்களிலிருந்து எழுத்து வடிவில் தலபுராணங்கள், கோயில் திருவிழா (வருடம் முழுவதிற்குமான) அழைப்பிதழ்கள் பெறப்பட்டன. இதழ்களில் வெளியான தலபுராணச் செய்திகள், திருவிழாத் தரவுகள் ஆகியனவும் தொகுக்கப்பட்டன. ஆய்வேட்டில் MLA (Modern Language Association of America) நெறிமுறையின் படி துணைநூற்பட்டியல், அடிக்குறிப்புகள், மேற்கோள்கள் (Quotation), பிற நூல்கருத்துக்கள் எடுத்தாளப்படுகின்றன.

## ஆய்வு முன்னோடிகள்

சமூகவியல், பொருளாதாரம், வரலாறு, தமிழியல், நாட்டார் வழக்காற்றியல், தொல்லியல், சமயவியல் போன்ற கல்வித் துறையினரால் பெருங்கோயில்கள் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இவ்வாய்வுகள் அந்தந்தத் துறையினரின் கோட்பாடுகளுக்கு ஏற்ப விளக்கப்படுகின்றன. இதுவரை நடைபெற்ற கோயில் ஆய்வுகளை இரண்டு பகுதியாக இவ்வாய்வேடு பார்க்கமுற்படுகிறது. தமிழ்நாட்டுப்பகுதிகளில் இதுவரை நடைபெற்ற ஆய்வினைத் **தமிழ்நாட்டுப் பெருங்கோயில் ஆய்வுப்போக்குகள்** என்னும் முதல் பகுதியாகவும், திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்களில் நடைபெற்ற ஆய்வினை **ஆய்வுக்களப் பெருங்கோயில் ஆய்வுகள்** என்னும் இரண்டாம் பகுதியாகவும் காணலாம்.

## பகுதி ஒன்று: **தமிழ்நாட்டுப் பெருங்கோயில் ஆய்வுப்போக்குகள்**

தமிழ்நாட்டுப் பெருங்கோயில் ஆய்வுகளைத் தனிக்கோயில் ஆய்வுகள், ஒரு நிலப்பகுதியில் அமைந்துள்ள பலகோயில்களை உள்ளடக்கிய ஆய்வுகள் என இரண்டாகக் காணலாம்.

| **நூல்** | **ஆசிரியர்** |
|---|---|
| சென்னைமாவட்டக் கோயில் வரலாறு | இ.மு சுப்பிரமணியன் |
| தேவியின் திருப்பணியாளர்கள் | சி.ஜே.புல்லர் |
| அழகர்கோயில் | தொ.பரமசிவன் |
| Arjun Appadurai | Worship and Conflicts Under Colonial Rule: A South Indian Case |
| Tamil Temple Myths | David Dean Shulman |

தமிழ்நாடு அறநிலையத்துறை, 'சென்னை மாவட்டக் கோயில் வரலாறு' (இ.மு.சுப்பிரமணிய பிள்ளை.,1964) என்னும் நூலை வெளியிட்டுள்ளது. இந்நூல் சென்னை மாவட்டத்தில் அமைந்துள்ள நாற்பதுக்கு மேற்பட்ட கோயில்களின் இறைவன், இறைவி பெயர்கள், தலத்தின் இலக்கியச்செய்திகள், தலபுராணங்கள் ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றது. இந்நூல் ஆய்வு நூலாக அமையாவிட்டாலும் கோயில் குறித்த இலக்கியப்பதிவினையும் கோயில்களின் இருப்பிடத்தையும் பட்டியலிட்டுள்ளது.

சி.ஜே.புல்லரின் 'தேவியின் திருப்பணியாளர்கள்' என்ற நூல் மதுரை மீனாட்சி கோயிலின் பணியாளர்கள் மற்றும் திருவிழாவினை ஆராய்கின்றது. இது ச.நாகராஜ பிள்ளை அவர்களால் தமிழில் மொழியாக்கம் செய்யப்பட்ட நூலாகும். தொ.பரமசிவனின் 'அழகர் கோயில்', கோயிலுக்கும் அடியவர்களுக்குமான உறவினை ஆராய்கின்றது. அர்ஜுன் அப்பாதுரையின் நூல் சென்னை திருவல்லிக்கேணி பார்த்த சாரதி கோயில் பணியாளர்கள்

கோயில் உரிமைக்காக நீதிமன்றம் சென்றதை விவரிக்கின்றது. டேவிட் டீன் சுல்மனின் 'Tamil Temple Myths (Sacrifice and Divine Marriage in the South Indian Saiva Tradition)' என்ற நூல் தமிழ் நாட்டுச் சைவக் கோயில்களின் தலபுராணங்களை ஆராய்ந்து உள்ளூர் மரபுகள் என்னும் கருத்தாக்கத்தை விரிவாக விள்குகின்றது.

பகுதி இரண்டு:**ஆய்வுக்களப் பெருங்கோயில் ஆய்வுகள்**

| **நூல்** | **ஆசிரியர்** |
|---|---|
| நெல்லையப்பர் கோயில் | உமாமகேசுவரி |
| திருச்செந்தூர் முருகன் கோயில் | ந.கல்யாணசுந்தரம் |
| பாண்டிநாட்டு வைணவக்கோயில்களின் கலையும் கட்டடக்கலையும் | எல்.மணிவண்ணன் |
| Rajendra vinnagar | R.Tirumalai |

உமாமகேசுவரியின் 'நெல்லையப்பர் கோயில்' திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலின் அமைப்பினையும் சடங்குகளையும் ஆராய்கின்றது. ந.கல்யாணசுந்தரம் எழுதிய 'திருச்செந்தூர் முருகன் கோயில்' திருச்செந்தூர் கோயிலில் நடைபெறும் நாள், மாதம், வருடச் சடங்குகள், மக்கள் கோயில் குறித்துக் கொண்டுள்ள கதைகள் ஆகியனவற்றையும் கோயில் கட்டட அமைப்பையும் விளக்குகின்றது. எல்.மணிவண்ணனின் 'பாண்டிநாட்டு வைணவக்கோயில் கலையும் கட்டடக்கலையும்' என்ற நூல் தமிழகத்துத் தென்மாவட்டத்து வைணவக்கோயில்களின் கட்டட அமைப்பினை ஆராய்கின்றது. இந்நூல் கோயிலில் காணப்படும் கட்டட அமைப்பினைக் கொண்டு அதன் காலத்தை நிர்ணயிக்கின்றது. இதுவரை பேசப்பட்ட நூல்கள் யாவும் கல்வித்துறையில் குறிப்பாகத் தமிழ்த்துறையில் முனைவர்பட்ட ஆய்விற்காக நிகழ்த்தப்பட்ட

ஆய்வுகளாகும். ஆர்.திருமலையின் 'இராசேந்திர விண்ணகரம்' என்னும் ஆங்கில நூல் மன்னார்கோயில் இராசகோபால சுவாமிகோயிலின் கட்டடஅமைப்பு, கலை, நிலக்கொடைகள் ஆகியனவற்றை விளக்குகின்றது.

இவ்வாய்வுகளில் உள்ளூர் மரபுகள் குறித்த ஆய்வுகளின் முதல் நூலாகத் தொ.பரமசிவனின் 'அழகர் கோயிலை'க் குறிப்பிடலாம். இந்நூலின் 'அழகர் கோயிலும் சமுகத்தொடர்பும்', 'சித்திரைத் திருவிழாவில் நாட்டுப்புறக் கூறுகள்', 'பதினெட்டாம்படிக் கருப்பசாமி' என்ற மூன்று இயல்களில் உள்ளூர் மரபுகள் ஆராயப்பட்டுள்ளன. இந்த ஆய்வேட்டிற்குரிய முன்னோடியாக அழகர் கோயில் நூல் அமைகின்றது.

**ஆய்வேட்டின் அமைப்பு**

பெருந்தெய்வக் கோயில்களும் உள்ளூர் மரபுகளும் என்ற தலைப்பிலான இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களைக் கொண்டுள்ளது.

**முன்னுரை** என்ற பகுதியில் ஆய்வுத்தலைப்பு, ஆய்வின்கருதுகோள், ஆய்வு எல்லை, ஆய்வுக்களம், ஆய்வு நெறிமுறைகள், ஆய்வுத்தரவுகள், முன்னோடி ஆய்வுகள், ஆய்வேட்டின் அமைப்பு ஆகியனவற்றை விளக்குகின்றது. இத்தோடு ஆய்வேட்டினுள் பேசப்படும் சில சொற்களுக்கான விளக்கங்களையும், வரையறைகளையும் வழங்குகின்றது.

**தெய்வப்பெயர்களும் உள்ளூர் மரபுகளும்** என்பது முதல் இயல் ஆகும். இவ்வியல் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதல் பகுதி 'களம் அறிமுகம்' என்பதாகும். இப்பகுதியில் திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்களின் பழைய நாட்டுப்பிரிவுகள் முதலில் விளக்கப்படுகின்றன. 'தெய்வப்பெயர்களும் உள்ளூர் மரபுகளும்' என்பது

இரண்டாம் பகுதியாகும். தெய்வப்பெயர்கள் பல்வேறு வகையாகப் பகுக்கப்பட்டு அவ்வாறு பெயரிடப்பட்டதிற்கான காரணத்தை விளக்குகின்றது.

**கதையாடல்களும் உள்ளூர் மரபுகளும்** என்பது இரண்டாம் இயல் ஆகும். இவ்வியலின் முதல் பகுதியில் தலபுராணங்களின் வடிவமைப்பு விளக்கப்படுகின்றது. இரண்டாம் பகுதியில் இறைவனின் தோற்றம், திருவிளையாடல், கோயில் கட்டட அமைப்பு, சடங்கு ஆகியவை குறித்து அந்நிலப்பகுதி மக்கள் கொண்டுள்ள கதைகள், நம்பிக்கைகள் ஆகியன நாட்டார் வழக்காற்றியல் நோக்கில் ஆராயப்படுகின்றன.

**சடங்குகளும் உள்ளூர் மரபுகளும்** என்பது மூன்றாம் இயல். இவ்வியல் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதல்பகுதி 'நிலவுடைமைசார் சடங்குகள்' என்பதாகும். பெருங்கோயில்களில் நிகழ்த்தப்படும் சடங்குகளில் காணப்படும் சொத்துடைமைத் தன்மையினை இப்பகுதி விளக்குகின்றது. 'பிறவகைச் சடங்குகள்' என்பது இரண்டாம் பகுதியாகும். இதில் கோயில்களில் நிகழ்த்தப்படும் உள்ளூர்ச் சடங்குகள் விளக்கப்படுகின்றன. பெருங்கோயில்களில் நிகழ்த்தப்படும் ஆகம நெறிகளுக்கு உட்பட்ட சடங்குகளில் காணப்படும் உள்ளூர் வேறுபாட்டினையும் இப்பகுதியில் காணலாம்

**கோயில்களும் அடியவர் வாழ்வியலும்** என்ற நான்காம் இயலில் கோயில்கள் தம் அடியவர்களைத் தம்முன் நிரந்தரமாக தக்கவைத்துக் கொள்ள மேற்கொள்ளும் பண்பாட்டுச் சமரசங்களும் அடியவர்கள் தம்மை பெருங்கோயிலோடு இணைத்துக் கொள்ள மேற்கொள்ளும் செயல்பாடுகளும் விளக்கப்படுகின்றன. 'அடியவர்களுக்கு மரியாதை செய்தல்', 'நாட்டார் தெய்வத்தைத் தன் வளாகத்தில் குடியமர்த்துதல்', 'சீர்வரிசை கொடுத்தல்' ஆகியன கோயில் மேற்கொள்ளும் பண்பாட்டுச் சமரசங்களாகும்.

'மரியாதையை ஏற்றல்', 'மண்டபங்கள் ஏற்படுத்துதல்', 'இறைவனோடு உறவு முறையினை ஏற்படுத்துதல்' ஆகியன மக்கள் பெருங்கோயிலோடு தம்மை இணைக்க மேற்கொள்ளும் செயல்பாடுகளாகும்.

**முடிவுரையில்** முன் இயல்களிலிருந்து பெறப்பட்ட முடிவுகள் தொகுக்கப்பட்டு விளக்கப்படுகின்றன.

**பின்னிணைப்பு**

முடிவுரையை அடுத்த பின்னிணைப்பில் திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்களின் வரைபடங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இரண்டாவதாக இரு மாவட்டங்களின் பழைய நாட்டுப்பிரிவுகளை விளக்கும் வரைபடம் இணைக்கப்பட்டுள்ளது. பழையநாட்டுப்பிரிவுகள் அடங்கியுள்ள தற்போதைய வருவாய் வட்டங்கள் மூன்றாவதாக இணைக்கப்பட்டுள்ளன. இந்நாட்டுப்பிரிவுகளில் அடங்கியுள்ள ஊர்களையும் அதன் பழையபெயரினையும் நான்காம் பின்னிணைப்பு விளக்குகிறது. இவற்றில் பழையநாட்டுப்பிரிவுகளின் அடிப்படையில் ஊர்கள் விளக்கப்பட்டுள்ளன. ஆய்வுக் களத்தில் காணப்படும் ஊர்களும் அவற்றில் அமைந்துள்ள பெருங்கோயில்களின் தெய்வப் பெயர்கள் பின்னிணைப்பு ஐந்தில் கொடுக்கப்பட்டுள்ளன. அடுத்து முன் இயல்களில் பேசப்பட்ட தரவுகளை விளக்கும் ஒளிப்படங்கள் தரப்பட்டுள்ளன.

**இயல்-ஒன்று**

## பகுதி-ஒன்று: கள அறிமுகம்

### 1.1.1 திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டம் - நாட்டுப்பிரிவுகள்

'பாண்டி மண்டலம்' என்பது இன்றைய மதுரை, திருநெல்வேலி, தூத்துக்குடி, இராமநாதபுரம் ஆகிய மாவட்டங்களையும் புதுக்கோட்டை மாவட்டத்தின் வெள்ளாற்றுக்குத் தெற்கிலுள்ள பகுதியையும் தன்னகத்துக் கொண்டிருந்த நிலப்பரப்பாகும். இது பரந்த நிலப்பரப்பினையுடையதாக இருந்ததால் பல சிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. பாண்டி நாடு *"இரணியமுட்டநாடு, களக்குடிநாடு, குறுமறைநாடு, முரப்புநாடு, வேம்பநாடு, கீழ்களக்கூற்றம்...' என முப்பதிற்கும் மேற்பட்ட சிறுசிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இப்பகுதிகள் நாடு, கூற்றம் என்னும் பெயர்களில் அழைக்கப்பட்டன. 'சில நாடுகளையும் கூற்றங்களையும் தன்னகத்துக் கொண்டு விளங்கிய பெருநிலப்பரப்பு வளநாடு என அழைக்கப்பட்டு வந்தது"* (T.V.சதாசிவ பண்டாரத்தார்1969:169-170). *'இத்தகைய வளநாடுகள் கி.பி. ஒன்பது பத்தாம் நூற்றாண்டுகளிலும் பிற்காலங்களிலும் இருந்தன என்று தெரியவருகின்றது'* (Epigraphica Indica, Vol XXI, Ins. No. 17). *"நாடுகளின் பெயர்கள் எல்லாம் ஊர்களின் அடியாகப் பிறந்தனவாகும். கூற்றங்களின் பெயர்களும் அத்தகையவே. ஆனால் பாண்டியர்களின் இயற்பெயர்களும் சிறப்புப்பெயர்களுமே வளநாடுகளின் பெயர்களாக அமைந்திருப்பது அறியத்தக்கது"* (T.V.சதாசிவ பண்டாரத்தார்1969:170).

பாண்டி மண்டலம் கி.பி. 1021இல் முதலாம் இராசேந்திரனால் வெற்றிகொள்ளப்பட்டு நான்கு வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டது. அவை *"இராசேந்திர வளநாடு, மதுராந்தக வளநாடு, முடிகொண்டசோழ வளநாடு, உத்தமசோழ வளநாடு என்பனவாகும். இவ்வளநாடுகள் நாடு, கூற்றம், குளக்கீழ், இருக்கை, முட்டம், நாட்டாற்றுப்போக்கு"* (தமிழ்நாட்டு வரலாறு

சங்ககாலம்-அரசியல்:1998:410-411) என்னும் பெயர்களிலும் மேலும் சிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. *"நாடு என்பது பழங்கால மற்றும் இடைக்கால தமிழகத்தின் நிலப்பாகுபாடு ஆகும். இது மூதூர், சேரி, பேரூர், பட்டினம் ஆகிய குடியிருப்புகளைக் கொண்ட பகுதியாகும்"* (Dravidian Encyclopaedia:1990:). நாடு என்பது விவசாய நிலத்தைக் கொண்டுள்ள பகுதியாகும். இது காடு என்னும் சொல்லுக்கு எதிர்ச்சொல்லாகும். 'காடு' என்பதற்கு வனம் அல்லது விவசாயத்திற்குப் பயன்படாத நிலம் எனத் திராவிடச் சொற்பிறப்பியல் அகராதி (Dravidian Etimological Dictionary) பொருள் தருகிறது. *"நாடு என்பது தொண்டை மண்டலத்தில் நிலஅளவில் விவசாயமற்ற பெரிய நிலங்களையும் குறைந்த நீர் வசதிகளையுடைய பகுதியையும் கொண்டுள்ளதை சுப்பராயலுவின் தொண்டைமண்டலத்து நாட்டு வரைபடம் விளக்குகிறது"* என்கிறார் பர்டன் ஸ்டெயின் (1985:92).

*"நாடு என்ற பகுதியின் பரப்பளவு ஒரே சீரானதன்று. இதற்கு மலை, ஆறு, காடு போன்ற இயற்கைகள் எல்லைகளாக அமைந்திருக்கவேண்டும் என்ற கட்டாயமும் கிடையாது. சில நாடுகள் ஆற்றின் கரைகளிலும், சில சமவெளிப்பகுதிகளிலும், சில மலையடிவாரங்களிலும் இருந்துள்ளன. உதாரணமாக பாண்டி மண்டலத்துத் 'தென்வாரி நாடு' சிற்றாற்றின் இரு கரைகளிலும் அமைந்துள்ள நிலப்பகுதிகளைத் தன்னகத்துக் கொண்டுள்ளது. அதாவது நாட்டின் நடுவே ஆறு செல்வதாக உள்ளது(ஆறு நாட்டின் எல்லையாக அமையவில்லை). அதேபோன்று 'திருவழுதி நாடு' என்பது தாமிரபரணி ஆற்றின் இருகரைகளிலுமுள்ள ஊர்களைக் கொண்டுள்ள நிலப்பகுதியாகும். நாடுகளின் அடர்த்தி (எண்ணிக்கை) ஆற்றுப்பாசனப் பகுதிகளில் மிகுந்திருப்பதைக் காணமுடிகின்றது. தற்போதைய அம்பாசமுத்திரம்,*

*தென்காசி, திருவைகுண்டம் ஆகிய பகுதிகளில் நாடுகளின் எண்ணிக்கை பிறபகுதிகளை விட மிகுதியாக இருந்தன. இதனால் ஆற்றுப் பாசனம் இல்லாத பகுதிகள் குடியிருப்புக்களையும் நாட்டுப்பகுதிகளையும் பெற்றிருக்கவில்லை என்ற முடிவிற்கும் வரஇயலாது"* (ஆர்.திருமலை: 2003:09).

திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்களின் பழையநாட்டுப் பிரிவுகளைக் கல்வெட்டுகளை அடிப்படையாகக் கொண்டு காணலாம். பாண்டிமண்டலத்தின் இப்பகுதி பெரும்பிரிவு, சிறுபிரிவு என இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பெற்றிருந்தன. (தே.கோபாலன்.1997, செந்தில் செல்வக்குமரன்.1986) அப்பிரிவுகளாவன

பெரும்பிரிவுகள்

1.இராஜராஜப் பாண்டிநாடு 2.முடிகொண்ட சோழவளநாடு

3.மதுராந்தக வளநாடு 4.உத்தமசோழ வளநாடு

சிறுபிரிவுகள்

| | | |
|---|---|---|
| 1.கீழ்வேம்ப நாடு | 2.மேல்வேம்ப நாடு | 3.வடஆரி நாடு |
| 4.தென்ஆரி நாடு | 5.முள்ளி நாடு | 6.குறுமறை நாடு |
| 7.களக்குடி நாடு | 8.ஆண்ம நாடு | 9.தென்வார நாடு |
| 10.கீழ்களக்கூற்றம் | 11.கோநாடு | 12.வைகுண்டநாடு |
| 13.நெச்(ற்)சுரநாடு | 14.திருவழுதி வளநாடு | 15.முரப்புநாடு |
| 16.அமிதகுண வளநாடு | 17.மானவீரவளநாடு | 18.பராந்தக வளநாடு |

19.குடநாடு 20.சூரங்குடி நாடு 21.வெண்பைக்குடி நாடு

என்பனவாகும்.

இந்நாட்டுப் பிரிவுகளில் மதுராந்தக வளநாடு, முடிகொண்ட சோழவளநாடு, உத்தமசோழ வளநாடு ஆகிய மூன்று பெருநாட்டுப் பிரிவுகளும் நெற்சுரநாடு, திருவழுதிவளநாடு, முரப்புநாடு, அமிதகுணவளநாடு, மானவீர வளநாடு, பராந்தகவளநாடு, குடநாடு, கீழ்களக்கூற்றம், சூரங்குடிநாடு, வெண்பைக்குடிநாடு ஆகிய சிறு நாட்டுப் பிரிவுகளும் இன்றைய தூத்துக்குடி மாவட்டத்தில் அடங்குகின்றன. எஞ்சியவை திருநெல்வேலி மாவட்டத்தில் அடங்குகின்றன.

வெளியான மற்றும் வெளியிடப்படாத கல்வெட்டுச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டு பாண்டிநாட்டுப் பிரிவுகளை ஆர்.திருமலை தனது பாண்டிய நகரியங்கள் (pandyan Township) என்ற நூலில் விரிவாக அட்டவணைப்படுத்தியுள்ளார். அவற்றில் திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்களின் நாட்டுப்பிரிவுகளைப் பின்வருமாறு அட்டவணைப்படுத்துகிறார்.

| | | |
|---|---|---|
| 1.கூரிளமைநாடு | 2.வடவாரிநாடு | 3.தென்வாரிநாடு |
| 4.விடாரான விநோதவளநாடு | 5.குறுமறைநாடு | 6.முள்ளிநாடு(மேற்கு) |
| 7.முள்ளிநாடு (கிழக்கு) | 8.மேல்வேம்பநாடு | 9.கீழ்வேம்பநாடு |
| 10.களக்குடிநாடு | 11.கீழ்களக்கூற்றம் | 12.தென்கரைநாடு |
| 13.கல்லகநாடு | 14.ஆரிநாடு | 15.நெற்சுரநாடு |
| 16.மூங்குடிநாடு | 17.சூரங்குடிநாடு | 18.ஆசூர்நாடு |
| 19.ஸ்ரீவல்லவநாடு | 20.வல்லநாடு | 21.முறப்பநாடு |
| 22.பராந்தகவளநாடு | 23.திருவழுதிநாடு | 24.ஸ்ரீவல்லபவளநாடு |

| | | |
|---|---|---|
| 25.அமுதகுணவளநாடு | 26.குடநாடு | 27.மானவீரவளநாடு |
| 28.பச்சையாற்றுப்போக்கு | 29.வைகுண்டவளநாடு | 30.நாட்டாற்றுப்போக்கு |
| 31.புறத்தாயநாடு | 32.வெண்பைக்குடிநாடு | |

என்பனவாகும் (2003:21).

இந்நாட்டுப்பிரிவுகள் அமைந்துள்ள தற்போதைய வருவாய் வட்டங்களைப் (தாலுகா) பின்னிணைப்பு மூன்றில் காணலாம். நாட்டுப்பிரிவுகளில் அடங்கியிருந்த ஊர்களையும் அதன் பழைய பெயர்களையும் பின்னிணைப்பு நான்கு விளக்குகிறது.

### 1.1.2. இயற்கையமைப்பு

ஆய்வுக்களப்பகுதிகளான திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்களில் திருநெல்வேலி *"8°43' வடக்கு நிலக்குறுங்கோட்டிலும் (latitute). 77°42' கிழக்கு நிலநெடுங்கோட்டிலும்(longitude) அமைந்துள்ளது. தூத்துக்குடி 8°47' வடக்கு நிலக்குறுங்கோட்டிலும், 78°08' கிழக்கு நிலநெடுங்கோட்டிலும் அமைந்துள்ளது'''* (Multimedia Encyclopaedia :2003). *"திருநெல்வேலி (தூத்துக்குடியை உள்ளடக்கியது) மாவட்டம் தனித்த வரலாற்றினைக் கொண்டிருக்கவில்லை. அது முகமதியர்கள் வருகை வரை மதுரையுடன் இணைந்த வரலாற்றினையே கொண்டுள்ளது'* என்கிறார் ஸ்டுவர்ட் (Stuart.A.J:1879:35).

#### 1.1.2.1. ஆறுகளும் நகரங்களும்

**தாமிரபரணி**

இந்நிலப்பகுதியில் ஜீவநதி என அழைக்கப்படும் 'தாமிரபரணி' ஆறு ஓடுகின்றது. இது திருநெல்வேலி மாவட்டத்தின் பொதிகை மலையில் தோன்றி இரு மாவட்டத்து நிலப்பகுதியில் *'64,671 ஏக்கர் பாசன நிலத்திற்கு'*

(ஸ்டுவர்ட்,ஏ.ஜே:1879:04) நீரினை வழங்கி தூத்துக்குடி மாவட்டம் புன்னைக்காயல் அருகே வங்கக்கடலில் கலக்கின்றது. *“தாமிரபரணி தன் ஓட்டத்தில் இரண்டு முதல் ஐந்து மைல் வரையில் சமச்சீரற்ற அகலத்தைக் கொண்டுள்ளது. எண்ணிக்கையில் அதிகமான கிராமங்கள், நகரங்கள், கடல்போன்ற பசும் வயல்வெளிகள், ஓட்டு வீடுகள், கோயில்கோபுரங்கள் ஆகியன இவ்வாற்றங்கரையின் இருகரைகளிலும் குறிப்பிட்ட இடைவெளியில் காணப்படுகின்றன. இவை இவ்வாற்றங்கரையின் செழிப்பினை வெளிக்காட்டுகின்றன”* என்கிறார் எச்.ஆர்.பேட் (1916 :15). பாபநாசம், அம்பாசமுத்திரம், சேரன்மாதேவி, திருநெல்வேலி, பாளையங்கோட்டை, மணற்படைவீடு, சீவலப்பேரி, முறப்பநாடு, திருவைகுண்டம், ஆழ்வார்திருநகரி, திருக்கோளூர், குரும்பூர் ஆகிய நகரங்களும் தமிழர்களின் தொல்நாகரிக அடையாளங்களை வெளிப்படுத்தும் ஆதிச்சநல்லூர் என்னும் ‘தாழிமேடு’ம் இவ்வாற்றங்கரையிலே அமைந்துள்ளன.

**கடனா(கடனை), சிற்றாறு, பச்சையாறு**

தாமிரபரணிக்கு வடபகுதியில் தோன்றும் கடனா(கடனை)ஆறும், அதற்கும் வடக்கே குற்றாலமலையில் தோன்றும் சிற்றாறும் தாமிரபரணியின் துணை ஆறுகளாகும். கடனை ஆறு சிவசைலம் மலையில் உற்பத்தியாகின்றது. இவ்வாற்றங்கரையில் மன்னார்கோயில், திருவாலீஸ்வரம், ஆழ்வார்குறிச்சி ஆகிய ஊர்கள் அமைந்துள்ளன. இந்த ஆறு திருப்புடைமருதூரில் தாமிரபரணியுடன் சேருகின்றது. ‘சிற்றாறு’ குற்றாலம் மலையில் உற்பத்தியாகி குற்றாலம், ஆய்குடி, சாம்பவர்வடகரை, வீரகேரளம்புதூர், அழகியபாண்டியபுரம், கங்கைகொண்டான் வழியாகப் பாய்ந்து தாமிரபரணியோடு கலக்கின்றது. சிற்றாறு தாமிரபரணியுடன் சேரும் இடம் (முக்கூடல்) சீவலப்பேரி (சீவல்லபப்பேரேரி) என அழைக்கப்படுகின்றது. ‘பச்சையாறு’ களக்காட்டு மலையில் உற்பத்தியாகி களக்காடு, பத்மநேரி,

சிங்கிகுளம் வழியாகச் சென்று திருநெல்வேலிக்குத் தென்மேற்கே தருவை என்னுமிடத்தில் தாமிரபரணியோடு இணைகின்றது.

**நம்பியாறு, அனுமன்நதி**

'நம்பியாறு' தனியொரு ஆறாகும். இது களக்காட்டு மலையில் உற்பத்தியாகி திருக்குறுங்குடி, சித்தூர், நாங்குநேரி, ஆற்றங்கரைப் பள்ளிவாசல் ஆகிய பகுதிகளுக்குத் தேவையான விவசாய நீரினை வழங்குகின்றது. ஆற்றங்கரைப் பள்ளிவாசலுக்கு அருகில் மன்னார் வளைகுடாவில் கலக்கின்றது. 'அனுமன் நதி' பணகுடி பகுதிக்கு நீரினை வழங்கி இடிந்தகரை அருகில் கடலோடு கலக்கின்றது.

இவ்வாற்றங்கரை ஊர்களில் எழுப்பப்பட்டுள்ள பெருங்கோயில்கள் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

1.1.2.2. **கால்வாய்கள்**

பாசனத்திற்குத் தேவையான நீர் ஆறுகளிலிருந்து நேரிடையாக வயல்களுக்குச் செல்வதில்லை. விளைநிலங்கள் மேட்டுப்பகுதியிலும் ஆறு பள்ளத்திலும் அமைந்திருப்பதே இதற்குக் காரணமாகும். ஆகவே விவசாயத்திற்குத் தேவையான நீரினைப் பெற ஆற்றின் குறுக்கே அணைகள் கட்டப்பட்டு நீர்க்கால்கள் அமைக்கப்பட்டுள்ளன. தாமிரபரணி ஆற்றின் குறுக்கே எட்டு அணைகள் கட்டப்பட்டுள்ளன. கோடைமேலழகியான், நதியுண்ணி, கன்னடியன், அரியநாயகிபுரம், பழவூர், சுத்தமல்லி, மருதூர், திருவைகுண்டம் ஆகியவை அவ்வணைகளாகும்.

தாமிரபரணி ஆற்றின் முதல் கால் (கால்வாய்) 'கோடைமேலழகியான்' கால் ஆகும். இக்கால் பாபநாசம், விக்கிரமசிங்கபுரம், அம்பாசமுத்திரத்தின் மேற்குப்பகுதி ஆகிய பகுதிகளுக்கு நீரினை வழங்குகின்றது. தாமிரபரணி

ஆற்றின் வடக்குப் பகுதியில் ஏற்படுத்தப்பட்டுள்ள நதியுண்ணி கால் முக்கூடல் பகுதிக்கு நீரினை வழங்குகின்றது. 'கன்னடியன்' கால் தாமிரபரணி ஆற்றில் தெற்குப் பகுதியில் அமைக்கப்பட்டுள்ளது. இது அம்பாசமுத்திரத்தின் கிழக்குப்பகுதியிலிருந்து கோபாலசமுத்திரம் வரையிலான ஆற்றின் தென்பகுதிகளுக்கு நீரினை வழங்குகின்றது. அரியநாயகிபுரம், சத்திரம்புதுக்குளம் ஆகிய பகுதிகள் 'கோடகன்' கால் மூலம் நீர்ப்பாசனம் பெறுகின்றன.

'நெல்லைக் கால்' *மூலம் 23 குளங்கள் தண்ணீர் பெறுகின்றன. இதன்மூலம் நேரடி பாசனமாக 2 ஆயிரத்து 525 ஏக்கர் விவசாய நிலமும், குளங்கள் மூலம் 3 ஆயிரத்து 885 ஏக்கர் நிலங்களும் பாசன வசதி பெறுகின்றன. ஆக மொத்தம் 6ஆயிரத்து 410 ஏக்கர் நிலங்கள் பாசன வசதி பெறுகின்றன* (தினத்தந்தி, நெல்லைபதிப்பு, 15-07-07 பக்4).

'பாளையங்கால்' தாமிரபரணி ஆற்றின் தென்கரையில் பழவூரில் அமைக்கப்பட்டுள்ளது. மேலப்பாளையம், பாளையங்கோட்டை, திம்மராஜபுரம், நத்தம் ஆகிய ஊர்களின் விவசாய நிலங்கள் தங்களுக்குத் தேவையான நீரினை இக்காலிருந்து பெறுகின்றன. சீவலப்பேரியை அடுத்துள்ள மருதூரில் அணைகட்டப்பட்டு நீர்க்கால் பிரிக்கப்பட்டுள்ளது. இது 'மருதூர்' அணை என அழைக்கப்படுகின்றது. *"இந்த அணைக்கட்டுகள் மூலம் 1,295 ஏக்கர் நிலம் ஒரு பூ விளைச்சலும், 13,619 ஏக்கர் நிலம் இரு பூ விளைச்சலும் பெறுகின்றன"* (எச்.ஆர்.பேட் 1916 :170).

மருதூர் 'தென்கரைகால்' புத்தனேரி, முறப்பநாடு, விட்டிலாபுரம், செயதுங்கநல்லூர் ஆகிய பகுதிகள் வழியாகச் செல்கின்றது. திருவைகுண்டத்து அணையில் கால் இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. 'வடகால்' நத்தம், புளிங்குடி, பெருங்குளம் வழியாகச் செல்கின்றது. 'தென்கால்' முக்காணிப் பகுதிக்கு நீரினை வழங்கி கடலில் கலக்கின்றது.

### 1.1.2.3. அணைக்கட்டுகளின் காலங்கள்

*"தாமிரபரணி ஆற்றின் குறுக்கே கட்டப்பட்டுள்ள அணைக்கட்டுகளில் திருவைகுண்டம் அணைக்கட்டு மட்டும் ஆங்கிலேயரால் கட்டப்பட்டதாகும். இதன் அகலம் 800 கசெம் (yards)"* (கால்டுவெல் : 1989:66) ஆகும். மற்ற ஏழும் ஆங்கிலேயர் ஆட்சிக்கு முன்னர் கட்டப்பட்டதாகும். நதியுண்ணி அணை கி.பி 1759 ஆம் ஆண்டு கான்சாகிப்பால் தானமாகக் கட்டப்பட்டதாக இவ்வணையில் காணப்படும் கல்வெட்டு தெரிவிக்கின்றது. *"கன்னடியன் அணையின் காலத்தைத் திடமாகக் கூறயியலவில்லை எனினும் 14-15ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டதாகச் சொல்லலாம்"* என்கிறார் கால்டுவெல் (1989:64).

**மழைவளம்**

மேற்குத் தொடர்ச்சி மலையின் அடிவாரத்தை அடுத்துள்ள சமவெளியில் இம்மாவட்டங்கள் அமைந்துள்ளன. இதனை மழைமறைவுப் பிரதேசம் எனலாம். தென்மேற்கு, வடகிழக்குப் பருவக்காற்றினால் மேற்குத் தொடர்ச்சி மலை அதிகளவு மழை பெற்றாலும், சமவெளிப்பகுதியில் மழையளவு குறைந்தே காணப்படுகின்றது. *"பொதிகை மலையின் மழையளவு ஆண்டொன்றுக்கு 300 அங்குலம் ஆகும். சமவெளிப்பகுதி 27 அங்குலம் மழையளவு மட்டுமே பெறுகின்றது"* (கால்டுவெல:1989:6). *"இம்மாவட்டத்து சமவெளிப்பகுதிகள் தென்-மேற்குப் பருவக்காற்றினால் மிகக் குறைந்தளவே மழையினைப் பெறுகின்றன. இருப்பினும் இப்பருவக்காற்றினால் பொதிகைமலையில் கிடைக்கும் மழைப்பொழிவினைக் கொண்டு பெருமளவு விவசாயம் செய்யப்படுகின்றது"* (எச்.ஆர்.பேட்: 1916 :28).

### 1.1.3. அரசியல்வரலாறு

இந்நிலப்பகுதி சங்ககாலம் தொடங்கி கி.பி 9ஆம் நூற்றாண்டு வரை பாண்டியர்களாலும், சோழர்களாலும் மாறிமாறி ஆளப்பட்டது. களப்பிரர் காலத்திற்கு முன்னர் ஆண்ட மன்னர்கள் முற்காலப் பாண்டியர்கள் என அழைக்கப்படுகிறார்கள். *"களப்பிரர் காலத்திற்குப் பின்னர் இந்நிலப்பகுதி 7,8,9 ஆகிய மூன்று நூற்றாண்டுகளில் 13 பாண்டியமன்னர்களால் ஆளப்பட்டது"'* (எச்.ஆர்.பேட்1916 :45). இவர்கள் பிற்காலப் பாண்டியர்கள் என அழைக்கப்படுகிறார்கள். இவர்களுள் முதல் மன்னன் பாண்டியன் கடுங்கோ ஆவான். பாண்டிய மன்னர்களது பட்டியலை 'தமிழ்நாட்டு வரலாறு: பல்லவர்-பாண்டியர்காலம் (1990:தொகுதி:1:)' நூல் விரிவாக விளக்குகின்றது. பாண்டியரது குலமரபு இரண்டு வகைகளில் எடுத்துரைக்கப்படுகின்றது. ஒன்று அரசுரிமை மரபு, மற்றொன்று புராணமரபு.

அரசுரிமை மரபு : *"களப்பிரரை அழித்து மீண்டும் பாண்டியப் பேரரசை நிறுவியவன் கடுங்கோன். அவனுக்குப்பின் அவனிசூளாமணி, செழியன்சேந்தன், அரிகேசரி போன்ற மன்னர்கள் ஆண்டனர். அவர்கள் வழித் தோன்றலாக விளங்கினான் சிரீபராந்தகன். அவன் மகன் சீமாறன் சீவல்லபன் எனபவன். இவன் கழுதூரில் இறந்துபட்டான். அவன் மக்கள் இருவர். ஒருவன் வரகுணன். இளையோன் வீரநாரணன். அக்கள நிம்மடி என்பவள் வீரநாரணன் தாய். அண்ணன் வரகுணனை வென்று அரசுரிமை பெற்ற வீரநாரணன் குன்றம் முதல் விழிஞம் ஈறாகப் பலவிடத்தும் நடைபெற்ற போர்களில் வாகை சூடினான்"* (சுப்பிரமணியம்.பூ:1983:195).

புராணமரபு : பாண்டியர்கள் சந்திரக் குலத்தவராகக் கருதப்படுகின்றனர். இவர்கள் *"திருமால், பிரமன், அத்திரிமுனி, சந்திரன், புதன், புருவன் என்ற பிறப்பு முறையினைக் கொண்டவர்கள் என*

*தளவாய்புரச் செப்பேட்டில் விளக்கப்படுகின்றது''* என்கிறார் பூ.சுப்பிரமணியம்(1983:195).

### பாண்டியர்களின் குலப்பெயர்கள்

பாண்டியர்களின் பழையபெயர் *'மாறன்'* என்பதாகும். பாண்டியர்களின் துறைமுகமான கொற்கையருகே சிற்றூர் ஒன்று 'மாறமங்கலம்' எனப் பெயரிடப்பட்டுள்ளமை இக்கருத்திற்குச் சான்றாக அமைகின்றது. *'வழுதி'* என்பது பாண்டிய மன்னர்களின் குடிப்பெயராகும். இதனைக் கால்டுவெல் *கவித்துவப் (Poetical) பெயர்* (1989:25) என்கிறார்.

கி.பி 14ஆம் நூற்றாண்டு முதல் தாமிரபரணிக் கரைப் பகுதிகளைப் பிற்கால சேரமன்னர்கள் ஆண்டனர். அவற்றின் பின் வந்த காலத்தில் விஜயநகர மன்னர்களாலும், நாயக்கமன்னர்களாலும் இந்நிலப்பகுதி ஆளப்பட்டு வந்தது. இம்மன்னர்களே ஆய்வுக்களப்பகுதியில் பல புதிய பெருங்கோயில்களைக் கட்டினர். கட்டப்பட்டிருந்த கோயில்களை விரிவுபடுத்தினர். அதாவது கோயில்கள் கி.பி ஏழாம் நூற்றாண்டு முதல் பதினைந்தாம் நூற்றாண்டு வரையிலான பல்வேறு காலகட்டங்களில் உருவாக்கப்பட்டவையாகும்.

### 1.1.4. கோயில்களின் காலவரையறை

ஆய்வுக்களப் பகுதியில் அமைந்துள்ள கோயில்களில் குற்றாலம், திருநெல்வேலி ஆகிய இரண்டும் தேவாரப் பாடல் பெற்ற தலங்களாகும். அதாவது இவற்றை கி.பி ஏழாம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகக் கொள்ளலாம். 'திருச்செந்தூர்' என அழைக்கப்படும் செந்தில் ஒரு வைப்புத் தலமாகும். இதனையும் இக்காலத்திற்குரியதாகக் கருதலாம். எஞ்சிய சிவத்தலங்கள் எல்லாம் ஒன்பதாம் நூற்றாண்டு முதல் பதினைந்தாம் நூற்றாண்டு வரையிலான காலங்களில் எழுந்தவையாகும்.

ஆய்வுப்பகுதியில் அமைந்துள்ள கோயில்களின் காலத்தை அறிவதற்கு இலக்கியப்பதிவுகள் போதுமானவையாக அமையவில்லை. கோயில்களில் பொறிக்கப்பட்டுள்ள மன்னர்களின் கல்வெட்டுகள் மட்டுமே காலக்கணிப்பிற்குச் சரியான சான்றாதாரமாக விளங்குகின்றன. கோயில் கல்வெட்டுக்களில் குறிப்பிடத்தகுந்தவை வட்டெழுத்துக்களால் அமைந்தவையாகும். கி.பி. 995இல் முதலாம் இராசராசன் பாண்டிய நாட்டை வெற்றி கொண்ட பிறகு அக்காலத்தில் பாண்டியநாட்டில் வழங்கி வந்த வட்டெழுத்து முறை தமிழ் எழுத்து முறையாக மாற்றப்பட்டது. இம்மாற்றத்திற்குச் சான்றாக பாளையங்கோட்டை இராசகோபாலசுவாமி கோயில் கல்வெட்டினைக் குறிப்பிடலாம். இக்கோயில் கருவறையின் அடித்தளத்தில் முதலாம் இராசராசன் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. அவற்றில் இரண்டு வட்டெழுத்தும் ஒன்று தமிழ் எழுத்துமாக அமைந்துள்ளன. வட்டெழுத்துக் கல்வெட்டுக்கள் அல்லது வட்டெழுத்துக் கல்வெட்டுத் துண்டுகள் காணப்படும் கோயில்களைக் கி.பி.10ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாகக் கணக்கிடலாம்.

பெரும்பாலான கோயில்களில் வட்டெழுத்துக் கல்வெட்டுகள் காலப்போக்கில் அழிந்து விட்டன. இருப்பினும் கோயில்களில் காணப்படும் எஞ்சிய வட்டெழுத்துத் துண்டுகள் கோயிலின் பழமையை அறிய உதவுகின்றன. எடுத்துக்காட்டாக திருப்புடைமருதூர் 'நாறும்பூநாதர்' கோயில் தேவாரப்பாடல் பெறாத தலம் ஆகும். இக்கோயில் பிற்கால பாண்டியர் கட்டட அமைப்பினையே கொண்டுள்ளது. இருப்பினும் அக்கோயில் சண்டிகேசுவரர் சந்நிதியின் கிழக்குச்சுவரின் வெளிப்புறத்தில் உள்ள கோச்சடையபருமரின் வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்று இவ்வூரின் பெயரை *'திருப்படுமருதில்'* எனக் குறிப்பிடுகின்றது. இதிலிருந்து இக்கோயிலின் காலத்தை கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாகக் கணக்கிடவேண்டியதுள்ளது.

ஆய்வுக்களத்தில் வட்டெழுத்துக் கல்வெட்டுக்கள் காணப்படும் கோயில்கள் அனைத்தும் ஒன்பது அல்லது பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும் என உறுதிபடக்கூறலாம். வட்டெழுத்துக் கல்வெட்டினைக் கொண்டுள்ள பாளை இராசகோபாலசாமி கோயில், சீவலப்பேரி அழகர் கோயில், திருப்புடைமருதூர் நாறும்பூநாதர் கோயில் ஆகியவற்றைப் பத்தாம் நூற்றாண்டிற்கு முந்தைய பாண்டியர் கலை ஆக்கங்கள் எனலாம். இவை தவிர்ந்த எஞ்சியவை பத்தாம் நூற்றாண்டிற்குப் பின்னர் பிற்காலச் சோழர் காலத்தைச் சார்ந்தவை ஆகும்.

ஆய்வுக்களத்து வைணவக் கோயில்களில் 'நவதிருப்பதி' எனப்படும் திருவைகுண்டம், திருப்புளிங்குடி, வரகுணமங்கை(நத்தம்), திருக்குளந்தை(பெருங்குளம்), தொலைவில்லி மங்கலம் என்கிற இரட்டைத்திருப்பதி, தென்திருப்பேரை, திருக்கோளூர், ஆழ்வார்திருநகரி ஆகிய ஒன்பது கோயில்களும் திருக்குறுங்குடி, நாங்குநேரி (ஸ்ரீவரமங்கை) கோயிலும் ஆழ்வார்களால் பாடப்பெற்ற தலங்களாகும். இவை கி.பி எட்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்டவை எனக் கொள்ளலாம்.

இவற்றினை அடுத்த பழமையானவையாக அம்பாசமுத்திரம், மன்னார்கோயில், வீரவநல்லூர், சேரன்மாதேவி, பாளையங்கோட்டை, ஆத்தூர் ஆகிய ஊர்களிலுள்ள கோயில்கள் அடங்குகின்றன. இவற்றுள் மன்னார்கோயில், பிரம்மதேசம், திருவாலீசுவரம் ஆகியவை கடனாநதிக் கரையில் அமைந்துள்ளன. அம்பாசமுத்திரம், வீரவநல்லூர், சேரன்மாதேவி, பாளையங்கோட்டை, திருநெல்வேலி, ஆத்தூர் ஆகியன தாமிரபரணி ஆற்றங்கரையில் அமைந்துள்ள கோயில்களாகும். சிற்றாற்றங்கரையில் அமைந்துள்ள மானூர் (மானநிலைநல்லூர்), கங்கை கொண்டான் ஆகிய தலங்களிலுள்ள சிவன் கோயில்கள் பிற்கால பாண்டியர் காலத்தைச் சார்ந்தவையாகும். 1742-க்குப் பின்னரான நாயக்கர் காலத்திலும் அதற்குப்

பின்னரான காலனிய ஆட்சிக்காலத்திலும் பெருங்கோயில்கள் எழுப்பப்படவில்லை.

# பகுதி - இரண்டு

## தெய்வப்பெயர்களும் உள்ளூர்மரபுகளும்

### 1.2.1 இயல் முன்னுரை

தமிழகத்தில் கி.பி ஐந்தாம் நூற்றாண்டு முதல் சைவக் குரவர்களான நாயன்மார்களும், வைணவ ஆழ்வார்களும் பக்தி இலக்கியங்களைப் படைத்தனர். இதனைப் 'பக்தி இயக்க காலம்' என்கிறோம். இதனைத் தொடர்ந்து உருவான பாண்டிய, பல்லவ, சேர அரசுகள் புதிய நீர்க்கால்களை உருவாக்கி விளைநிலங்களின் அளவைப் பெருக்கினர். நீர்க்கால்களின் பெருக்கத்தினால் வேளாண் உபரி உற்பத்தி மிகுதியானது. இதனைக் கொண்டு பெருந்தெய்வக் கோயில்கள் பல எழுப்பப்பட்டன. 'பக்தி இயக்க எழுச்சி' ஒவ்வொரு தலத்து இறைவனையும் தனித்ததொரு பெயர் கொண்டு அழைக்கும் முறையை ஏற்படுத்தியது. இது பக்தி இயக்கம் தன்துணை நிறுவனமான கோயிலுக்கு அளித்த கொடைகளில் ஒன்றாகும். இதன் காரணமாக பொதுப்பெயர்களில் அழைக்கப்பட்ட தெய்வங்கள் தனியாக அடையாளப்படுத்தப்பட்டன. இதனால் 'தெய்வப்பெயரிடுதல்' என்ற நிகழ்வு 'நிலவியல், 'பண்பாடு', 'அரசியல்' ஆகிய அடிப்படைகளில் அமையத் தொடங்கியது.

மனிதகுல வரலாற்றில் பெயரிடும் முறை குறித்தோ, அதன் கால வளர்ச்சி குறித்தோ இதுவரை சமூகவியல் அறிஞர்களோ, மானிடவியலரோ விரிவான விளக்கம் எதுவும் தரவில்லை. பெயரிடும் முறையானது நம்பிக்கையின் அடிப்படையில் அமைகின்றது என்பது மட்டும் மானிடவியல் அறிஞர்களின் கருத்தாகும். தமிழிலக்கிய ஆய்வுப் பரப்பில் மக்கட்பெயர், இடப்பெயர் பற்றிய ஆய்வுகள் சில நடந்துள்ளன. இவற்றுள் கா.பாஸ்கரன்(2003), நாச்சிமுத்து(1993) ஆகியோரது ஆய்வுகளும்,

திருவனந்தபுரத்தில் தொடங்கப்பட்ட 'இடப்பெயர்கள் ஆய்வுக் கழகமும் (Place Names Society)' குறிப்பிடத்தக்கன. தமிழ் இலக்கியப் பரப்பில் தெய்வப்பெயர் குறித்த தரவுகள் பரவலாகக் காணப்படுகின்றன. தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியங்களிலும் தெய்வப்பெயர்கள் பதிவு பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.

**தொல்காப்பியத்தில் தெய்வப்பெயர்கள்**

தமிழின் மிகப்பழமையான இலக்கண நூலான தொல்காப்பியத்தில் தெய்வத்தினைக் குறிக்க 'தெய்வம்'(பொருள்: 415), 'கடவுள்'(சொல்:4,58), 'இறைவன்' (பொருள்72:14) என்ற சொற்கள் பயன்படுத்தப் பெற்றுள்ளன. 'கடவுள்வாழ்த்து' (பொருள்:85), 'தெய்வம் அஞ்சல்' (பொருள்:272:1), 'வழிபடுதெய்வம்' (பொருள்:415) என அச்சொற்கள் காணக்கிடைக்கின்றன. இவை யாவும் பொதுப்பெயர்களேயாகும். எந்த ஒருதெய்வத்தையும் தனிப்பெயரிட்டு தொல்காப்பியம் குறிப்பிடவில்லை. திணைக்குரிய தெய்வங்களைக் குறிப்பிடும்போது மட்டும் 'மாயோன்', 'சேயோன்', 'வேந்தன்', 'வருணன்' (தொல்:951) என அடையாளப்படுத்துகின்றது.

**சங்கஇலக்கியங்களில் தெய்வப்பெயர்கள்**

சங்க இலக்கியங்களில் தெய்வப்பெயர்கள் தெய்வம் , வழிபடுதெய்வம், கடவுள் எனப் பொதுப் பெயர்களாகவே பதிவு செய்யப்பெற்றுள்ளன. தாய்த்தெய்வங்கள் கடல்கெழுசெல்வி , கானமர் செல்வி என்ற பெயர்களில் சுட்டப்பெற்றுள்ளன. முருகன் என்ற பெயர் மட்டும் தனித்ததொரு தெய்வத்தினை அடையாளப்படுத்தும் பெயராக அமைந்துள்ளது. முருகன் குறித்து 'சங்க நூல்களில் முருகன்' என்னும் தலைப்பில் பி.எல்.சாமி (1990) விரிவானதொரு நூலினை எழுதியுள்ளார்.

ஊர்ப்பெயருடன் கூடிய தெய்வப்பெயரினையும் சங்க இலக்கியத்தில் காணமுடிகின்றது.

"செல்லாநல்லிசை யுறந்தைக் குணாஅது
நெடுங்கை வேண்மாள் அருங்கடிப் **பிடவூர்**
**அறப்பெயர்ச் சாத்தன்** கிளையேம் பெரும" (புறம்:395)

என்ற புறநானூற்றுப் பாடல், பிடவூரில் இருந்த சாத்தன் கோயிலைக் குறிப்பிடுகின்றது. தற்போதைய திருச்சி மாவட்டத்து திருப்பாட்டூரே, பிடவூராகும் என்பது பி.எல்.சாமியின் கருத்தாகும். *'இன்றும் திருப்பாட்டூரில் பாழடைந்த சாத்தன் கோயில் ஒன்றுள்ளது. இச்சாத்தன் தெய்வமே பின்னாளில் தர்மசாஸ்தா என வழங்கிற்று. இத்தெய்வம் சேக்கிழார் காலத்தில் சைவர்களின் தெய்வமாக இந்துமத தெய்வக் கணத்தில் (Hindu Pantheon) இணைக்கப்பட்டது'* (1986:12) என்கிறார் அவர். புறநானூற்றின் மற்றொரு பாடலான

"வெண் தலைப்புணரி **அலைக்கும் செந்தில்**
நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறை"
(புறம்:55-18-19)

என்பது, திருச்செந்தூரையும் அங்கு நிலைகொண்டுள்ள முருகனையும் குறிப்பிடுகின்றது. இவை ஊர்ப்பெயர்களுடன் கூடிய தெய்வப்பெயர்களாகும்.

## தெய்வப்பெயர்களும் பண்பாட்டு அடையாளங்களும்

தமிழகத்தில் பக்தி இயக்கத்தின் எழுச்சியாலும் கோயிற்கலை வளர்ச்சியோடும் தெய்வங்களுக்குப் பண்பாட்டின் அடிப்படையில் பெயரிடும் முறை தோற்றம் பெற்றது. 'Culture' என்ற ஆங்கிலச் சொல்லுக்கு ஈடாக

'கலாசாரம்', பண்பாடு' என்ற இரண்டு சொற்கள் தமிழில் வழங்கி வருகின்றன. இவற்றுள் முழுமையான பொருளை உணர்த்தும் சொல் என்ற அடிப்படையில் 'பண்பாடு' என்ற சொல்லே இங்கு பயன்படுத்தப்பெறுகின்றது.

'பண்பாடு' என்பது குறித்து பெரும் எண்ணிக்கையிலான வரையறைகள் காணப்படுகின்றன. குரோபர் என்பார் 130 வகையான வரையறைகள் தருவதாக பக்தவத்சலபாரதி (1999:159) குறிப்பிடுகின்றார். குரோபர், பண்பாடு என்பதை "*உணர்வுகள், பழக்கங்கள், தொழில்நுட்பங்கள், கருத்துக்கள், விழுமியங்கள், மற்றும் தூண்டப்படும் நடத்தைகள், கற்றறிவதாலும் மரபுத் தொடர்ச்சியாலும் பெறும் ஒட்டுமொத்தத் தொகுப்பு*" என வரையறை செய்வதாக ஆ.சிவசுப்பிர மணியன்(1989:2) குறிப்பிடுகின்றார். பண்பாடு என்பது மக்களையும், அவர்களின் பழக்க வழக்கங்களையும் மட்டும் குறிப்பதன்று. அது மக்கள், மக்கள் வாழ்கின்ற நிலம், மண், மண்ணில் வாழ்கின்ற பயிர் மற்றும் உயிர் வகைகள் ஆகியவற்றை உள்ளடக்கியதாகும். சுருக்கமாகக் கூறுவோமாயின் மனிதனும் அவன் வாழ்கின்ற சுற்றுச் சூழலும் இணைந்ததே பண்பாடாகும்.

"*மரபு வழியிலான பண்பாட்டுச் சூழல்கள் அப்பண்பாட்டில் அமைந்துள்ள கடவுள்களின் ஒழுங்கமைப்பை (System) நிர்ணயிக்கின்றன. ஒழுங்கமைப்பு என்பது கடவுள்களின் வடிவம், அவை கொண்டுள்ள ஆயுதங்கள், வண்ணங்கள், நம்பிக்கைகள் ஆகியவையாகும். மனித சமூகத்தை வேட்டைச்சமூகம், உணவு சேகரிப்புச் சமூகம், கால்நடைவளர்ப்புச் சமூகம், வேளாண்சமூகம் என வகைபாடு செய்கின்றோம். இச்சமூகத்தின் தெய்வங்களும் அதன் பண்பாட்டிற்கு ஒத்ததாக (appropriate) உள்ளன. வேட்டைச் சமூகத்தில் முன்னோர் வழிபாடும், வேளாண் சமூகத்தில் பூமிக்கடவுள்களும், தாய்த்தெய்வங்களும், கால்நடைவளர்ப்புச் சமூகத்தில் வானம், வளிமண்டலம் தொடர்பான தெய்வங்களும்*

*உருவாக்கப்பட்டுள்ளன"* (Encyclopaedia of Religion Vol VI: 60) எனலாம்.

தமிழகத்துக் கொங்குமண்டலம் நான்கு பக்கங்களிலும் மலையரண்களால் சூழப்பெற்ற மேய்ச்சல் நிலங்களை அதிகமாகக் கொண்டுள்ள நிலப் பகுதியாகும். இங்கு கால்நடை வளர்ப்பு முக்கியத் தொழிலாகும். இங்கு ஒரு தெய்வம் 'பட்டீசுவரன்' என்றும், தலம் 'பட்டீசுவரம்' என்றும் பெயரிடப்பட்டுள்ளன. கோவை மாவட்டத்துப் பேரூர்ச் சிவன் 'பட்டீசுவரர்' ஆவார். கும்பகோணத்திற்கு அருகில் 'பட்டீசுவரம்' என்னும் பெயரில் பெருங்கோயிலோடு சிற்றூர் ஒன்றுள்ளது. தமிழ்நாட்டு வழக்கில் கால்நடைகளை இரவில் வேலியிட்டு அடைக்கும் இடமே 'பட்டி' என அழைக்கப்படுகின்றது. கால்நடைகள் அதிகமாகவுள்ள நிலப்பகுதியில் 'பட்டி' என்ற முன்னொட்டுடன் இறைப் பெயரும், தலப்பெயரும் அமைவது பண்பாட்டுப் பிரதிபலிப்பு ஆகும்.

தஞ்சை மாவட்டத்துத் திருக்களர் மண்வகையில் களர்நிலமான நிலப்பகுதியாகும். இங்குள்ள இறைவன் 'களர்முனை நாதர்' ஆவார். 'சாய்' என்னும் கோரை அதிகமாக விளைகின்ற ஆற்றுப்பகுதியான திருச்சாய்க்காட்டு இறைவன் 'சாயாவனேசுவரர்' எனப் பெயரிடப்பட்டுள்ளார். விழுப்புரம் அருகிலுள்ள பனங்காட்டூர் பனைமரங்கள் நிறைந்த நிலப்பகுதியாகும். அவ்வூர்ப் பெயரே இதற்குச் சான்றாக அமைகின்றது. இங்குள்ள இறைவன் 'பனங்காட்டீசுவரர்' ஆவார். இவை, இறைவன் நிலத்தின் அடிப்படையில் பெயரிடப்பட்டுள்ளதை விளக்குகின்றன.

ஆய்வுக் களப்பகுதியான திருநெல்வேலி வட்டம் நஞ்சை வயல்கள் நிறைந்த நிலப்பகுதியாகும். இவ்வூருக்கு நாற்புறமும் நெல் வயல்களே எல்லைகளாக அமைந்துள்ளன. இந்நிலவியல் சூழலை வெளிப்படுத்துவதாக இறைவன் 'நெல்லையப்பர்' எனவும், தலம் 'திருநெல்வேலி' எனவும் பெயரிடப்பட்டுள்ளன.

பெருங்கோயில் இறைவனும், இறைவியும் ஒன்றிற்கு மேற்பட்ட பெயர்களால் சுட்டப்படுகிறார்கள். அப்பெயர்கள் ஒவ்வொன்றும் ஏதேனும் ஒரு பண்பாட்டுக் கூறினை வெளிக்காட்டுவதாக அமைகின்றன. எடுத்துக்காட்டாக, திருநெல்வேலிச் சிவன் 'நெல்லையப்பர்' எனவும், பிராமணர்களால் பூசை செய்யப்படுவதால் நெல்லைக் குறிக்கும் வடமொழிச் சொல்லான 'சாலி' என்பதைக் கொண்டு 'சாலிவாடீசுவரர்' எனவும், புராண அடிப்படையில் மூங்கில் (வேணு) காட்டில் தோன்றியதால் 'வேணுவனநாத'ராகவும், இராமக்கோன் என்னும் இடையனின் வேண்டுதல்படி தனது உயரத்தை வழிபடுவதற்குரியதாகக் குறைத்துக்கொண்டதால் 'வேண்டவளர்ந்த நாதர்' எனவும் அழைக்கப்படுகிறார். இவை பண்பாட்டுக் கூறுகளான நிலம், மொழி, இயற்கையமைப்பு, மனித நம்பிக்கை, கதை, புராணம் ஆகியவற்றின் அடிப்படையில் தெய்வங்கள் பெயரிடப்பட்டுள்ளதனைக் காட்டுகின்றன.

இவ்விளக்கங்களின் அடிப்படையில் ஆய்வுப் பகுதியில் கிடைக்கப் பெற்ற தரவுகளைக் கொண்டு தெய்வப்பெயர்கள் வகைப்படுத்தப்பட்டு, அவை பண்பாடு சார்ந்து உருவான முறைகள் விளக்கப்படுகின்றன.

### 1.2.2. பெயர்வகைபாடும் பண்பாட்டு அடையாளங்களும்

*"மக்களுடன் பிணைந்து நிற்கும் பண்பாடானது பல்வேறு அடையாளங்கள் வாயிலாக வெளிப்பட்டு நிற்கும். இதனைப் பண்பாட்டு அடையாளம் என்று குறிக்கலாம். இப்பண்பாட்டு அடையாளம் உடை-அணிகலன் போன்ற புழங்கு பொருளாகவோ, கல்வி-தத்துவம்-மருத்துவம் போன்ற அறிவுத் துறையாகவோ அமையலாம்...மொத்தத்தில் சமயம்-மொழி-வழிபாடு-ஆடை-அணிகலன்-உணவு-உணவு உண்ணும் முறை-மக்கட்பெயர் இவையெல்லாம் பண்பாட்டு அடையாளங்களாகும்"*

(சிவசுப்பிரமணியன்.ஆ. 1989:03). வழிபாடு பண்பாட்டுக் கூறுகளில் ஒன்றாகும். இந்த வழிபாட்டு முறையின் ஒரு பகுதி தெய்வப் பெயரிடுதல் ஆகும். தெய்வப்பெயர் வகைகள் பின்வருமாறு அமைகின்றன.

### 1.2.2.1 **வகை 1. நிலவுடைமைசார் பெயர்**

பெருங்கோயிலுக்கும் நிலத்திற்குமான உறவு மிக அடிப்படையானதாகும். கோயில் சொத்துக்களில் நிலமே அளவுகளில் முதன்மையானதும், பெரியதும் ஆகும். அரசர்கள், அதிகாரிகள் முதல் கோயில் பணியாளர்கள், ஊர்க்குடிகள்வரை நிலங்களைத் தானமாக கோயிலுக்கு வழங்கியதைக் கல்வெட்டுச் செய்திகளின் மூலம் அறிகின்றோம். *“சோழர் காலத்திற்கு முன்பு கோயில்கள் மிகச் சிறியவையாக இருந்தன. பல்லவர் காலத்துக் கோயில்கள் மிகச் சிறிய குடை வரைக் கோயில்களே. அவற்றை மாமல்லபுரத்திலும், திருக்கழுக்குன்றத்திலும் காணலாம். அவற்றிற்கு நிரந்தர வருமானமோ, சொத்தோ இருந்ததில்லை. ஆனால் சோழர் காலத்தில் பிரம்மாண்டமான கற்கோயில்கள் எழுப்பப்பட்டன. இக்கோயில்களைக் கட்ட போரில் சிறைப்பட்ட யுத்தக் கைதிகளையும், போரில்லாத காலத்தில் உள்நாட்டு மகாசேனைகளையும் ஈடுபடுத்தினார்கள். இக்கோயில்களுக்கு ஏராளமான நிலங்களை சர்வ மானியமாக சோழ அரசர்கள் விட்டார்கள்”* (நா.வானமாமலை: 1990:22-23) என கோயில்களோடு நிலங்கள் இணைக்கப்பட்ட காலத்தை விளக்குவர்.

கோயில்கள் பல்வேறு வகையில் உரிமையுடைய நிலங்களைக் கொண்டிருந்ததைக் கல்வெட்டுச் செய்திகள் மூலம் அறிகின்றோம். *“அவை தனியுரிமையுடைய பயிர் செய் நிலங்களாகவும், குத்தகைப் பங்குரிமை கொண்ட கொடை நிலங்களாகவும், இறையுரிமை கொண்ட வருவாய் வரும் நிலங்களாகவும் இருந்தன* என்கிறார் மே.து.ராசுகுமார்(2004:24).

இவ்வரலாற்று நிகழ்வுகள் கோயில் நிலவுடைமை சார்ந்து வளர்ந்ததைக் காட்டுகின்றன. இந்த நிலவுறவுப் பண்பினை வெளிக்காட்டும் வகையில் தெய்வங்கள் பெயரிடப்பட்டுள்ளன. இதனை நிலப்பெயர், இடப்பெயர், தாவரப்பெயர் என வகைப்படுத்திக் காணலாம்.

### அ. நிலப்பெயர்

நிலம் என்பதைக் குறிக்கும் சொற்களால் தெய்வங்கள் பெயரிடப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. *"வடஆற்காடு மாவட்டத்து பாலாற்றுக் கரையில் அமைந்துள்ள குடிமல்லூர் ஊரின் சிவன் 'பூமீசுவரர்' ஆவார்"* (முத்துசாமி.கோ.மு.1991:154) என்பது ஓர் எடுத்துக்காட்டு ஆகும். ஆய்வுப் பகுதியிலும் நிலவுறவினைச் சுட்டும் விதமாகத் தெய்வங்கள் பெயரிடப்பட்டுள்ளன.

| தெய்வப்பெயர் | கோயில் | இருப்பிடம் | காரணம் |
|---|---|---|---|
| பூமிநாதர் | பூமிநாதர் | வீரவநல்லூர் | நிலம் |
| பூமிபாலகன் | காசினிவேந்தன் | திருப்புளிங்குடி | நிலம் |
| காசினிவேந்தன் | காசினிவேந்தன் | திருப்புளிங்குடி | நிலம் |
| மரகதம் | பூமிநாதர் | வீரவநல்லூர் | பயிர் வண்ணம் |
| மரகதவல்லி | சுந்தரராஜப்பெருமாள் | வீரவநல்லூர் | பயிர் வண்ணம் |
| மரகதம் | காசிபநாதர் | அம்பாசமுத்திரம் | பயிர்வண்ணம் |
| மரகதவல்லி | எரிச்சாவுடையார் | அம்பாசமுத்திரம் | பயிர்வண்ணம் |
| அகிலாண்டஈசுவரி | கோதண்டராமேசுவரர் | கயத்தாறு | உலகம் |
| உலகம்மன் | பாபநாசர் | பாபநாசம் | உலகம் |

பூமி, காசினி, மரகதம், உலகம், பூமகள், அகிலம் ஆகியன நிலத்தோடு தொடர்புடைய சொற்களாகும்.

நெல்லை மாவட்டத்து வீரவநல்லூர், தாமிரபரணி ஆற்று நீரால் வளம் பெறும் நிலப்பகுதியாகும். இவ்வூர்ச் சிவன் கோயில் வயல்களுக்கு அருகில் அமைந்துள்ளது. இங்கு இறைவன், இறைவி ஆகியோர் முறையே பூமிநாதர், மரகதம் எனப் பெயரிடப்பெற்றுள்ளனர். பூமிநாதர் என்பது நிலத்தின் உரிமையாளர் என்ற பொருளினைத் தருகின்றது.

பூமி இறைவனுக்குரியதாக (இறைவி நோக்கில் கணவனுக்குரியதாக) இருக்கையில் இறைவி (நில உரிமையாளரின் மனைவி) இதுசார்ந்து பெயரிடப்பட வேண்டியது கடமையாகும். அவள், பயிர்களின் வண்ணத்தைக் குறிப்பதாக மரகதம் எனப் பெயரிடப்பட்டுள்ளார். 'மரகம்' என்றால் பச்சை என்பது பொருள். *"பச்சையம்மன் என்ற தெய்வம் வடநாட்டில் ஹரீதி என்று தொழப்பட்ட தெய்வமாகும். இது பயிர் பச்சையின் செழிப்பைத் தரும் தெய்வமாகும்"* என்பது பி.எல்.சாமி(1986:87)யின் கருத்தாகும்.

இதே ஊரிலுள்ள சுந்தரராசப் பெருமாள் கோயில் தாயாரும் மரகதவல்லி என்றே பெயரிடப்பட்டுள்ளார். ஒரு நிலப்பகுதியில் அமைந்துள்ள சைவ, வைணவக் கோயில்களின் இறைவியர் 'மரகதம்' எனப் பெயரிடப்பட்டிருப்பது நிலத்துடன் கோயில் கொண்டுள்ள உறவினைக் காட்டுகின்றது. நெல்லை மாவட்டத்து நிலவுடைமையாளரான சைவவேளாளச் சாதியாரிடம் 'பச்சைநாயகி' என்பது பெண்மக்கட்பெயராக இன்றும் வழக்கிலுள்ளது.

அம்பாசமுத்திரம் தாமிரபரணி ஆற்றின் முதல் கால்வாயால் பாசனம் பெறும் நிலப்பகுதியாகும். இங்குள்ள காசிபநாதர், எரிச்சாவுடையார் ஆகிய இரு சைவக்கோயில்களின் அம்மனும் பயிரின் வண்ணத்தைக் குறிக்கும் 'மரகதம்' என்றே அழைக்கப்படுகின்றனர்.

தூத்துக்குடி மாவட்டத்துத் திருப்புளிங்குடி நவதிருப்பதிகளில் ஒன்றாகும். இத்தலம் தாமிரபரணி ஆற்றங்கரையில் அமைந்துள்ளது. இங்குள்ள பெருமாள் கோயில் மூலவர் 'காசினிவேந்தன்', உற்சவர் 'பூமிபாலகன்' ஆவர். 'பூமியின் பெயர்' என்பதற்கு திவாகர நிகண்டு *அவனி, காசினி, தரணி, உலகு, பூ, சகம், பூமி* என 37 சொற்களைப் பட்டியலிடுகின்றது. அதாவது நிலவுடைமையாளர் எனப் பொருள்படும்படியாக ஒருதலத்து மூலவரும், உற்சவரும் பெயரிடப்பெற்றுள்ளனர்.

வைணவக் கோயில்களில் இரு தாயார் இருப்பர். இருவரில் ஒருவர் பூமிக்குரியவர் என்பதாகப் 'பூமகள்', 'நிலமகள்', 'பூமிமகள்', 'பூதேவி' எனப் பெயரிடப்படுகிறார். பூமியைத் தெய்வமாக வழிபடுவது உலகின் அனைத்துப் பகுதிகளிலும் காணப்படும் ஒரு வழிபாட்டு முறையாகும். இதனால் தெய்வத்திற்கு 'நிலமகள்' எனப் பெயரிட்டனர். 'நிலமகள்' என்பது ஒரு புராணக் கதைக்கூறு ஆகும். இக்கதைக்கூறு ஸ்டித் தாம்ப்சன் உருவாக்கிய 'கதைக்கூறு அடைவு: புராணம், பழமரபுக் கதை, நாட்டார் வழக்காறுகள்'(Motif Index for Myth, Legends etc)' என்ற நூலில் எண் A.400.1 ஆகச் சேர்க்கப்பட்டுள்ளது (Stith Thompson:1955).

பாபநாசம் இறைவி 'உலகம்மன்' எனப் பெயரிடப்பட்டுள்ளார். *"தமிழ்நாட்டில் வணங்கப்பெறும் தாய்த்தெய்வங்களில் உலகம்மனும் ஒன்றாகும். அரசர்கள் எரிக்கப்பட்ட அல்லது புதைக்கப்பட்ட இடங்களில் பள்ளிப்படை ஆலயங்கள் எழுப்பும் வழக்கத்தைச் சோழ அரசர்கள் தொடங்கிவைத்தனர். அரசர்களைப் போல அரசியர்க்கும் சிறிய அளவிலேனும் பள்ளிப்படைக் கோயில்கள் எழுப்பப்பட்டிருக்க வேண்டும். வாழ்வரசியாக(சுமங்கலியாக) மறைந்த பெண்களை எளிய குடும்பங்களில்கூட 'மாலையம்மன்' என்ற பெயரில் திருநிலைப்படுத்தி வணங்குவது தமிழர்களின் வழக்கம். அந்த மரபின் அதிகார நீட்சியாகவே*

*உலகம்மன் வழிபாட்டினைக் கொள்ளவேண்டும்*'' என்பது தொ.பரமசிவனின்(2006:34-36) கருத்தாகும். இக்கருத்தின்படி பாபநாசம் அம்மன் உலகை ஆள்பவள் என்பதாகப் பெயர் சூட்டப்பட்டுள்ளார். 'பூமிமுழுவதையும் உரிமையாகக் கொண்டவள்' என்பதாகக் கயத்தாறு கோதண்ட ராமேசுவரர் கோயில் இறைவி 'அகிலாண்ட ஈசுவரி' என்று பெயரிடப்பட்டுள்ளார்.

ஆதியில் மனிதன் வளமை காரணமாக நிலத்தை வழிபட்டான். காலஓட்டத்தில் வழிபாடு செய்ய கோயில் உருவானது. *"வழிபடும் இடமாக இருந்த கோயில், ஒரு நிறுவனமாகச் சோழர் காலத்தில் மேம்படுத்தப்பட்டது. அதற்கேற்ப, கோயில் மேலும் பல சமூக-பொருளிய-பண்பாட்டுச் செயல்பாடுகளை மேற்கொண்டது"* (மே.து.ராசுக்குமார்:2004:192). அப்போது அது நிலவுடைமை நிறுவனமாகவும் வளர்ந்தது. அதனை பல்வேறு வகைகளில் கோயில் வெளிக்காட்டியது. இதன் ஒருபகுதியாகத் தெய்வங்கள் நிலம் என்பதைக் குறிப்பதாகவும் அதில் விளையும் பயிர்களின் வண்ணமாகிய பச்சையைக் குறிப்பதாகவும் பெயரிடப்பட்டனர்.

## ஆ. இடப்பெயர்

'நிலம்' என்பது பொதுப் பெயராகும். அது ஊர்(சேரி), விளைநிலம், நத்தம், புறம்போக்கு என அதன் தன்மைக்கேற்பப் பல்வேறு விதமாகப் பிரிக்கப்பட்டது. மக்கள் வாழ்ந்த நிலப்பகுதி ஓர் ஊர் ஆகப் பெயர்பெற்றது. அங்குள்ள தெய்வங்கள் இடப்பெயரின் அடிப்படையில் பெயர் பெற்றனர்.

| தெய்வப்பெயர் | கோயில் | இருப்பிடம் | பழையபெயர் |
|---|---|---|---|
| 1. குருகூர்வல்லி | ஆதிநாதர் | ஆழ்வார்திருநகரி | குருகூர் |
| 2. வரமங்கைத்தாயார் | வானமாமலை | நான்குநேரி | ஸ்ரீவரமங்களம் |
| 3. வரகுணமங்கை | விசயாசனப்பொருமாள் | நத்தம் | ஸ்ரீவரகுணமங்களம் |
| 4. குளந்தைவல்லி | மாயக்கூத்தன் | பெருங்குளம் | திருக்குளந்தை |

| | | | |
|---|---|---|---|
| 5. திருப்பேரைநாச்சியார் | மகரநெடுங்குழைக்காதர் | தென்திருப்பேரை | தென்திருப்பேரை |
| 6.புளிங்குடிவல்லி | காய்சினவேந்தன் | திருப்புளியங்குடி | திருப்புளியங்குடி |
| 7.கோளூர்வல்லி | வைத்தமாநிதி | திருக்கோளூர் | திருக்கோளூர் |
| 8.குறுங்குடிவல்லி | நம்பி | திருக்குறுங்குடி | திருக்குறுங்குடி |
| 9.தொலைவில்லி | அரவிந்தலோசனர் | தொலைவில்லிமங்களம் | |
| 10.சிந்தாமணிநாதர் | சிந்தாமணிநாதர் | வாசுதேவநல்லூர் | |
| 11.சிவசைலநாதர் | சிவசைலநாதர் | சிவசைலம் | |
| 12.செயதுங்கவிண்ணகராழ்வார் | செயதுங்கஆழ்வார் | செய்துங்கநல்லூர் | |

ஆய்வுப்பகுதி ஊர்ப்பெயர்களான குருகூர், கோளூர், நெல்லை, வரகுணமங்கை, திருப்பேரை, திருக்குறுங்குடி என்பனவே அத்தலத்திலுள்ள தெய்வத்திற்கும் சூட்டப்பட்டன.

ஆழ்வார்திருநகரி நம்மாழ்வார் அவதரித்த தலமாகும். இதன் பழையபெயர் 'குருகூர்'. நம்மாழ்வார் இத்தலத்தைத் திருவாய்மொழியில் 'திருக்குருகூர்' (4:10:1) என்றே குறிப்பிடுகிறார். இங்குள்ள ஆதிநாதர் கோயில் தாயார் *'குருகூர்வல்லி'* எனப் பெயரிடப்பட்டுள்ளார். தமிழகத்தில் வைணவக் கோயில்களில் தாயார் 'வல்லி' என்னும் பின்னொட்டுப் பெயரினைக் கொண்டுள்ளார். 'வல்லி' என்பது கொடி எனப் பொருள் தரும் வடசொல்லாகும். இங்கு இது இளமை என்னும் பொருளில் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

*''வேள்விக்குடிச் செப்பேடுகளையும், சீவரமங்கலத்துச் செப்பேடுகளையும் வழங்கியவன் பாண்டியன் நெடுஞ்சடையன். இவன் சீவரன், சீமனோகரன், சினச்சோழன் என்ற வடமொழிப் பெயர்களையும் கொண்டுள்ளான்''* (கே.கே. பிள்ளை 2000:377). இவனது பெயரில் சீவரமங்கலம் என்னும் ஊர் ஏற்படுத்தப்பட்டது. இங்குள்ள வானமாமலைப் பெருமாள்

கோயில் தாயார் ஊரின் பெயரால் *'ஸ்ரீவரமங்கைத்தாயார்'* என அழைக்கப்படுகிறார். 'தாயார்' என்பது வைணவக் கோயில் இறைவியைக் குறிக்கும் மரபுச் சொல்லாகும். ('அம்மன்' என்பது சைவ மரபுச் சொல்லாகும்). இப்பகுதியே இன்று நாங்குநேரி என அழைக்கப்படுகின்றது.

தூத்துக்குடி மாவட்டம் நத்தம், பெருங்குளம் ஆகிய ஊர்களின் பழையபெயர்கள் முறையே வரகுணமங்கை, திருக்குளந்தை என்பதாகும். இத்தலங்களின் தாயார் ஊர்ப் பெயரால் முறையே 'வரகுணமங்கை'[1], 'குளந்தை வல்லி' எனப் பெயரிடப்பட்டுள்ளார்.

தென்திருப்பேரை, புளிங்குடி, திருக்கோளூர், தொலைவில்லி மங்களம் ஆகிய தலங்களின் தாயார் முறையே திருப்பேரைநாச்சியார், புளிங்குடிவல்லி, கோளூர்வல்லி, தொலைவில்லித்தாயார் என இடத்தின் பெயரால் அழைக்கப்படுகிறார். 'நாச்சியார்' என்பது மரியாதை காட்டும் சொல்லாகும். (திருநெல்வேலிப் பகுதியில் தொழிலாளர்கள் வேலை தருவோர் வீட்டுப் பெண்களை 'நாச்சியார்' என்றே அழைக்கின்றனர்).

திருக்குறுங்குடித் தலத்துப் பெருமாள், தாயார் ஆகிய இருவரும் இடத்தின் பெயராலே 'குறுங்குடி நம்பி', 'குறுங்குடி வல்லி' எனப் பெயரிடப்பட்டுள்ளனர். செயதுங்க நல்லூர் பெருமாள் கோயில் கல்வெட்டு இறைவனைச் 'செயதுங்க விண்ணகரத்தாழ்வார்' எனக்குறிப்பிடுகின்றது. 'விண்ணகரம்' என்பது வைணவக் கோயிலைச் சுட்டும் சொல்லாகும்.

இதுவரை பேசப்பட்ட தலங்கள் வைணவத் தலங்களாகும். தமிழகத்து வைணவம், தான் வாழ்கின்ற மண்ணோடு தன்னை மிக இறுக்கமாக இணைத்துக் கொள்ள இத்தகைய தெய்வப் பெயரிடு முறையைக் கையாண்டுள்ளது எனலாம். ஒப்பீட்டளவில் சைவத்தில் இப்பெயரிடுமுறை குறைவாகவே காணப்படுகின்றது.

சிவசைலத்தில் எழுந்துள்ள சிவன், 'சிவசைலநாதர்' என அழைக்கப்படுகின்றார். 'சைலம்' என்பது மலை எனப்பொருள் தரும் வடசொல்லாகும். இக்கோயில் ஒரு மலைக்கோயிலாகும்.

வாசுதேவநல்லூர்ச் சிவன் 'சிந்தாமணிநாதர்' எனப் பெயரிடப்பட்டுள்ளார். சிந்தாமணி என்பது இத்தலத்திற்குமிக அருகிலுள்ள ஓர் ஊராகும். இறைவன் வேறொரு தலத்துப் பெயரைத் தன் பெயராகக் கொண்டுள்ளதை விளக்கும் கதையொன்று இப்பகுதி மக்களிடம் வழக்கிலுள்ளது.

சிந்தாமணியில் கோயில் அமைக்க இறைவன் திருமேனி வடிக்கப்பட்டு மாட்டு வண்டியில் கொண்டு வரப்பட்டபோது மாடு வாசுதேவநல்லூர் என்ற ஊரிலிருந்து மேற் செல்ல மறுத்தது. அதனால் அவ்வூரில் கோயில் ஒன்றினைக் கட்டி இறைவனை அங்கு எழுப்பினர். அவர் சிந்தாமணி ஊருக்காக வடிவமைக்கப்பட்டதால் 'சிந்தாமணி நாதர்' என்ற பெயரினைப் பெற்றார். சிந்தாமணியும் வாசுதேவநல்லூரும் சுமார் 1 கி.மீ தொலைவிலுள்ள ஊர்களாகும்.

இறைவனை உள்ளூர் மயப்படுத்தும் வழிகளில் ஒன்றாகத் தெய்வங்கள் தலம் சார்ந்து பெயரிடப்படுகிறார்கள். தெய்வத்திற்கு இடப்பெயரிடுவது நாட்டார் மரபிலும் உண்டு. உதாரணமாக 'மாரியம்மன்' என்ற நாட்டார் தெய்வம் இடத்தின் அடிப்படையிலேயே 'இருக்கன்குடி மாரியம்மன்', 'சமயபுரம் மாரியம்மன்' எனப் பெயர் பெறுகிறது.

மேலே கூறப்பட்ட பன்னிரண்டு கோயில்களில் சிந்தாமணி, சிவசைலம் ஆகிய தலங்கள் தவிர்த்த பிற கோயில்கள் வைணவக் கோயில்களாகும். இவ்வைணவக் கோயில்களில் திருக்குறுங்குடி தலத்தில் மட்டும் தாயார், பெருமாள் ஆகிய இருவரும் தலத்துப் பெயரைக் கொண்டுள்ளனர். மற்ற

தலங்களில் தாயார் இடப்பெயரால் அழைக்கப்படுகிறார். இவை வைணவம் தான் சார்ந்துள்ள மண்ணின் மீது கொண்டுள்ள நெருக்கத்தினைக் காட்டுகின்றன.

## இ. தாவரப்பெயர்

மனிதன் ஆதியில் மரங்களில் தெய்வங்கள் குடியிருப்பதாகக் கருதி அவற்றை வழிபட்டான். அதன் வளர்ச்சியாக மனிதர்களும் தெய்வங்களும் தாவரங்களின் பெயரினைப் பெற்றனர். வேளாண் நிலங்களின் உபரி உற்பத்திகளே அந்நிலப்பகுதியிலுள்ள பெருங்கோயில்களின் எண்ணிக்கையையும், அதன் கட்டட அளவினையும், அங்கு நடத்தப்படும் சடங்கு மற்றும் திருவிழாக்களின் எண்ணிக்கையையும் நிர்ணயிக்கின்றன. இதனால் நிலப்பகுதியில் விளைகின்ற அல்லது விளைவிக்கப்படுகிற தாவரங்களின் பெயர்களைத் தெய்வங்களுக்குச் சூட்டியுள்ளனர்.

| தெய்வப்பெயர் | கோயில் | இருப்பிடம் | தாவரம் | தலவிருட்சம் |
|---|---|---|---|---|
| முக்களாலிங்கர் | பாபநாசர் | பாபநாசம் | முக்களா | முக்களா |
| வேணுவனலிங்கர் | நெல்லையப்பர் | திருநெல்வேலி | மூங்கில் | மூங்கில் |
| நெல்லையப்பர் | நெல்லையப்பர் | திருநெல்வேலி | நெல் | மூங்கில் |
| குற்றாலநாதர் | குற்றாலநாதர் | குற்றாலம் | ஆலம் | குறும்பலா |
| குறும்பலாவீசர் | குற்றாலநாதர் | குற்றாலம் | பலா | குறும்பலா |
| நாறும்பூநாதர் | நாறும்பூநாதர் | திருப்புடைமருதூர் | பூ | மருதமரம் |
| பூவணநாதர் | பூவணநாதர் | கோவில்பட்டி | பூ | |
| வில்வவனநாதர் | வில்வவனநாதர் | கடையம் | வில்வம் | |

'முக்களா' என்பது களா மரத்தின் ஒரு வகை ஆகும். இம்மரங்கள் நிறைந்த பகுதியில் பாபநாசம் சிவன் தோன்றியிருப்பதால் *'முக்களா*

*லிங்கர்'* என்ற பெயரினைப் பெற்றுள்ளார். இன்றும் இத்தலத்தில் முக்களா தலமரமாக வழிபடப்பெறுகின்றது.

இராமக்கோன் என்னும் இடையன் அரண்மனைக்குப் பால் கொண்டு செல்லுவது வழக்கம். அப்போது வழியிலிருந்த மூங்கில் தூறு ஒன்று இடையனின் காலை நாள்தோறும் இடறிவிட்டது. கோபம் கொண்ட இடையன் மூங்கில் தூறைக் கோடரியால் வெட்டுகையில் சிவபெருமான் தோன்றினார் என்பது திருநெல்வேலி நெல்லையப்பர் தோற்றப்புராணம் ஆகும். இதனால் இறைவன் *'வேணுவனநாதர்'* (வேணு-மூங்கில்(Oxytenanthera thwaitesi) என்ற பெயரினைப் பெற்றார். இத்தலத்தில் மூங்கில் மரம் தலவிருட்சமாக வழிபடப்பெறுகின்றது. இப்புராணத்தைச் சடங்காக நிகழ்த்துதலும் (ritual enactment) இம்மரத்தடியில் நிகழ்த்தப்படுகின்றது. *"தாமிரபரணி ஆற்றுப்படுகையில் நெல் மட்டும் பெரும்பான்மையாகப் பயிரிடப்படுகின்றது. இவை இரண்டு பூக்களாகப் பயிர்செய்யப்படுகின்றன"* (1879:05), *"திருநெல்வேலி மாவட்டத்தில் 22 வகையான நெல்கள் பயிரிடப்பட்டன"* என்கிறார் ஏ.ஜே.ஸ்டுவர்ட் (1879:196). நெல் வயல்களுக்கு நடுவில் இறைவன் இருப்பதால் 'நெல்லையப்பர்' எனப் பெயரிடப்பட்டுள்ளார்.

'குற்றாலம்' என்பது கல்லாலம(Ficus dalhousiae), கோழியாலம(Ficus callosa), போன்று ஆலில் ஒரு வகையாகும். இம்மரங்கள் நிறைந்திருந்த காட்டில் இறைவன் தோன்றியதால், *'குற்றாலநாதர்'* எனப் பெயரிடப்பெற்றுள்ளார் எனலாம். இவரது மற்றொரு பெயர் *'குறும்பலாவீசர்'*. சிற்றிலக்கியமான குற்றாலக் குறவஞ்சியும் இறைவனை இவ்வாறே குறிப்பிடுகின்றது. 'குறும்பலா' மரங்கள் இத்தலத்தில் இன்றும் நிறைந்து காணப்படுகின்றன. இத்தலத்தில் குறும்பலாவே(Artocarpus integrifolia ) தலமரமாக வழிபடப் பெறுகின்றது.

திருப்புடைமருதூர்ச் சிவன் நாறும்பூ நாதர் ஆவார். 'மருது' இக்கோயில் தலமரமாகும். கோவில்பட்டிச் சிவன் 'பூவண்ணநாதர்' ஆவார். இவரை மக்கள் 'பூவணநாதர்' என்றே அழைக்கின்றனர். இவை பூவின் மணம், வண்ணத்தில் அடிப்படையில் சூட்டப்பட்ட பெயர்களாகும். சிவனுக்கு ஏற்ற மரமாக வில்வம் கருதப்படுகின்றது. வில்வ இலையால் வேடன் ஒருவன், சிவன்ராத்திரி அன்று சிவனை வழிபட்டதால் முக்தியடைந்தான் என்பது புராணக்கதையாகும். சிவனுக்கும் வில்வத்திற்குமான உறவினை வெளிப்படுத்தும் விதமாக இறைவன் 'வில்வவன நாதர்' எனவும் பெயரிடப்படுகிறார்.

"*தெய்வங்கள் ஆல், அரசு, இரட்டி, இலஞ்சி, கடம்பு, பலா, வாகை, வன்னி, வெள்ளி, வேம்பு, வேங்கை ஆகிய மரங்களில் உறைவதாக மக்கள் நம்பினர்*" என்று குறிப்பிடும் கே.ஆர். சீனிவாசன் (1971:08) இவ்வகையான வழிபாடு ஹரப்பா நாகரிகத்திலேயே உள்ளது என்கிறார். மரங்களில் தெய்வங்கள் தங்குவதாகக் கருதினார்கள் என்பதற்குச் சங்கப்பாடல்களில் சான்றுகள் உள்ளன. '*கடவுள் மராஅத்த*' (அகம் 270:12), '*எம்மூர் வாயில் ஒண்டுறைத் தரீஇய / கடவுள் முதுமரத்து...*'(நற் 83:1-2), '*கடவுளாலத்து...*'(புறம் 191:1) என்பன அச்சான்றுகளாம். பின்னர் கற்றளிகளாகக் கோயில்கள் கட்டப்பட்ட போது பழைய நினைவாக மக்கள் மரத்தைத் 'தலமரமாக' வழிபடலாயினர். இதன் தொடர்ச்சியாகத் தெய்வத்திற்குத் தாவரம் சார்ந்து பெயரிடத் தொடங்கினர்.

### 1.2.2.2. **வகை 2. அரசுசார் பெயர்**

மன்னர்கள், அமைச்சர்கள், தளபதிகள், அதிகாரிகள் ஆகியோர் நிலங்களாக, கால்நடைகளாக, பொன்அணிகலன்களாக, பாத்திரங்களாகக் கோயிலுக்குச் சொத்துக்களைத் தானமாக வழங்கினர். இதனால்

கோயில்களின் சடங்குமுறைகள் அரண்மனைச் செயற்பாடுகளை ஒத்து அமையத் தொடங்கின. அதாவது கொடியேற்றம், செங்கோல் கொடுத்தல், தெய்வவீதி உலாக்கள் ஆகியன அரண்மனையினை ஒத்த செயல்பாடுகளாகும். அடுத்து அதன் வளர்ச்சியாக மன்னர்களின் பெயர்களையும் தெய்வத்திற்குச் சூட்டினர்.

*"வேள்விக்குடிச் செப்பேட்டில் குறிக்கப்படும் நெடுஞ்சடையன் பராந்தகன் என்ற முதல் வரகுணபாண்டிய மன்னன் மகன் ஸ்ரீவல்லபன் என்பவன் சாளக்கிராமத்தில் கோயில் எடுப்பித்து அதற்கு வரகுணஈச்வரமுடையார் என்று பெயரிட்டு வழங்கினான்"* எனவும் அம்பாசமுத்திரம் மன்னார்கோவில் இராசகோபாலசுவாமி கோயில் *"முதலாம் இராசேந்திரசோழன் காலத்தில் (கி.பி.1025) கட்டப்பட்டது. கல்வெட்டுகளில் இக்கோயில் இராஜேந்திர சோழ விண்ணகரம் என அழைக்கப்படுகின்றது"* (அரங்கராஜன், 2000:264-266) என அரசனின் பெயரில் கோயில்கள் எழுப்பப்பட்டதை அரங்கராஜன் தெரிவிக்கின்றார்.

*"நாட்டின் பெருவேந்தன் இறைவனுக்குச் சமம் எனவும் அவனும் இறைவனே ஆவான் எனவும் கி.பி நான்காம் நூற்றாண்டில் வட இந்திய குப்தப் பேரரசுகாலத்தில் வலியுறுத்தப்பட்டது. சோழர்கள் இந்த வழக்கத்தை ஒப்புக் கொண்டு தஞ்சை இராசராசேச்சுவரம் போன்ற கோயில்களைத் தங்கள் பெயரிட்டழைக்கத் தொடங்கினார்கள். பாண்டியனைப் பரமேசுவரக் கடவுள் என்றே கி.பி. 1260 அளவிலான 'ஜெகத் ஆதாரத்' என்ற வடமொழிப் பிரசஸ்தி (மெய்க்கீர்த்தி) அழைத்தது"* எனக் கருத்துரைக்கின்றார் ம.ராசேந்திரன் (2000:94). இச்செய்திகள் கோயிலுக்கும் அரசர்களுக்கும் இடையிலான உறவினையும், தெய்வங்கள் அரசர்களின் பெயர் பெற்றதையும் காட்டுகின்றன. ஆய்வுக்களப்பகுதியில் கிடைக்கப்பெற்ற அரசுசார் தெய்வப்பெயர்களை மன்னன்பெயர், படைப்பெயர் என இரண்டாக வகைப்படுத்தலாம்.

## அ.மன்னன்பெயர்

| தெய்வப்பெயர் | மன்னன் | இருப்பிடம் |
|---|---|---|
| மனோன்மணீசுவரர் | மனோமயன் | விஜயநாராயணம் |
| திருவழுதீஸ்வரர் | பாண்டியர் குலப்பெயர் | ஏர்வாடி ,பெருங்குளம், வழுதூர் |
| அரிகேசரியீசுவரமுடையார் | அரியநாதர் | அரிகேசவநல்லூர் |
| ஆதித்தவனேஸ்வரர் | சோழமன்னன்பெயர் | மேலச்செவல், துப்பாக்குடி |
| சௌந்தரபாண்டீஸ்வரர் | சௌந்தரபாண்டீஸ்வரர் | மேலக்கருவேலங்குளம் |
| வரகுணபாண்டீஸ்வரர் | வரகுணன் | இராதாபுரம் |
| விக்கிரமபாண்டீஸ்வரர் | விக்கிரமபாண்டீஸ்வரர் | வீரவநல்லூர் |
| குலசேகரமுடையார் | குலசேகரமுடையார் | கல்லிடைக்குறிச்சி |
| குலசேகரமுடையார் | குலசேகரமுடையார் | கொண்டாநகரம் |
| குலசேகரநாதர் | குலசேகரநாதர் | தென்காசி |
| கச்சி கொண்ட காஞ்சி- -விஜய பாண்டீஸ்வரர் | விஜயபாண்டீஸ்வரர் | குலசேகரப்பட்டினம் |
| நிலையுடைய பாண்டீசுவரர் | நாகேஸ்வரமுடையார் | கல்லிடைக்குறிச்சி |
| சேரசோழ பாண்டீசுரவரர் | சேரசோழ பாண்டீசுரவரர் | திருக்கோளூர் |

*"பல்லவ, சோழ, பாண்டியர்களின் பெயர்களில் பல சிவ, விஷ்ணு ஆலயங்கள் தமிழகத்தில் எடுக்கப்பட்டிருந்த செய்தி கல்வெட்டுகளால் புலப்படுகின்றன. உதாரணமாக மாமல்லையில் இராஜசிம்ம பல்லவீச்சுரம், சத்திரிய சிம்ம பல்லவீச்சுரம் ஆகிய கோயில்கள் பல்லவ மன்னன் இராஜசிம்மனின் பெயராலும் நார்த்தாமலையில் உள்ள விஜயாலய சோழீச்சுரம், தொண்டைமானாற்றிலுள்ள ஆதித்திய சோழீச்சுரம், தஞ்சையிலுள்ள இராஜராஜீசுவரம் ஆகியவை முறையே விஜயாலயன், ஆதித்தன், இராஜராஜன் ஆகியவர்களின் நினைவாக எழுப்பப்பட்ட கோயில்கள் ஆகும்"* என்கிறார் நடன.காசிநாதன்(1977:91).

ஆய்வுக்களத்தில் அமைந்துள்ள வடக்கு விஜயநாராயணம் தலத்து இறைவனான சிவன் 'மனோன்மணீசுவரர்' ஆவார். இக்கோயிலில் காணப்படும் மாறஞ்சடையனின் இரண்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு இறைவனை *'நாட்டாற்றுப் போக்கு பிரம்மதேயம் மனோன்மயனீச்சுரத்துப் பெருமானடிகள்'* எனவும், இதே மன்னனின் பத்தொன்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு *'மனோமய ஈச்சரத்துக் கற்றளிப் பெருமானடிகள்'* எனவும் குறிப்பிடுகின்றன. சோழன் தலைகொண்ட வீரபாண்டியனின் பன்னிரண்டாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டிலும் இறைபெயர் *'மனோன்மணீசுவரத்துப் பெருமானடிகள்'* என்றே வெட்டப்பட்டுள்ளன.

இவ்வூரில் மனோமயன் ஏரி என்னும் குளம் ஒன்றுள்ளது. இதனை வெட்டியவன் மனோன்மயன் மன்னனே என்பதை இக்குளத்தில் காணப்படும் சடையவர்மன் ஸ்ரீவல்லபனின் கல்வெட்டுச் செய்தியால் அறியலாம். *'இக்கல்வெட்டில் குறிப்பிடும் மனோமயன் என்பவன் ஜலசயனப்படாரற்கு விளக்கு எரிப்பதற்கு 150 ஆடுகள் தானமாக வழங்கிய வெண்பைக்குடி நாட்டின் வெண்பைக்குடி கலத்திருக்கை காவிதி ஆயின மனோன்மயன் மாறன் என்பவனே'* என்பதைத் திருப்பத்தூர் கல்வெட்டின் மூலம் நிருபிக்கின்றார் கல்வெட்டறிஞர் செந்தில் செல்வக்குமரன்(1983:34-45). இங்கு சிவன் கோயில் ஒன்றினையும் கட்டினான் என்கிறார்.

மனோன்மயன் மன்னன் எடுப்பித்த இறைவனுக்கு அவனது பெயரே இடப்பட்டுள்ளது. மனோன்மயனீச்சுவரர் என்ற பெயர் காலப்போக்கில் மனோன்மணீசுவரர் என மாறியுள்ளது எனலாம். இறைவி இறைவனை ஒத்து மனோன்மணீசுவரி என அழைக்கப்படுகிறார்.

'வழுதி' என்பது பாண்டிய மன்னர்களின் குலப்பெயராகும். *'வழுதி' என்ற சொல் 'வழித்தோன்றல்கள்' என்னும் பொருளில் தோன்றியதாக*

*எண்ண இடமுண்டு* (தமிழ்நாட்டு வரலாறு- சங்ககாலம் 'அரசியல்':1983:369). வழுதி என்னும் பெயரில் பாண்டிய மன்னர்கள் பலர் வாழ்ந்துள்ளனர். *"பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி' பாண்டிய அரசர்களுள் காலத்தால் முந்தியவனாகக் காணப்படுகின்றான்* (தமிழ்நாட்டு வரலாறு- சங்ககாலம் 'அரசியல்':1983:370). 'கானப்பேர் எயில் கடந்த உக்கிரப் பெருவழுதி' என்ற பெயர் புறநானூற்றில் காணப்படுகின்றது. 'வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெரும்வழுதி' என்ற பெயரும் பாண்டியன் ஒருவனின் பெயராகும்.

பாண்டியர்களின் குலப்பெயரில் ஏர்வாடி, பெருங்குளம், வழுதூர் ஆகிய தலங்களின் சிவன், 'திருவழுதீஸ்வரர்' எனப் பெயரிடப்பட்டுள்ளார். ஆய்வுப்பரப்பில் நவதிருப்பதி என அழைக்கப்படும் கோயில்கள் அமைந்துள்ள நிலப்பகுதி முற்காலத்தில் 'திருவழுதி வளநாடு' என்றே அழைக்கப்பட்டன.

தமிழகத்தின் தென்பகுதியில் கி.பி 575 முதல் 880 வரையிலானவை முதல் பாண்டியப் பேரரசு காலமாகும். கி.பி.575இல் தென்தமிழ் நாட்டைக் களப்பிரரிடமிருந்து பாண்டியன் கடுங்கோ விடுவித்தான். கடுங்கோனின் அரசாட்சியைத் தொடர்ந்து 670 இல் அரிகேசரி மாறவர்மன் என்ற மன்னன் அரியணை ஏறி 710 வரை அரசாட்சி செய்தான்.

இந்த அரிகேசரி மன்னன் பெயரால் அரிகேசரிநல்லூர் என்ற ஊர் உருவாக்கப்பட்டு அங்கு, 'அரிகேசரியீஸ்வரம்' என்ற கோயில் எழுப்பப்பட்டது. இறைவன் தற்போது 'அரியநாதசுவாமி' என அழைக்கப்பட்டாலும், இக்கோயிலில் காணப்படும் சடாவர்மன் குலசேகரன் (கி.பி. 1190-1221) கல்வெட்டு இறைவனை 'அரிகேசரியீஸ்வரமுடையார்' என்றே குறிப்பிடுகின்றது.

'ஆதித்தன்' என்பது சோழ மன்னர்களது குலப்பெயராகும். முதலாம் "*ஆதித்தன் சித்தூர் மாவட்டம் காளத்தியின் அருகேயுள்ள தொண்டை மானாடு என்னுமிடத்தில் இறந்தான். இவனது மகன் பராந்தகன் தந்தை இறந்த இடத்தில் கோதண்ட இராமேசுவரம் என்றும், ஆதித்தீசுவரம் என்றும் அழைக்கப்பட்ட கோயிலை எழுப்பினான்*" (நீலகண்டசாஸ்திரி:1989:155). 'ஆதித்தன்' என்ற பெயரில் மன்னர் பலர் பாண்டிநாட்டை ஆண்டுள்ளனர். இம்மன்னர்கள் பெயரால் மேலச்செவல், துப்பாக்குடிச் சிவன், ஆதித்தவனேஸ்வரர் எனப் பெயரிடப்பட்டுள்ளார்.

'வரகுணன்' என்னும் பெயரில் பாண்டிய மன்னர்கள் பலர் வரலாற்றில் இருந்துள்ளனர். முதலாம் வரகுணனின் காலம் கி.பி. 792-835 வரையினதாகும். "*திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள அம்பாசமுத்திரம், தளபதிசமுத்திரம், கழுகுமலை, ஏர்வாடி என்ற ஊர்களில் இவனது ஆட்சியின் 39, 41, 42, 43 ஆம் ஆண்டுக் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன*" (சதாசிவ பண்டாரத்தார்:1969:61). இவன் பாண்டிய நாட்டையும் சோழ நாட்டையும் ஆட்சி செய்தான். இவனை அடுத்து ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் ஆட்சி செய்தான். இவனை அடுத்து அரியணை ஏறியவன் இரண்டாம் வரகுணன் ஆவான். இவன் பாண்டிய நாட்டை கி.பி 862-885 காலகட்டத்தில் ஆண்டான். இந்த மன்னர்களின் பெயரில் இராதாபுரம் சிவன், *வரகுணபாண்டீஸ்வரர்'* எனவும் விஜயநாராயணம் பெருமாள் *வரகுண விண்ணகராழ்வார்* எனவும் பெயர்பெற்றிருக்க வேண்டும். மன்னர் யாரெனச் சரியாக அறியமுடியவில்லை.

அரிகேசரி பராங்குச மாறவர்மனுக்கும் கங்க அரசன் மகள் பூசுந்தரிக்கும் பிறந்தவன் நெடுஞ்சடையன் பராந்தகன். இவன் 'சடையவர்மன்' என்னும் பட்டம் சூடி கி.பி 765 முதல் 790 வரை ஆட்சி புரிந்தான். வேள்விக்குடிச் செப்பேடுகளும், சீவரமங்கலச் செப்பேடுகளும் இவனது

போர்களைப் பேசுகின்றன. இவன் சீவரன், சீமனோகரன், சினச்சோழன், தென்னவானவன், விக்கிரமபராகன், வீரபுரோகன் என்ற சிறப்புப் பெயர்களைப் பெற்றிருந்தான் எனச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன. இந்த மன்னது சிறப்புப் பெயரினைக் கொண்டு வீரவநல்லூர்ச் சிவன், 'விக்கிரமபாண்டீசுவரர்' எனப் பெயரிடப்பட்டுள்ளார்.

*"சடையவர்மன் குலசேகர பாண்டியன் என்ற மன்னன் மாறவர்மன் சீவல்லபனுடைய புதல்வன் ஆவான். இவன் மெய்க்கீர்த்தி 'பூதலமடந்தை' என்று தொடங்குவதாகும். இவன் திருநெல்வேலியிலிருந்து பாண்டிநாட்டின் தென் பகுதியை ஆட்சிபுரிந்து கொண்டிருந்தான்"* (சதாசிவ பண்டாரத்தார்:1969:94). இவனது ஆட்சிக்காலம் கி.பி. 1132 முதல் 1169 வரையினதாகும். இந்த மன்னன் பெயராலே கொண்டாநகரம் (திருநெல்வேலி), கல்லிடைக்குறிச்சி கோயில்களின் இறைவன் 'குலசேகரமுடையார்' எனப் பெயர் சூட்டப்பட்டுள்ளார்.

தென்காசியைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி செய்த நெல்வேலி மாறன்(1552-1564) என்ற பாண்டியனின் பட்டப்பெயர் 'குலசேகரபாண்டியன்' என்பதாகும். *"இவனது மகன் சடையவர்மன் அதிவீரராம பாண்டியன் (1564-1604) தென்காசியில் சிவன்கோயில் ஒன்றினை எழுப்பி அதில் குலசேகர பாண்டியன் எனத் தன் தந்தையின் பெயரை இறைப் பெயராகச் சூட்டினான்"* (Travancore Archaeological Series Vol I : Page 50). இதற்கு அருகில் இவன் எடுப்பித்த விண்ணகரம் ஒன்றும் உள்ளது என்கிறார் சதாசிவ பண்டாரத்தார் (1969:164)

பள்ளக்கால் பெருமாள் 'உதயமார்த்தாண்ட விண்ணகராழ்வார்' எனப் பெயரிடப்பட்டுள்ளார். 'உதயமார்த்தாண்டன்' என்பவன் கேரள மன்னனாவான். *"உடையவர்மன் சீவல்லப பாண்டியன் 1534முதல் 1543 வரை தென்பாண்டி நாட்டுப்பகுதியை ஆண்டான். இவன் காலத்தில் திருவாங்கூர் நாட்டு*

*மன்னன் உதயமார்த்தாண்டவர்மன் தென்பாண்டிநாட்டைக் கைப்பற்றிக் கொண்டான். அத்திருவாங்கூர் மன்னன் கல்வெட்டுகள் பிரம்மதேசம், சேரமாதேவி, அம்பாசமுத்திரம், களக்காடு ஆகிய ஊர்களில் உள்ளதால் இப்பகுதிகள் அவனது ஆட்சிக்கு உட்பட்டிருந்தன என்பது திண்ணம்" (1971:102)* என்கிறார் அ.கி.பரந்தாமனார்.

இம்மன்னனது பொருளுதவியால் ஏற்படுத்தப்பட்ட பூசை 'உதயமார்த்தாண்டம்' என்னும் பெயரில் கோயில்களில் நடைபெறுகின்றது. பின்னர் இது நாள்சடங்கின் ஒரு காலபூசைக்குரிய பெயராகவும் மாறியது. திருச்செந்தூர் சுப்பிரமணியர் கோயிலில் *அதிகாலை 6.45 மணிக்கு மூலவருக்கு நடைபெறும் முதல் சடங்கும், காலை 7.45 மணிக்கு சண்முகருக்கு(உற்சவர்) நடைபெறும் இரண்டாம் பூசையும் உதயமார்த்தாண்டம் என அழைக்கப்படுகின்றன. மூலவருக்கு காலை 6 மணிக்கு நடத்தப்படும் திருமுழுக்கு 'உதயமார்த்தாண்ட அபிசேகம்'* என *அழைக்கப்படுகின்றது. இதற்கான பொருளுதவியை உதயமார்த்தாண்டன் என்ற சேரமன்னனே ஏற்படுத்தினான். அவனுக்கு கோயில் மரியாதை செய்ய மறுத்ததால் இச்சடங்கிற்கான பொருளுதவி நிறுத்தப்பட்டது'*(1998:49) என்கிறார் ந.கல்யாணசுந்தரம். உதயமார்த்தாண்டன் பெயரால் பள்ளக்கால் பெருமாள் அழைக்கப்படுகிறார்.

மன்னார் கோயில் *"இராஜகோபாலசுவாமி கோயிலில் காணப்படும் இராசேந்திர சோழ மன்னனின் 24ஆம் ஆட்சியாண்டுக் (கி.பி.1036) கல்வெட்டு இக்கோயில் சேரமன்னன் இராசசிம்மனால் கட்டப்பட்டு சோழமன்னன், இராசேந்திர சோழனது பெயரிடப்பட்டது"* என்கிறார் ஆர்.திருமலை(1980:10)

*"பாண்டியமன்னன் இராசசிம்மனின் தாய் வானவன் மாதேவி, இவள் சேர நாட்டு மன்னன் மகளாவாள். அச்சேர மன்னரிய தாய் மாமன்*

*வழியே இராசசிம்மனின் பட்டத்தரசியும் அமைந்தாள். அவள் மகனாகத் தோன்றியவனே வீரபாண்டியன். இவன் வீரகேரளன், விநயகஞ்சுகன், வீசாலசீலன், என்ற சிறப்புப் பெயர்களைப் பெற்றிருந்தான் எனச் சிவகாசிச் செப்பேடு குறிப்பிடுகின்றது"* (சுப்பிரமணியம்.பூ :1983:216). வீரகேரளன் என்ற சிறப்புப் பெயரால் மேலச்செவல் இறைவன் பெயரிடப்பட்டுள்ளார்.

பத்தமடை பில்வநாதர்(வில்வநாதர்) கோயிலில் காணப்படும் கல்வெட்டு இறைவனைச் 'சீவல்லப ஈஸ்வரமுடையார்', 'சீவல்லவயீச்சுரமுடைய நாயனார்', 'சீவல்லவ யீஸ்வரமுடைய பரமசுவாமி' எனக் குறிப்பிடுகின்றது. முதலாம் வரகுணன் என்ற பாண்டிய மன்னனின் மகன் சீமாறன் சீவல்லபன். இவன் குன்னூர், சிங்களம், விழிஞம் ஆகிய இடங்களில் வெற்றி பெற்று அழியாத வாகை சூடினான். இம்மன்னரது பெயரால் பத்தமடைச் சிவன், 'சீவல்லபன்' எனப் பெயரிடப்பட்டுள்ளார்.

மன்னர்கள் பல அபிசேகப்பெயர்களைக் கொண்டுள்ளனர். அபிசேகப்பெயர்கள் என்பன மன்னர் தான்வென்ற நிலப்பகுதியின் அரசப்பெயரினைத் தன்பெயருடன் இணைத்துக்கொள்வதாகும். *"சோழபாண்டியன், சோழகேரளன் என்பன அபிசேகப் பெயர்களாகும். இவை இராசாதிராசன் தான் வென்ற பாண்டிய நாட்டுப் பகுதியையும், சேரநாட்டுப் பகுதியையும் தன் தம்பியருக்கு அளித்துப் பெயர் சூட்டிய செய்தியைக் குறிப்பனவாகும். அந்தந்த நாட்டு மக்களுக்கு மன்னனிடம் நம்பிக்கையும், மதிப்பும், நல்எண்ணமும் ஏற்படவேண்டும் என்ற காரணத்தால் இவ்வாறு அபிசேகப் பெயர்கள் பல சூட்டப்பட்டுள்ளன"* (சுப்பிரமணியம்.பூ :1983:43). பாண்டி நாடு சேர, சோழ, பாண்டிய மன்னர்களால் ஆளப்பட்டதால் திருக்கோளூர்ச் சிவன் சேர சோழ பாண்டீசுவரர் எனப் பெயரிடப்பட்டுள்ளார் எனலாம்.

இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் இறந்த பிறகு பாண்டிநாட்டை ஆட்சிபுரிந்தவன் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன். இவன் 1251ஆம் ஆண்டில் முடிசூட்டப்பட்டான். *"இவன் தெலுங்குச் சோழனாகிய கண்டகோபாலனைப் போரில் வென்று காஞ்சிமாநகரைக் கைப்பற்றிய காரணம் பற்றி இவன் 'காஞ்சிபுரவராதீசுவரன்', 'காஞ்சீபுரங்கொண்டான்' என்னும் பட்டப்பெயர் பெற்றான்"* (T.V.சதாசிவபண்டாரத்தார்:1969:133). இம்மன்னனது பட்டப்பெயரால் குலசேகரன்பட்டனம் சிவன், *'கச்சிகொண்ட விஜய காஞ்சி பாண்டீசுவரர்'* எனப் பெயரிடப்பட்டுள்ளார். கச்சி என்பது காஞ்சிபுரத்திற்கு அருகிலுள்ள ஓர் ஊராகும்.

*"கங்கைகொண்ட சூரியத்தேவன் வாணாதிராயன் காலிங்கராயன் என்பவன் மாறவர்மன் குலசேகரபாண்டியன்(1268-1311) காலத்தில் மந்திரியாக விளங்கினான். இவன் பாண்டியநாட்டு திருமாலிருஞ்சோலை அழகர்கோயில் தாயாருக்கு கோயில் ஒன்றினைக்கட்டி அவருக்கு தனது தாயார் 'சுந்தரவல்லி நாச்சியார்' என்னும் பெயரைச் சூட்டினான்"* (வெ.வேதாசலம்:1987:47). காலிங்கராயன் தாயார் பெயரே வீரவநல்லூர் சுந்தரராசப் பெருமாள் கோயில் தாயாருக்குச் சூட்டப்பட்டுள்ளது எனலாம்.

### 1.2.2.2.2 ஆ. படைப்பெயர்

பெருங்கோயில்கள் வழிபடும் இடங்கள் மட்டுமல்ல, அவை மருத்துவமனைகளாக, நீதிமன்றங்களாக, சத்திரங்களாக, கருவூலமாக பன்முகத் தன்மையில் செயல்பட்டுள்ளன. இந்தப் பன்முகத் தன்மையில் ஒன்று, அவை மன்னர்களின் போர்ப்படைகள் தங்கும் 'படைவீடாகச்' செயல்பட்டதாகும். இந்த அரசச் செயல்பாட்டினை அடையாளப்படுத்துவதாக பெருந்தெய்வங்கள் பெயரிடப்பட்டுள்ளன.

**திருக்கடுக்கை மூன்றீஸ்வரர்: பாப்பாக்குடி**

பாப்பாக்குடிச்சிவன், 'திருக்கடுக்கை முன்றீஸ்வரர்' என மக்களால் அழைக்கப்படுகிறார். கோயில் கல்வெட்டுகளில் இப்பெயர் 'முன்றீஸ்வரமுடையார்' எனப் பொறிக்கப்பட்டுள்ளது. "*தமிழ்ச் சாசனங்களிலே குறில், நெடில் வேறுபாடு நன்கு பேணப்படவில்லை என்றே கூறலாம். எகர ஏகாரங்களையும், ஒகர ஓகாரங்களையும் எழுதும் போது குறில் நெடில் வேறுபாடு பேணப்படாமையால் ஏனைய குறில் நெடில் வேறுபாடுகளையும் பேணாத இயல்பு வளர்ந்திருக்க வேண்டும்*" (ஆ.வேலுப்பிள்ளை:1971:58). கல்வெட்டுகளில் மெய்யெழுத்தின் குறில், நெடில் வேறுபாடுகளை வாசிப்பவரே ஊகித்தறிய வேண்டும். அதன் படி முன்றீஸ்வரர் என்பது மூன்றீஸ்வரர் என்றே வாசிக்கப்படவேண்டும். மூன்றீஸ்வரர் என்பது மூன்று கை ஈசுவரர் என்பதன் திரிபாக இருக்கலாம் என்பர்.

"*திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த அம்பாசமுத்திரத்தை அடுத்துள்ள திருவாலீசுரத்திலிருக்கும் அரியதொரு கல்வெட்டு அங்குள்ள மூன்று கை மகாசேனை (மூன்று அங்கங்களைக் கொண்ட பெரும் சேனை) யைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளைத் தருகின்றது. அக்கல்வெட்டு முதலாம் இராஜராஜன் அல்லது முதலாம் இராசேந்திரன் காலத்தில் எழுதப்பட்டதாகத் தெரிகின்றது* (நீலகண்டசாஸ்திரி:1989:620).

'மூன்று கை' என்பது மூன்று கை மகாசேனை என்ற சோழர் படைக்குழுவின் பெயராகும். "*இதனைக் காலாட்படை, குதிரைப்படை, மற்றும் யானைப்படை என்ற மூன்று வகையான பெரும் பகுதிகளைக் கொண்ட படை என்று விளக்கலாம்*" (தமிழ்நாட்டு வரலாறு- சங்ககாலம் 'அரசியல்':1998:420). "*முதலாம் குலோத்துங்கன் காலத்தில் சேரன்மகாதேவி*

*பக்தவச்சலர் கோயிலுக்கு அளிக்கப்பட்ட சில அறங்களைப் பாதுகாக்கும் பொறுப்பு மூன்று கை மாசேனை என்ற பெயருள்ள படை ஒன்றிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. திருவாலீசுவரத்து கோயிலும் இச்சேனையின் பாதுகாப்பிலேயே இருந்து வந்தது''* எனக் கல்வெட்டுச் செய்தி எடுத்துரைப்பதைக் கே.கே.பிள்ளை (2000:326) சுட்டிக்காட்டுகின்றார். திருவாலீஸ்வரத்தில் தங்கியிருந்த சோழர் படையின் பெயராலே இதன் அருகிலுள்ள பாப்பாக்குடிச் சிவன் 'மூன்றீஸ்வரர்' எனப் பெயரிடப்பட்டிப்பதை அறியமுடிகிறது.

**மூன்றீஸ்வரமுடைய நாயனார்: மணற்படைவீடு**

'மணற்படைவீடு' என்ற சொல்லே இவ்விடத்தில் படைக் குழுக்கள் தங்கியிருந்ததைச் சுட்டுகின்றது. *"நெல்லையில் பாண்டிய மன்னனுக்குரிய படைவீடு ஒன்று பொருநையாற்றங்கரையில் இருந்தது என்றும் இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனது 8-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டினால் அறிகிறோம்* "(1990:07) என்கிறார் பு.பா.உமாமகேசுவரி. படைக்குழுவின் பெயரால் இறைவன் மூன்றுகை மகாசேனை ஈசுவரர் எனப் பெயரிடப்பெற்று, இது பின்னர் மக்கள் வழக்கில் முன்றீஸ்வரமாகி, பின் முத்தீஸ்வரமுடையாராக மாறியுள்ளது. பாளையங்கோட்டைக்கு அருகிலுள்ள இக்கோயில் கல்வெட்டு இவ்வூரை *'சீவல்லபமங்கலத்து கீழ்பிடாகை மணற்படைவீடான அம்பலத்தாடி நல்லூர்'* (நேரில் வாசித்தது) எனக் குறிப்பிடுகிறது.

இக்கோயிலில் காணப்படும் மாறவர்மன் வீரபாண்டியன் கல்வெட்டு இறைவனை, 'மூன்றீஸ்வரமுடைய நாயனார்' என்றே குறிப்பிடுகின்றது. *"மாறவர்மன் வீரபாண்டியன் என்பவன் அரசப் பிரதிநிதியாயிருத்தல் வேண்டும் என்பது திண்ணம். இவன் ஆட்சிக் காலமும் இவனைப் பற்றிய பிற செய்திகளும் தெரியவில்லை''* என்கிறார் சதாசிவ பண்டாரத்தார்(1969:145).

அரசர்கள், பட்டத்தரசிகள், தளபதிகள் ஆகியோர்களின் இயற்பெயர்கள், வம்சப்பெயர்கள், அபிசேகப்பெயர்களுடன் படைப்பெயர்களையும் பெருங்கோயில் தெய்வத்திற்கு இடுவது வழக்கம். இது பெருங்கோயில் அரசதிகார மையமாகச் செயல்பட்டதை வெளிப்படுத்துகின்றது.

### 1.2.2.3. வகை 3 : கதையாடல் பெயர்

தெய்வம் குறித்த கதைகள் எல்லாச் சமூக மக்களிடமும் ஏராளம் காணப்படுகின்றன. இவை அளவில் சிறியனவாகவோ, பெரியனவாகவோ இருக்கலாம். இக்கதைகள் தெய்வத்தின் பெயருக்கான காரணத்தை விளக்குகின்றன. கதைகளில் தோன்றும் அடியவர்களைக் கொண்டு அவற்றைத் தொன்மக்கதைகள், நாட்டார்கதைகள் என வகைப்படுத்திக் காணலாம்.

#### அ. தொன்மக்கதைப் பெயர்

| இறைப்பெயர் | இருப்பிடம் | தொன்மம் |
|---|---|---|
| வாலீஸ்வரர் | திருவாலீஸ்வரம் | வாலி வழிபடுதல் |
| பால்வண்ணநாதர் | பேட்டை(திருநெல்வேலி) | பசுபால் சுரத்தல் |
| பால்வண்ணநாதன் | கரிவலம்வந்த நல்லூர் | பாற்குளத்தில் மூழ்குதல் |
| திரிபுராந்தகர் | பாளையங்கோட்டை | முப்புரம் எரித்தல் |
| கருத்தீஸ்வரர் | பாப்பான்குளம் | இராமனுக்கு கருத்துரைத்தல் |
| ஆனைகாத்தருளிய பெருமாள் (கஜேந்திரவரதர்) | அத்தாளநல்லூர் | முதலையிடமிருந்து யானையை காத்தல் |

நெல்லை மாவட்டத்துப் பிரம்மதேசத்திலிருந்து ஒரு கி.மீ தொலைவில் கடனா நதிக்கரையில் திருவாலீஸ்வரம் ஊர் அமைந்துள்ளது. இங்குள்ள

சிவன் 'வாலீஸ்வரர்' என அழைக்கப்படுகின்றார். *'இக்கோயில் கி.பி ஒன்பதாம் நூற்றாண்டைச்சார்ந்த முதற்பராந்தகன் என அழைக்கப்படும் கோப்பரகேசரியால் கட்டப்பட்டதாகும்'* (இராசமாணிக்கனார்:1974:27). இப்பகுதியில் குடியிருப்புகள் ஏதும் இல்லை. கோயில் அதன் கட்டடக்கலைச் சிறப்பிற்காக மத்திய தொல்லியல் துறையினரால் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. இத்தலத்து இறைவனை சிவபக்தனான வாலி வழிபட்டதால் 'வாலீஸ்வரர்' எனப் பெயரிடப்பட்டார் என்பர். இது வாலீஸ்வரர் என்ற பெயருக்கான பொது விளக்கமாகும்.

'வாலீஸ்வரர்' என்னும் பெயரில் தமிழகத்தில் பல கோயில்கள் காணப்படுகின்றன. *வடஆற்காடு மாவட்டம் குரங்கணில் முட்டத்துச் சிவன் 'வாலீசுவரர்' ஆவார்* (முத்துசாமிபிள்ளை:1991:160). *அதே மாவட்டத்து சக்கரமநல்லூர் சிவன் 'வாலீசுவரர்' என்றே பெயரிடப்பட்டுள்ளார்.* (முத்துசாமிபிள்ளை:1991:175)

வழிபடும் அடியவர்களுடனான உறவினை உறுதிப்படுத்த கோயில் இத்தகைய பெயரிடுமுறையைக் கடைப்பிடிக்கின்றது எனலாம்.

திருநெல்வேலி நகரத்திலிருந்து ஒரு கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ள பேட்டை நகர்ப்பகுதிச் சிவன், 'பால்வண்ணநாதர்' என அழைக்கப்படுகிறார். இப்பெயருக்கான காரணத்தை விளக்கும் புராணமொன்று இப்பகுதி மக்களிடம் வழக்கிலுள்ளது.

"பசு ஒன்று தன்னை அடக்க வந்த அரசனுடன் சண்டையிட்டது. அப்போது அவ்விடத்தில் புதைந்திருந்த லிங்கத்தின் மேல் பசுவின் கால்குழம்பு பட்டு இறைவனுக்குக் காயம் ஏற்பட்டது. சிவபெருமான், காயத்திற்கு மருந்தாக பசுவைத் தன்மீது தினமும் பாலைச்சுரக்கக் கட்டளையிட்டார். பசு நாள்தோறும் அவ்வாறு செய்தது. இதன் காரணமாக

பாலின் வண்ணமான வெள்ளை நிறத்தை இறைவன் பெற்றார். இந்த நிகழ்வின் அடிப்படையில் 'பால்வண்ண நாதர்'' என அழைக்கப்பட்டார்.

*பூமியினுள் புதைந்துள்ள இறைவன், 'மனிதன் அல்லது விலங்கினால் ஏற்படுத்தப்பட்ட காயத்தினால் வெளித்தோன்றுதல்', இறைவன் மீது 'பசு பால்சுரத்தல்'* என்பன சைவக்கோயில் தோற்றப் புராணங்களின் ஒரு பொதுக்கூறாகும் (David Shulman : 1980: 96-97) என்பர். இப்பொதுக்கூறினை நினைவுபடுத்தும் விதமாக இறைவன் பெயரிடப்பட்டுள்ளார்.

*''கடலைக் கடைந்து அமுது எடுத்தபோது வானவர்களால் தானவர்கள் வஞ்சிப்பட்டனர். தானவர்கள் தாங்களும் அழியாத்தன்மை அடையவேண்டி இங்கு (கரிவலம் வந்தநல்லூரில்) பாற்குளத்தைத் தோற்றுவித்தனர். தானவர்கள் அழியாத்தன்மை அடையக்கூடாது என வானவர்கள் வேண்ட, இறைவன் பாற்குளத்தில் மூழ்கி எழுந்தார். அதனால் அவரது நிறம் பால்வண்ணமாகி விட்டது'' என தலபுராணம் குறிப்பிடுவதாகவும் இறைவன் அங்கு பால் போன்று வெண்மையாக உள்ளார்''* என கரிவலம் வந்தநல்லூர் சிவனான பால்வண்ணநாதர் பற்றிக் குறிப்பிடுகிறார் தி.இராசமாணிக்கம்(1984:69).

சைவ இலக்கியங்கள் சிவபெருமானை எண் குணத்தானாகப் பேசுகின்றன. அவனது எட்டு வீரச்செயல்களில் ஒன்று அவன் முப்புரங்களை எரித்ததாகும். *"தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி என்ற மூன்று அவுணர்கள் இரும்பு, வெள்ளி, பொன் ஆகியவற்றால் மூன்று கோட்டைகளை அமைத்து இமையோர்களுக்கு இன்னல்களை விளைவித்து வந்தனர். இறைவன் அவர்கள் மீது போர் தொடுத்தான். அவுணர்களின் மூன்று நகரங்களும் தீயால் வெந்து சாம்பலாகின''* (இராசமாணிக்கம்,தி.:1989:85-99). இச்செயலை இலக்கியங்கள் (திருவிசைப்பா, திருமந்திரம்) உவந்து

பேசுகின்றன. இதன் அடிப்படையில் பாளையங்கோட்டைச் சிவன், திரிபுராந்தகர் எனப் பெயரிடப்பட்டுள்ளார்.

*"தஞ்சை பிரகதீஸ்வரர் கோயிலில் இக்கருத்தினை வெளிப்படுத்தும் வடிவங்கள் வெண்கலச்சிற்பமாக, சுதைவடிவமாக, ஓவியமாக பன்னிரண்டு இடங்களில் இருக்கின்றன. இவ்வடிவங்கள் சிவனின் செயலைக் குறிப்பதற்காக வைக்கப்பட்டுள்ளது எனக்கூறுவதைவிட இராசராசனின் போர்த்திறம், அரசாட்சித்தன்மை, 'மன்னர்களின் மன்னன்' என்ற வாழ்க்கை நிகழ்வுகளைக் குறிக்க இந்த வடிவங்கள் அதிக எண்ணிக்கையில் வைக்கப்பட்டுள்ளது"* என்கிறார் ஏ.ஏகாம்பரநாதன்(1985). அரசனை வீரம் மிகுந்தவனாகக் காட்டப்படுவது போன்று அவனது பிரதிநிதியான இறைவனும் வீரமுடையவனாகக் காட்டப்பட்டார். அதன் ஒருவழியாக 'திரிபுராந்தகர்' எனப் பெயரிடப்பட்டார்.

பாப்பான் குளம் சிவன் "கருத்தீஸ்வரர்' ஆவார். *"சீதை விரும்பிக் கேட்ட மானைத்தேடி இராமன் காட்டிற்குள் சென்ற போது இவ்விடத்தில் (பாப்பான்குளம்) தங்கினார். இத்தலத்து இறைவன் மான்நின்ற இடத்தை இராமனுக்குக் கருத்துரைத்தார். இதனால் 'கருத்தீஸ்வரர்' என அழைக்கப்பட்டார்"* என்பது இறைவன் பெயர் பெற்ற காரணத்தைக் கூறும் தொன்மக்கதை ஆகும். இராமாயணக் கதைக்கூறோடு தொடர்புடையதாக இக்கதையைப் படைத்துள்ளனர். சைவ, வைணவத் தெய்வங்களுக்கிடையில் உறவினை ஏற்படுத்த இவ்வாறான கதைகள் புனையப்பட்டுள்ளன எனலாம்.

'கஜேந்திரன்' என்னும் யானை குளத்தில் நீரருந்திய போது முதலை ஒன்று யானையின் காலைக் கவ்வி உள்ளே இழுத்தது. யானை 'ஆதிமூலமே' என்று இறைவனை நோக்கி அழைத்தது. இறைவன் தன்

சக்கரத்தினை ஏவி முதலையைக் கொன்று யானையைக் காப்பாற்றினார் என்பது வைணவக் கதையாடல் ஆகும்.

ஆற்றங்கரையில் அமைந்துள்ள அத்தாளநல்லூர் பெருமாள் இத்திருவிளையாடலை விளக்கும் விதமாக 'கஜேந்திரபெருமாள்' என்றும் 'ஆனை காத்தருளிய பெருமாள்' என்றும் பெயரிடப்பட்டுள்ளார். இக்கோயில் கல்வெட்டொன்று இறைவனை 'ஆனை காத்தருளிய பெருமாள்' என்றே குறிப்பிடுகின்றது. மக்கள் இறைவனை 'ஆதிமூலப்பெருமாள்' என்றே அழைக்கின்றனர்.

*"குபேரன்' செல்வங்களின் கடவுளாவார். அவர் பருத்த அசிங்கமான உருவமானவர், ஆரவாரமற்றவர். குதிரையில் சவ்வாரி செய்வர். சங்கநிதி, பத்மநிதி என்னும் இரு செல்வங்கள் அவருக்கு அருகில் அமர்ந்திருக்கும்"* எனக் குபேரனின் உருவத்தைக் கிருஷ்ண சாஸ்திரி (1986:248) குறிப்பிடுகின்றார்.

*"குபேரன் தனது தீயசெயலால் செல்வத்தை இழந்தான். அச்செல்வங்கள் தாமிரபரணி ஆற்றங்கரையில் ஒதுங்கின. அதனை இத்தலத்து இறைவன் பாதுகாத்து வைத்ததால் 'வைத்தமாநிதி' எனப் பெயர் பெற்றார்"* என்பது திருக்கோளூர்ப் பெருமாளுடைய பெயருக்கான தொன்மக் கதையாகும். 'செல்வக்கடவுள்' என்பது உலகின் எல்லாப் பண்பாட்டுக் கதைகளிலும் காணப்படுகின்ற ஒரு கதைக்கூறாகும். இது, ஸ்டித் தாம்ப்சனின் 'கதைக்கூறு அடைவு' (Motif-Index) என்ற நூலில் A.473 என்ற எண்ணில் பொருத்தப்பட்டுள்ளது. இக்கூறு காணப்படும் புராணங்களையும் நாடுகளையும் இவர் (Stith Thompson:1955: Vol:I, 112) பட்டியலிட்டுள்ளார்.

இப்புராணத்திற்கு ஏற்ப இத்தலத்தில் பெருமாள் மரக்கால் கொண்டு குபேரனின் செல்வத்தை அளந்த களைப்பினால் மரக்கால் (அளவு கருவி) மேல் தலைவைத்துப் படுத்திருக்கிறார் என்பது மக்களின் நம்பிக்கையாகும். குபேரன் திருந்தி இத்தலத்திற்கு வந்த போது பெருமாள் அவனுக்குரிய செல்வங்களை ஒப்படைத்தார் எனத் தலபுராணம் கூறுகின்றது.

## ஆ. நாட்டார்கதைப் பெயர்

தெய்வங்கள் தலத்திற்கு இறங்கி வந்ததையும், அவர்களது திருவிளையாடல்களையும் விளக்கும் நாட்டார் கதைகள் மக்களிடம் வழக்கிலுள்ளன. இவை தலபுராண நூலிலும் சேர்க்கப்பட்டுள்ளன. இவை வடமொழிப் புராணங்களின் தழுவல்களாக அமைவதில்லை. அத்தலத்திற்கு மட்டும் உரிமையுடையதாக விளங்குகின்றன. இக்கதையினை மையமாகக் கொண்டு தெய்வங்கள் பெயரிடப்பட்டுள்ளதைக் காண்போம்.

| தெய்வப்பெயர் | கோயில் | இருப்பிடம் |
|---|---|---|
| வேண்டவளர்ந்த நாதர் | நெல்லையப்பர் | திருநெல்வேலி |
| நெல்லையப்பர் | நெல்லையப்பர் | திருநெல்வேலி |
| பாபவிநாசர் | பாபநாசர் | பாபநாசம் |
| பொய்சொல்லாமெய்யர் | சத்தியவாகீஸ்வரர் | களக்காடு |
| எரிச்சாவுடையார் | எரிச்சாவுடையார் | அம்பாசமுத்திரம் |

*"இராமக்கோன்' என்னும் இடையன் அரண்மனைக்கு நாள்தோறும் மூங்கில்காடு வழியே பால்கொண்டு செல்வது வழக்கம். அவ்வாறு செல்லும்போது மூங்கில்தூறு இடையனின் காலை நாள்தோறும் இடறி விட்டு, பாலை சிதறச்செய்தது. இதனால் இராமக்கோன் கோபம் கொண்டு மூங்கில் தூறைக் கோடரியால் வெட்டினான். வெட்டப்பட்ட இடத்திலிருந்து இறைவன் 21 அடி உயரமுடையவராக இராமக்கோனிற்குக் காட்சியளித்தார்.*

*பணிந்து நின்ற இராமக்கோன், அடியவர்களின் காட்சிக்கு ஏற்ற உயரமுடையவராகத் தோன்றும்படி வேண்டினான். இறைவனும் அவ்வாறே தோன்றினார்'* என்பது நெல்லையப்பர் கோயில் புராணமாகும். இங்கு இக்கதையாடல் ஒவ்வொரு ஆண்டும் சடங்காக நிகழ்த்திக் காட்டப்படுகின்றது. (இதனை பின்னியலில் விளக்கமாகக் காணலாம்) இத்திருவிளையாடல் காரணமாக இறைவன் 'வேண்டவளர்ந்த நாதர்' என்ற பெயரினைப் பெற்றார்.

இத்தலத்து இறைவன் நெல்லையப்பர் என்ற பெயரைப் பெற்றதை விளக்கும் கதை ஒன்று மக்களிடம் காணப்படுகிறது. 'வேதபட்டர்' என்ற அந்தணர் இறைவனின் பூசைக்குரிய நெல்லைக் காயவைத்துவிட்டு ஆற்றிற்கு நீராடச் சென்றார். அப்போது மழை பெய்ததால் காயவைத்த நெல் நனைந்துவிடுமோ எனப் பதற்றம் கொண்டு விரைந்து வந்தார். இறைவன் தன் திருவருளால் காயவைத்தநெல் மழைநீரால் நனையாதவாறு வேலிகட்டிப் பாதுகாத்தார். திரும்பி வந்த வேதபட்டர் இதனைக் கண்டு அதிசமயடைந்தார். இதன்காரணமாக இறைவன், 'நெல்வேலிநாதர்' என அழைக்கப்பட்டார். இக்கதை ஒவ்வொரு ஆண்டும் சடங்காகவும் நிகழ்த்தப்படுகிறது.

பாபநாசம் தலத்து இறைவன், 'பாபவிநாசர்' ஆவார். மக்கள் இறைவனை 'பாபநாசர்' என்றே அழைக்கின்றனர். இப்பெயருக்கான காரணம் கதையால் விளக்கப்படுகின்றது. அக்கதையாவது:

'சிறுவயதில் பிரிந்த அண்ணன், தங்கை ஆகிய இருவர், பிற்காலத்தில் தங்களது உறவுமுறையினை அறியாது, திருமணம் செய்துகொண்டனர். சிலகாலம் கழித்துத் தங்களுக்கிடையிலான உறவுமுறையினைத் தெரிந்துகொண்டனர். பின் இத்தகாப்புணர்ச்சிப் ( Incest taboo) பாவத்தினைப்

போக்கப் பல்வேறு தலங்களுக்குச் சென்று புனிதநீராடினர். பாவங்கள் போகாத நிலையில் அதன் தொடர்ச்சியாக பாபநாசத்திற்குச் சென்று, தாமிரபரணி நதியில் இருவரும் கைகோர்த்து நீராடினர். அப்போது பெண்ணின் கழுத்திலிருந்த தாலி கழன்றுவிழுந்ததோடு இருவரது கைகளும் பிரிந்தன. அவர்களது பாவம் போக்கப்பட்டதற்கான அடையாளமாக இதனைக்கருதினர். இருவரும் பிரிந்து சகோதர, சகோதரி உறவுடன் தனித்தனியாக வாழ்ந்தனர்".

தகாப்புணர்ச்சி எனப்படும் இப்பாவத்தை இறைவன் போக்கியதால் 'பாபவிநாசர்' எனப் பெயரிடப்பட்டார் எனலாம். "தகாப்புணர்ச்சி' என்பது *'ஒரு குடும்பத்திலுள்ள இரண்டு உறுப்பினர்களுக்கு (கணவன், மனைவி தவிர) இடையிலான பாலுறவுத் தடையை மீறுவது ஆகும்"* என 'International Encyclopaedia of Social Sciences' (Vol 7&8 ,Page 115) வரையறை செய்கின்றது. *"தகாப்புணர்ச்சி உறவுகள் எவை எவை என்பது குறித்து ஒவ்வொரு பண்பாடும் தனித்தனியான வரையறையை ஏற்படுத்திக்கொண்டுள்ளது. அவ்வரையறைக்குள் உள்ள உறவுகள் தகாப்புணர்ச்சி விலக்குக்குரியன. அவ்வுறவுகளுக்குள் பாலுறவு நிகழ்வது தடைசெய்யப்பட்டுள்ளது"* (1990:369) என்கிறார் சீ.பக்தவத்சலபாரதி. இவர் தமிழ்ப்பண்பாட்டின் தகாப்புணர்ச்சி விலக்குடைய உறவுகளையும் பட்டியலிடுகின்றார். உலகின் எல்லாச் சமூகங்களிலும் உடன்பிறந்தோருக்கிடையிலான பாலுறவு மிகக்கொடிய பாவமாகக் கருதப்படுகின்றது. இப்பாவத்தினை இத்தலம் நீக்கக் கூடியது என்பது மக்கள் கருத்தாகும். இக்கதையாடல் சமூகத்தின் அனுமதிக்கப்பட்டுள்ள திருமண எல்லைகளை எச்சரிக்கையுடன் நினைவுபடுத்துகின்றது.

அடியவர் ஒருவருக்கு இறைவன், தான் கொடுத்த வாக்குறுதியைப் பல இன்னல்களுக்கு இடையில் நிறைவேற்றினார். இறைவனது சொல்லும்

செயலும் ஒன்றாக இருப்பதால் களக்காடு சிவன், *'பொய்சொல்லா மெய்யர்'* என அழைக்கப்படுகின்றார் என்பது நாட்டார் கதையாகும். எந்த அடியவருக்கு, என்ன சொன்னார்? என்ன இடையூறுகள் ஏற்பட்டன? எவ்வாறு நிறைவேற்றினார்? என்பதான செய்திகள் எதுவும் இல்லை. இறைவன் 'சொன்ன சொல் மாறாதவர்', 'பொய் சொல்லாதவர்' என்பன மட்டும் இறைவன் குறித்து மக்கள் கொண்டுள்ள நம்பிக்கைகளாக உள்ளன.

திருவைகுண்டம், வைகுண்டநாதப் பெருமாளின் மற்றொரு பெயர் 'கள்ளப்பிரான்' என்பதாகும். திருட்டுத் தொழிலை செய்து வந்த அடியவர் ஒருவருக்காக இறைவன் கள்ளர் வேடம் பூண்டு அரண்மனை சென்று அந்த அடியவரைக் காப்பாற்றினார். இதனால் கள்ளப்பிரான் என அழைக்கப்படுகிறார் என்பது அப்பெயர் குறித்த நாட்டார் கதையாகும். இத்தலத்து இறைவனை நம்மாழ்வார் 'கள்ளப்பிரான்' என்றே பாடியுள்ளார். ஆகவே இது ஒரு பாசுரப்பெயர் என்றே சொல்ல வாய்ப்புள்ளது.

அம்பாசமுத்திரம் சிவன், 'எரிச்சாவுடையார்' எனப் பெயரினைப் பெற்றதை விளக்கும் கதையொன்று மக்களிடம் வழக்கிலுள்ளது. அக்கதையாவது:

"இக்கோயில் அர்ச்சகர் ஒருவர் தாம் வாங்கிய கடனைத் திருப்பிச் செலுத்த மறுத்தார். ஊர் மக்கள் அர்ச்சகரை இறைவன் மேல் சத்தியமிடக் கேட்டனர். அர்ச்சகர் இறைவனைக் கருவறையிலிருந்து புறப்பட்டு ஒரு மரத்தடியில் எழுந்தருளச் செய்துவிட்டு கோயில் கருவறையில் இறைவன் மேல் பொய்ச்சத்தியம் செய்ய ஏற்பாடு செய்தார். இதனை அறிந்த ஊர்மக்கள், அர்ச்சகரை மரத்தடியில் சத்தியம் செய்ய வேண்டினர். அவர் வேறுவழியின்றி மரத்தடியில் சத்தியம் செய்தார். இறைவன் சினங்கொண்டு மரத்தடியிலிருந்து எழுந்து பொய்ச்சத்தியம் செய்த

அர்ச்சகரை எரித்தார். இத்திருவிளையாடலால் இறைவன் 'எரிச்சாவுடையார்' என மக்களால் அழைக்கப்பட்டார். இக்கோயில் கல்வெட்டுகளில் இறைவன் பெயர் 'திருப்போத்துடையார்' என்றே குறிப்பிடப்பெறுகின்றது.

அடியவர்கள் பொய்கூறுவதை இறைவன் விரும்பாதவர். இறைவன் முன் சமூகம் உண்மையைப் பேசவேண்டும் என்பதை இக்கதை போதிக்கின்றது. இதன் காரணமாகவே இன்றும் தெய்வத்தின் பெயரைச்சொல்லிச் சாட்சியமளிக்கும் வழக்கம் மக்களிடம் காணப்படுகின்றது.

### 1.2.2.4. வகை 4 இறைவன், இறைவி ஒத்த பெயர்

| இறைவன் | இறைவி | இருப்பிடம் |
|---|---|---|
| ஆதிநாதர் | ஆதிநாயகி | ஆழ்வார் திருநகரி |
| குழைக்காதர் | குழைக்காதர்வல்லி | தென்திருப்பேரை |
| வைகுண்டநாதர் | வைகுண்டநாயகி | திருவைகுண்டம் |
| சோமநாதர் | சோமசுந்தரி | ஆத்தூர் |

ஆழ்வார்திருநகரி, தென்திருப்பேரை, திருவைகுண்டம், ஆத்தூர் ஆகிய தலத்து இறைவிக்குத் தனிப்பெயரின்றி இறைவன் பெயரே சூட்டப்பட்டுள்ளது. இதுதெய்வப் பெயரிடலில் ஒரு முறையாகக் காணப்படுகிறது.

### 1.2.2.5. வகை 5. தமிழ்: வடமொழி தெய்வப்பெயர்

| வடமொழிப்பெயர் | தமிழ்ப்பெயர் | இருப்பிடம் |
|---|---|---|
| மத்தியபதீஸ்வரர் | நடுநக்கர் | வெள்ளூர் |
| சத்தியவாகீஸ்வரர் | பொய்சொல்லாமெய்யர் | களக்காடு |
| அரவிந்தலோசனர் | செந்தாமரைக்கண்ணன் | இரட்டைத்திருப்பதி |

| | | |
|---|---|---|
| தோதாத்திரி | வானமாமலை | நாங்குநேரி |
| சோரநாதன் | கள்ளப்பிரான் | திருவைகுண்டம் |
| நிச்சோபவித்தன் | வைத்தமாநிதி | திருக்கோளூர் |
| சாலிவாடீஸ்வரர் | நெல்லையப்பர் | திருநெல்வேலி |

பெருங்கோயில் பண்புகளில் ஒன்று அது வடமொழியினைப் புனிதமாகக் கருதும் பிராமணர்களால் பூசை செய்யப்படுவதாகும். இப்பண்பினை வெளிப்படுத்தும் விதமாக தெய்வங்கள் வடமொழியில் பெயரிடப்பட்டனர். ஆனால் இவை தமிழ்ப் பெயர்களின் வடமொழித் தழுவல்களாக இருப்பதைக் காணமுடிகின்றது. வடமொழிப்பெயர்களைத் தலபுராணங்களும், பூசை செய்யும் பிராமணர்களும் மட்டுமே பயன்படுத்துகின்றனர். மக்கள் வழக்கில் அவை அரிதாகவே காணப்படுகின்றன.

1.2.2.6. **வகை 6. வடபகுதி ஒத்தபெயர்**

| **தெய்வப்பெயர்** | **இருப்பிடம்** | **வடதிசைகோயில்** |
|---|---|---|
| தென்திருமாலிருஞ்சோலை அழகர் | சீவலப்பேரி | திருமாலிருஞ்சோலை |
| காசிவிசுவநாதர், விசாலாட்சி | தென்காசி, கோபாலசமுத்திரம் | காசி |
| வேங்கடேசப்பெருமாள் | தென்திருப்பதி | திருப்பதி |
| வெங்கடாசலபதி (தென்திருவேங்கடம்) | கரிசூழ்ந்தமங்கலம் | வடவேங்கடம் |
| சின்ன சங்கரநாராயணர் | சங்கரன் கோயில் | சங்கரன் கோவில் |
| சின்ன நெல்லையப்பர் | தச்சநல்லூர் | திருநெல்வேலி |
| சொக்கர், மீனாட்சி | ஏரல், சிந்தாமணி | மதுரை |

| | |
|---|---|
| சுந்தரேசுவரர், மீனாட்சி | பத்தமடை, விளாத்திக்குளம், மதுரை கேசவசமுத்திரம் |

மதுரை மாநகர்க்கு வடக்கே, *அழகர்கோயிலிலுள்ள கல்வெட்டு ஒன்று இவ்விடத்தைக் 'கீழிரணிய முட்டத்துத் திருமாலிருஞ்சோலை'* (தொ.பரமசிவன்:1989:7) என எடுத்துரைக்கின்றது. இக்கோயிலை நினைவில் கொண்டு திருநெல்வேலி மாவட்டத்துச் சீவலப்பேரியில் அழகர்கோயில் ஏற்படுத்தப்பட்டுள்ளது. *இக்கோயிலில் முதலாம் குலோத்துங்கன், முதலாம் வீரராசேந்திரன் ஆகிய சோழ மன்னர்களின் கல்வெட்டுக்களும், சடாவர்மன் சுந்தரசோழ பாண்டியனின் கல்வெட்டும் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் தென்திருமாலிருஞ் சோலை எனவும், இறைவன் நின்றருளின கருமாணிக்கதேவர் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளனர்'* (தே.கோபாலன்:1997:30)

திருநெல்வேலி மாவட்டத்துத் தென்காசி காசிவிசுவநாதர் கோயில் வடகாசியை ஒத்து எழுப்பப்பட்டதாகும். வடதிசை காசி கோயில் சிதலமடைந்ததால் மன்னன் கனவில் இறைவன் தோன்றி இதனை ஒத்து தெற்கில் கோயில் ஒன்றினைக் கட்ட வேண்டினார். இதனால் கோயில் ஒன்று கட்டப்பட்டது. தலம் தென்காசி எனப்பெயரிடப்பட்டது என்பது கதையாகும். இக்கதை தலபுராண நூலிலும் சேர்க்கப்பட்டுள்ளது. கோபாலசமுத்திரம் இறைவன், இறைவி ஆகியோர் காசியை நினைவில் கொண்டு *'காசிவிசுவநாதர்', 'விசாலாட்சி'* என்று பெயரிடப்பட்டுள்ளனர்.

தொல்காப்பியத்தில் 'வடவேங்கடம்' என அழைக்கப்படும் இடமே தற்போதைய திருப்பதியாகும். இத்திருப்பதியை வைணவர்கள் புண்ணியபூமியாகக் கருதுகின்றனர். பெருமாள் எழுந்தருளியுள்ள இடங்களை வைணவம் 'திருப்பதி' என அழைத்தாலும், அது மக்கள்வழக்கில் வடவேங்கடத்துத் தலத்தையே குறிக்கின்றது. இத்தலத்தை ஒத்து வேறு

இடங்களிலும் திருப்பதியை எழுப்பினர். அங்கு பெருமாளுக்கு 'வேங்கடேசர்' எனவும் தலத்திற்குத் 'தென்திருப்பதி' எனவும் பெயரிட்டனர்.

திருநெல்வேலி நகரத்திற்கு அருகில் 'தென்திருப்பதி' என்னும் தலம் உருவாக்கப்பட்டு அங்கு வேங்கடேசப்பெருமாள் என்னும் பெயருடன் இறைவன் நிறுவப்பட்டுள்ளார். வடதிருப்பதிக்கு நேர்ந்துள்ள நேர்ச்சையினை இங்கு செய்யலாம், ஆனால் இப்பெருமாளுக்கென்று நேர்ந்தவற்றை வடதிருப்பதியில் செய்ய இயலாது என்பது மக்களின் நம்பிக்கையாகும்.

கரிசூழ்ந்தமங்கலத்துப் பெருமாள், 'வேங்கடாசலபதி' ஆவார். இக்கோயில் கல்வெட்டு *இவ்வூரைத் தென்திருவேங்கடம்* (R.Tirumalai: 1994:126) எனக் குறிப்பிடுகின்றது. அம்பாசமுத்திரத்திற்கு அருகில் 'சின்ன சங்கரன்கோயில்' என்ற தலமும் 'சின்ன சங்கரநாராயணர்' என்ற கோயிலும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. அங்கு வடதிசை சங்கரன்கோயில் போன்று சடங்குகள் நிகழ்த்தப்படுகின்றன. எடுத்துக்காட்டாக அம்மனின் 'ஆடித்தவசுத்' திருவிழாவினைக் குறிப்பிடலாம். ஆடித்தவசு என்பது பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடுகின்ற சங்கரன்கோயிலுக்கு மட்டுமேயுரிய திருவிழா ஆகும். வடதிசைக்கோயிலை ஒத்து சின்ன சங்கரநாராயணர் கோயிலிலும் ஆடித்தவசுத் திருவிழா நடத்தப்படுகின்றது. இத்தலத்து இறைவியும் 'கோமதியம்மன்' என்றே பெயரிடப்பட்டுள்ளார்.

திருநெல்வேலிக்கு அருகில் 'தச்சநல்லூர்' என்னும் ஊர் உள்ளது. நெல்லையப்பர் கோயிலுக்கு மரவேலை செய்ய வந்த தச்சர்களை அரசன் இப்பகுதியில் குடியேற்றியதால் இது 'தச்சநல்லூர்' என்ற பெயரினைப் பெற்றது. அங்கு சிவன் கோயில் ஒன்று கட்டப்பட்டு, திருநெல்வேலிக் கோயிலை ஒத்து இறைவன், இறைவி ஆகியோர் 'நெல்லையப்பர்', 'காந்திமதியம்மன்' எனப் பெயரிடப்பட்டுள்ளனர்.

மதுரையை நினைவில் கொண்டு ஏரல், சிந்தாமணி ஆகிய தலங்களின் இறைவன், இறைவி ஆகியோர் முறையே 'சொக்கர்', 'மீனாட்சி' எனப் பெயரிடப்பட்டுள்ளனர். மதுரைச் சொக்கரின் மற்றொரு பெயர் 'சுந்தரேசுவரர்'. இது பாண்டிய மன்னர் ஒருவரின் பெயராகும். ஆய்வுப்பகுதியில் பத்தமடை, விளாத்திக்குளம், கேசவசமுத்திரம், சேரன்மாதேவி ஆகிய தலங்களின் இறைவன், இறைவி ஆகியோர் வடபகுதியை ஒத்து சுந்தரேசுவரர், மீனாட்சி என அழைக்கப்படுகின்றனர்.

*"தமிழகத்திலுள்ள தலங்கள் தம்மைப் புகழ்பெற்ற வட தலங்களோடு ஒப்பிடுகின்றன. தம்மை வடதிசைக்கு ஒத்ததாக (Imitation) அல்லது எதிரானதாகக் காட்டுகின்றன. இது புராணங்களின் ஒரு கூறாகவும் அமைகின்றது. இதன் காரணமாக தென்காசி, மன்னார்குடி போன்ற கோயில்கள் எழுப்பப்பட்டுள்ளன'* (1980:18) எனத் 'தமிழ்க்கோயில் புராணங்களை' ஆய்வு செய்த சுல்மன்(Shulman) குறிப்பிடுகின்றார். புராணங்களின் பண்பு தெய்வப்பெயரிடுதலிலும் காணப்படுகின்றது.

### 1.2.2.7. வகை7. மருத்துவப் பெயர்

நோய் மனிதனது துன்பங்களில் ஒன்றாகும். மனிதன் இதற்கான மருந்தைத் தேடினான். பெருங்கோயில்களை நோய்தீர்க்கும் மருத்துவமனையாகச் சித்தரித்தனர். இது சார்ந்த புராணங்களை உருவாக்கினர். அதன் ஒரு பகுதியாகத் தெய்வத்திற்கு மருத்துவம் சார்ந்து பெயரிட்டனர்.

| தெய்வப்பெயர் | இருப்பிடம் |
|---|---|
| வைத்தியலிங்கர் | ஆலடிப்பட்டி |
| வைத்தியநாதர் | சேரன்மாதேவி |

*"தமிழகத்தில் பேரரசுகள் காலந்தொட்டே நில உடைமையாளர்களின்*

*மேலாதிக்கப் போக்கின் விளைவுகளுள் ஒன்றாக உழைக்கும் வர்க்கத்தினர் நலன் புறக்கணிக்கப்பட்டு வந்ததை வரலாறு காட்டும்....இத்தகைய ஒரு சூழலில் தான் கடையருக்கும் இங்கு கதிமோட்சம் என்னும் கருத்துடன் தலபுராண இலக்கியம் உருவானது ... வாழ்வில் உள்ள துன்பங்களை எல்லாம் வெல்வதற்கு மருந்து இறைவன் என்று காட்டினர்"* என்கிறார் சு.வேங்கடராமன் (2004 :63). மருந்தீஸ்வரர், வைத்தியநாதன் என்னும் பெயர்கள் இதன் பிரதிபலிப்பே ஆகும்.

### 1.2.2.8. **வகை 8. அழகியல்சார் பெயர்**

பக்திஇயக்கம் இறைவனைக் குழந்தையாக, ஆண்டானாக, கணவனாகச் சித்தரித்துப் பேசின. அவனது கண், காது, மேனியின் நிறம் ஆகியவற்றை அழகுணர்வுடன் வருணிக்கத் தொடங்கின. இதனை மையமிட்டுத் தெய்வத்திற்குப் பெயரிட்டனர்.

| தெய்வப்பெயர் | கோயில் | இருப்பிடம் |
|---|---|---|
| அழகியபொன்னம்மாள் | கைலாசநாதர் | தென்திருப்பேரை |
| அழகியபொன்னம்மாள் | கைலாசநாதர் | சேந்தமங்கலம் |
| அழகியபொன்னம்மாள் | கைலாசநாதர் | இராஜபதி |
| அழகியநம்பிராயர் | அழகியநம்பி | திருக்குறுங்குடி |
| அழகியமன்னார் | இராசகோபாலன் | பாளையங்கோட்டை<br>மன்னார்கோயில்,<br>விஜயநாராயணம் |
| ஒப்பிலாநாயகி | வைத்தியநாதர் | சேரன்மாதேவி |
| ஒப்பிலாமணியம்மை | பால்வண்ணநாதர் | கரிவலம்வந்த நல்லூர் |
| ஒப்பனாம்பிகை | பால்வண்ணநாதர் | பேட்டை(திருநெல்வேலி) |
| வாடாகலைநாயகி | கருத்தீஸ்வரர் | பாப்பான்குளம் |
| வடிவுடைநாயகி | நெல்லையப்பர் | திருநெல்வேலி |

| | | |
|---|---|---|
| குழல்வாய்மொழி | குற்றாலநாதர் | குற்றாலம் |
| காணவினியஎம்பெருமான் | காணவினியஎம்பெருமான் | மணற்படைவீடு |
| காணவினிய பாண்டீஸ்வரர் | காணவினிய பாண்டீஸ்வரர் | கரிசூழ்ந்தமங்கலம் |
| பொருந்தி நின்றபிரான் | பொருந்தி நின்றபிரான் | தென்காசி |
| குழைக்காது வல்லி | மகரகுழைக்காதர் | தென்திருப்பேரை |
| கனிவாய்மொழி | | சாம்பவர் வடகரை |

தெய்வத்தின் அழகினை வெளிப்படுத்தும் விதமாக அழகு என்னும் பொருள்படும் படியாக அழகம்மன், அழகியமன்னார், வாடாகலைநாயகி, ஒப்பனாம்பிகை, காணவினியவர் எனவும் பேச்சின் அழகினை வெளிப்படுத்தும் விதமாக குழல்வாய்மொழி, கனிவாய்மொழி எனவும் பெயரிடப்பட்டுள்ளனர்.

இறைவன், இறைவிகளை அழகுடையவர்களாகக் காட்ட இத்தகைய பெயரிடுமுறையை பின்பற்றுகின்றனர் எனலாம்.

### 1.2.2.9. **வகை 9. தொழில்சார் பெயர்**

ஒவ்வொரு நிலப்பகுதியிலும் அங்குள்ள மண்ணின் வகை, அதன்வளம் ஆகியவற்றின் அடிப்படையில் தொழில்கள் உருவாகின்றன. பின்னர் அத்தொழிலை மையமிட்ட சமூகம் ஒன்று உருவாகின்றது. மேய்ச்சல் நிலம் அதிகமாகக் காணப்படும் இடத்தில் கால்நடைவளர்ப்பு தொழிலாக மலர்ந்தது. பின்னர் அதனை மையமிட்ட 'கால்நடைவளர்ப்புச்' சமூகம் ஒன்று உருவானது. *சமூகத்தின் தெய்வங்களும் அதன் பண்பாட்டிற்கு ஒத்ததாக (appropriate) உள்ளன. வேட்டைச்சமூகத்தில் முன்னோர் வழிபாடும், வேளாண்சமூகத்தில் பூமிக்கடவுள்களும், தாய்த்தெய்வங்களும், கால்நடைவளர்ப்புச் சமூகத்தில் வானம், வளிமண்டலம் தொடர்பான தெய்வங்களும் உருவாக்கப்பட்டுள்ளன* (Encyclopaedia of Religion Vol VI: 60). நிலப்பகுதியின் முதன்மையான தொழில்களுக்கு ஏற்ப தெய்வங்களை

வடிவமைத்துப் பெயரிடும் மரபும் ஆய்வுக்களத்தில் காணப்படுகிறது. இதனைக் கால்நடை வளர்ப்புசார் பெயர், பிறதொழில் சார் பெயர் என இருவகையாகக் காணலாம்.

**1.கால்நடை வளர்ப்புசார் பெயர்**

| தெய்வப்பெயர் | கோயில் | இருப்பிடம் | தொழில் |
|---|---|---|---|
| வேணுகோபாலர் | வேணுகோபாலசுவாமி | கீழநத்தம் | கால்நடை வளர்ப்பு |
| இராசகோபாலர் | இராசகோபாலசுவாமி | பாளையங்கோட்டை | கால்நடை வளர்ப்பு |
| இராசகோபாலர் | இராசகோபாலசுவாமி | மன்னார்கோயில் | கால்நடை வளர்ப்பு |
| இராசகோபாலர் | இராசகோபாலசுவாமி | தெற்குவிஜயநாராயணம் | கால்நடை வளர்ப்பு |

வயல்களும் அதனை ஒட்டிய கால்நடை வளர்ப்பிற்குரிய மேய்ச்சல் பகுதிகளும் நிறைந்த நிலப்பகுதிகளில் இக்கோயில்கள் அமைந்துள்ளன. கீழநத்தம், பாளையங்கோட்டை, மன்னார்கோயில், தெற்கு விஜயநாராயணம் ஆகிய பகுதிகள் கால்நடைவளர்ப்புத் தொழில் மிகுதியாகக் காணப்படும் இடங்களாகும். இவ்வூர்களின் பெருமாள், ‘கோபாலன்’ எனப் பெயரிடப்பட்டுள்ளார். வைணவம் மக்களோடு நெருங்கிய உறவினை ஏற்படுத்த சமூகத்தின் தொழில்சார்ந்து தெய்வத்திற்கு பெயரிடப்பட்டுள்ளதை இது காட்டுகின்றது. இக்கோயில்களில் கால்நடைகளுடன் இருப்பதான ‘குழலூதும் கிருஷ்ணன்’ (வேணுகோபாலன்) திருமேனி வழிபடப்படுகின்றது.

**2.பிறதொழில் பெயர்**

அக்கசாலை ஈஸ்வரமுடையார் : அக்கசாலை விநாயகர் : கொற்கை

“அக்கசாலை’ என்பதற்கு *அரசு வெளியிடும் பொன், வெள்ளி, செம்பு ஆகிய உலோகங்களாலான நாணயங்களை அளவு, வடிவு, தரம், எடை ஆகியவற்றில் குறையாமல் அமைத்து, அரச இலச்சினை ஒருபுறமும் நாணய மதிப்புக் குறி மறுபுறமும் அமையுமாறு முத்திரையிடும்*

*தொழிற்சாலை*''' எனப் பொருள் தருகின்றது கல்வெட்டுக் கலைச்சொல் அகரமுதலி (கோவிந்தராசன்.சி. 1987).

கொற்கை 'அக்கசாலை விநாயகர் கோயில்' கல்வெட்டு தலத்து இறைவனைக் *'கொற்கையான மதுரோதய நல்லூர் அக்கசாலை ஈஸ்வரமுடையார்'* எனக் குறிப்பிடுகின்றது. கொற்கையில் இருந்த நாணயத் தொழிற்சாலையின் அடிப்படையில் இறைவன் இப்பெயர் பெற்றுள்ளார் எனலாம்.

### 1.2.2.10. வகை 10. இலக்கியப் பெயர்

பக்தி இயக்கம் தமிழுக்கு அளித்த கொடைகளுள் ஒன்று இலக்கியமாகும். சைவக்குரவர்கள் பாடிய பாக்கள் 'பன்னிருதிருமுறைகள்' எனவும், வைணவ ஆழ்வார்கள் வழங்கியவை 'நாலாயிர திவ்வியப் பிரபந்தம்' எனவும் அழைக்கப்படுகின்றன. இலக்கியத்தில் காணப்படும் சொல்லை அல்லது தொடரைத் தாம் வழிபடும் தெய்வத்திற்குப் பெயராகச் சூட்டியுள்ளனர். வைணவ இலக்கியமான நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் இருந்து எடுத்தாண்டுள்ளதை அறிவோம்.

**வகை 1.பாசுரப் பெயர்கள்**

பாசுரத் தொடர்களைத் தெய்வப்பெயர்களாகச் சூட்டுவது பெருங்கோயில் பெயரிடு முறையில் ஒன்றாகும். *'அழகன், அலங்காரன், திருமாலிருஞ்சோலை நின்றான், சுந்தரத்தோளுடையான், ஏறுதிருவுடையான், நலந்திகழ் நாரணன் ஆகிய பாசுரத் தொடர்களே மதுரை அழகர் கோயில் இறைவனுக்குரிய பெயர் வழக்குகளாக நிலைபெற்றுவிட்டன'* என்கிறார் தொ.பரமசிவன் (1989:35). ஆய்வுப்பகுதி தெய்வங்களின் பாசுரப்பெயர்களைக் காணலாம்.

| தெய்வப்பெயர் | கோயில் | இருப்பிடம் | பாசுரம் |
|---|---|---|---|
| பொலிந்து நின்றபிரான் | ஆதிபிரான் | ஆழ்வார்திருநகரி | திருவாய்மொழி 4:10:6 |
| ஆதிப்பிரான் | ஆதிபிரான் | ஆழ்வார்திருநகரி | திருவாய்மொழி 4:10:1 |
| கரியமாணிக்கம் | கரியமாணிக்கம் | திருநெல்வேலி நகரம், கடையநல்லூர், பத்தமடை | திருவாய்மொழி 2:5:9, 5:10:7 |
| கருமாணிக்கப்பெருமாள் | கருமாணிக்கப்பெருமாள் | இடைகால் | ,, ,, |
| கருமாணிக்கத்தேவர், | கருமாணிக்க ஆழ்வார் | சீவலப்பேரி | ,, ,, |
| செந்தாமரைக்கண்ணன் | அரவிந்தலோசனர் | தொலைவில்லி மங்கலம் | திருவாய்மொழி 1:9:3, 1:10:3, 2:6:2, 8:10:3 |
| தேவபிரான் | தேவபிரான் | தொலைவில்லி மங்கலம் | திருவாய்மொழி 3:5:10, 6:5:2, 6:5:11 |
| கருந்தடங்கண்ணி | அரவிந்தலோசனர் | தொலைவில்லி மங்கலம் | |
| அழகிய நம்பிராயர் | அழகியநம்பி | திருக்குறுங்குடி | திருவாய்மொழி:1:10:9, 6:2:1,2,5 |
| எம்மிடர்கடிவான் | விசயாசனர் | நத்தம் | திருவாய்மொழி 9:2:7 |
| மகரகுழைக்காதர் | மகரநெடுங்குழைக்காதர் | தென்திருப்பேரை | திருவாய்மொழி 8:5:3,8:8:1 |
| காய்சினவேந்தன் | காய்சினிவேந்தன் | புளிங்குடி | திருவாய்மொழி 9:2:6 |
| அலர்மேல்மங்கை | மாயக்கூத்தன் | பெருங்குளம் | திருவாய்மொழி 6:10:10 |
| அலர்மேல்மங்கை | ஸ்ரீநிவாசப்பெருமாள் | கோபாலசமுத்திரம் | திருவாய்மொழி 6:10:10 |
| தெய்வநாயகன் | வானமாமலை | நாங்குநேரி | திருவாய்மொழி 5:7:10,11 |
| மாயக்கூத்தன் | மாயக்கூத்தன் | பெருங்குளம் | திருவாய்மொழி 1:9:4,8:5:1 |
| நிகரில்முகில்வண்ணன் | மகரநெடுங்குழைக்காதர் | தென்திருப்பேரை | திருவாய்மொழி 5:6:10 |
| சுந்தரராஜப்பெருமாள் | சுந்தரராஜப்பெருமாள் | சாட்டுப்பத்து,வீரவநல்லூர், கோவில்குளம் | பெரியாழ்வார் 1:3:6 |

ஆழ்வார் திருநகரிப் பெருமாளை நம்மாழ்வார் *'திருக்குருகூரதனுள் பொலிந்து நின்றபிரான்'* (திருவாய்மொழி 4:10:6), *'திருக்குருகூரதனுள் நின்ற ஆதிப்பிரான்'* (திருவாய்மொழி4:10:1) எனப் பாடுகின்றார். இச்சொற்களே தலத்து இறைதிருமேனிகளுக்குப் பெயராகச் சூட்டப்பட்டுள்ளன.

நம்மாழ்வார் தனது திருவாய்மொழியில் பெருமாளைக் 'கருமாணிக்கச் சுடரே'(2:5:9) 'கருமாணிக்கமே' (நாலாயிரம்:2851,2922,3117), 'கரியமாணிக்கமே' (5:10:7) எனப் போற்றுகின்றார். இந்தப் பதிவினை வெளிப்படுத்தும் விதமாக 'கரியமாணிக்கம்', 'கருமாணிக்கம்' எனத் திருநெல்வேலி நகரம், கடையநல்லூர், பத்தமடை, இடைக்கால் ஆகிய தலங்களின் பெருமாள் அழைக்கப்படுகின்றார். சீவலப்பேரி அழகர் கோயில் கல்வெட்டுகள் அத்தலத்து இறைவனைக் 'கருமாணிக்கத் தேவர்', 'கருமாணிக்க ஆழ்வார்' என்று குறிப்பிடுகின்றன.

திருவாய்மொழிப் (1:9:3, 1:10:3, 2:6:2, 8:10:3) பாசுரங்கள் தொலைவில்லி மங்கலத்து இறைவனைச் 'செந்தாமரைக் கண்ணன்' எனப் பல இடங்களில் சுட்டுகின்றன. இதனால் அத்தலத்து இறைவன் 'செந்தாமரைக் கண்ணன்' எனப் பெயரிடப்பட்டுள்ளார். இறைவனை, 'தேவபிரான்' (திருவாய்மொழி 3:5:10, 6:5:2, 6:5:11) எனப் பிரபந்தம் பேசுகின்றது. இதுவே தொலைவில்லி மங்கலத்து இறைவனுக்குரியப் பெயராக இடப்பட்டுள்ளது. இத்தலத்துத் தாயாரைத் திருவாய்மொழி 'கருந்தடங்கண்ணி' எனக் குறிப்பிடுகிறது. இதுவே தாயார் பெயராகச் சூட்டப்பட்டுள்ளது.

வைணவ ஆழ்வார்கள் இறைவனை 'நம்பி' (திருவாய்மொழி:1:10:9, 6:2:1,2,5) என அழைக்கின்றனர். இந்த இலக்கியப் பதிவினைத் திருக்குறுங்குடிப் பெருமாள் பெயராகப் பெற்றுள்ளார். 'எம்மிடர் கடிந்திங்

கென்னையாள் வானே'(திருவாய்மொழி 9:2:7) என்பது திருப்புளிங்குடி இறைவனை நம்மாழ்வார் பாடிய பாசுரத் தொடராகும். இத்தொடரை முன்வைத்து திருப்புளிங்குடிக்கு அருகில் அரை கி.மீ தொலைவிலிருக்கும் நத்தம் தலத்தின் பெருமாள், 'எம்மிடர்கடிவான்' எனப் பெயரிடப்பட்டுள்ளார்.

'படிசேர் *மகரக்குழைகளும்,* பவள வாயும் நால்தோளும்' (திருவாய்மொழி 8:5:3), வெண்பல் இலகு சுடரிலகு, விலகு *மகர குணடலத்தன்* (திருவாய்மொழி 8:8:1) என்பன பாசுர அடிகளாகும். இப்பாசுரத்தின் அடிப்படையில் தென்திருப்பேரை இறைவன் 'மகரகுழைக்காதர்' என அழைக்கப்படுகின்றார். *காய்சின வேந்தே! கதிர் முடியானே!*(திருவாய்மொழி 9:2:6) என நம்மாழ்வார் இறைவனைப் பாடுகின்றார். இந்தப் பாசுரத்தின் விளைவே திருப்புளிங்குடி இறைவன் பெயராகும்.

'அலர்மேல் மங்கை' என்பது திருவாய்மொழியில் (6:10:10) காணப்படும் தொடராகும். அலர்மேல் மங்கை என்பதற்கு, 'திருமகள்' எனப் பொருள் தருகின்றது திவ்யப் பிரபந்த அருஞ்சொல் அகராதி (பாலசாரநாதன்.சு.1994:). இதனை நினைவூட்டும் விதமாக பெருங்குளம், மாயக்கூத்தன் தாயாரும், கோபாலசமுத்திரம், சீனிவாசப்பெருமாள் தாயாரும் 'அலர்மேல் மங்கை' என அழைக்கப்படுகின்றனர்.

நாங்குநேரித் தலத்துப் பெருமாளை நம்மாழ்வார் தனது திருவாய்மொழியில் 'தெய்வநாயகன்'(5:7:10, 5:7:11) எனப் போற்றுகின்றார். இதனால் இத்தலத்து இறைவனுக்குத் 'தெய்வநாயகன்' என்ற பெயரும் வழக்கிலுள்ளது. ஆழ்வார்கள் இறைவனை அவனது திருவிளையாடல்களை வியந்து போற்றும் வகையில் 'மாயப்பெருமாள்' (திருவாய்மொழி 1:9:4), 'மாயக்கூத்தன்' (திருவாய்மொழி 8:5:1) எனப் பாடியுள்ளனர். இத்தொடரின் அடிப்படையில் பெருங்குளம் பெருமாள் 'மாயக்கூத்தன்' எனப்

பெயரிடப்பட்டுள்ளார்.

‘கோலங்கொள் தனிமுதல் யானே என்னும்

கோலங்கொள் முகில் வண்ண னேறக் கொல்லோ?’

என்பது திருவாய்மொழி (5:6:10) அடியாகும். திருவாய்மொழிப் (6:5:7, 7:2:11) பாசுரங்களும் இறைவனை ‘முகில்வண்ணன்’ எனப் போற்றுகின்றன. இப்பாசுரங்களை நினைவூட்டுவதாக தென்திருப்பேரை இறைவன் ‘நிகரில் முகில் வண்ணன்’ என அழைக்கப்படுகின்றார்.

‘சுந்தரத் தோளன்’ என்பதற்கு அழகிய தோளை உடையவன் எனப் பொருள் தருகின்றது திவ்யப் பிரபந்த அருஞ்சொல் அகரமுதலி (பாலசாரநாதன்.சு. 1994:54). இறைவனைச் ‘சுந்தரத் தோளன்’ எனப் பெரியாழ்வார்(1-3-6) குறிப்பிடுகின்றார். *சுந்தரத் தோளுடையான் என்பது திருமாலிருஞ்சோலை திருமொழியில் ஆண்டாள் திருமாலுக்குச் சூட்டும் பெயர்களில் ஒன்றாக வருகின்றது. மதுரை அழகர் கோயில் அழகருக்கு இன்றும் இப்பெயர் உள்ளது. இவ்வழகர் மீது பற்றுக் கொண்ட திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலிவாணாதிராயன் தன் மகனுக்குச் சுந்தரத்தோளுடையான் என்று பெயர் வைத்திருந்தான்* (வேதாசலம்.வே.1987:91). ஆண்டாள் பாசுரத்தின் அடிப்படையில் கோவில்குளம், சாட்டுப்பத்து, வீரவநல்லூர் ஆகிய தலத்துப் பெருமாள் சுந்தரத்தோளன், சுந்தரராசப் பெருமாள் எனப் பெயரிடப்பட்டுள்ளார்.

### 1.2.2.11. **வகை 11. பண்புப் பெயர்**

இறைவனை ‘ஆதியானவன்’, ‘தானாகத் தோன்றியவன்’, ‘அழிவில்லாதவன்’, ‘முழுமையானவன்’, ‘தனித்து நிற்பவன்’ என்றும், இறைவியைக் ‘கன்னித் தன்மையானவள்’, ‘அறம் வளர்ப்பவள்’ என்றும் பல்வேறு பண்புகளைக் கொண்டவர்களாகச் சித்தரிப்பது பக்தி மரபின்

இயல்பாகும். இது குறித்துக் காண்போம்.

| **தெய்வப்பெயர்** | **கோயில்** | **இருப்பிடம்** |
|---|---|---|
| ஆதிநாதர் | ஆதிநாதர் | ஆழ்வார்திருநகரி |
| ஆதிநாயகி | ஆதிநாதர் | ஆழ்வார்திருநகரி |
| ஆதிமூலம் | கஜேந்திரவரதர் | அத்தாளநல்லூர் |
| ஆதிவராகர் | ஆதிவராகர் | கல்லிடைக்குறிச்சி |
| மூலநாதர் | மூலநாதர் | அம்பாசமுத்திரம், சாம்பவர்வடகரை |
| அறம்வளர்த்த நாயகி | குலசேகரநாதர் | கல்லிடைக்குறிச்சி |
| தான்தோன்றீஸ்வரர் | கைலாசநாதர் | திருவைகுண்டம் |

*'ஆதிநாதர்', 'ஆதிநாயகி'* என்பன ஆழ்வார் திருநகரி தெய்வப்பெயர்களாகும். *'வழிபடப்படுகின்ற ஒரு பெரும்கோயிலை எவ்வளவு முடியுமோ அவ்வளவு பழமை வாய்ந்ததாகச் சொல்ல முயலுவது உலகளாவிய இயல்பானதொரு விருப்பமாகும்'* (கோயில்ஒழுகு:1993:11). இதன் வழிமுறைகளில் ஒன்றாகத் தெய்வங்கள் இவ்வாறு பெயரிடப்படுகின்றன. ஆதிமூலம், ஆதிவராகர், மூலநாதர் என்ற தெய்வப்பெயர்களும் இதன் அடிப்படையில் சூட்டப்பட்டவையாகும்.

இறைவியின் அறச்செயல்களை விளக்குமாறு 'அறம் வளர்த்த நாயகி' (கல்லிடைக்குறிச்சி குலசேகரநாதர் கோயில் அம்மன்) என பெயரிடப்பட்டுள்ளார்கள்.

இறைவன் மனிதனால் தோற்றுவிக்கப்பட்டவன் எனக் கருத்துரைக்க பக்திநெறி விரும்புவதில்லை. எனவே இறைவனைத் தானாகத் தோன்றியவன் எனச் சித்தரிக்கின்றன. இறைவனைத் 'தான் தோன்றீசுவரர்' 'சுயம்புலிங்கம்' எனவும் தலத்தைத் 'தான்தோன்றீசுவரம்', என்றும் அழைக்கின்றனர். *'ஆக்கூரில் தான்தோன்றி ஈசனாரே'* என்பது அப்பர் தேவாரப் பாடலாகும். *வைணவத்தில்*

*இவை 'ஸ்வயம் வியக்த ஸ்தலங்கள்' என அழைக்கப்படுகின்றன* என்பர் தொ.பரமசிவன்(பேட்டி நாள்:28.08.2007). 'தான்தோன்றீசுவரர்' என்பது திருவைகுண்டம் கைலாசநாதர் பெயராகும்.

மனிதச் சமூகம் பல்வேறு படிநிலைகளைக் கடந்து வளர்ந்துள்ளது. ஒவ்வொரு கட்டவளர்ச்சியிலும் சமூகத்தின் தெய்வம், அதன் உற்பத்தி உறவோடு தொடர்பு கொண்டுள்ளதைக் காணமுடிகின்றது. *"மனிதன் வேட்டையாடி உணவு தேடியதற்கு முன் புல் வகை தானியங்களையும், நெல்லையும் பயிரிட்டுப் பழகுவதற்கு முன் உழைப்பு மிகுதியின்றிக் காய்களையும், கனிகளையும், கிழங்கையும் தின்று வாழ்ந்தான். இவ்வாறு கிடைத்த வள்ளிக் கிழங்கையே செழிப்பிற்கும், உற்பத்திக்கும் அறிகுறியாகக் கொண்டதில் வியப்பில்லை. ஆதலின் செழிப்புத் தெய்வத்திற்கு வள்ளி என்று பெயரிட்டனர். மனித சமுதாயம் உழவினால் உணவு உற்பத்தியைச் செய்த போது தோன்றிய தாய்த் தெய்வம் சீதை ஆகும். பூமாதேவியையே சீதையென்று கூறினர்"* (1986:88) என்று சமூகவளர்ச்சிப் படிநிலைகளில் தெய்வங்கள் பிறந்த கதையினைப் பி.எல்.சாமி தொடர்புபடுத்தி விளக்குகின்றார்.

இந்த வகைப்பாடுகளில் அடங்காத சில தெய்வப்பெயர்களும் ஆய்வுப் பரப்பிலிருந்து தரவுகளாகக் கிடைக்கப்பெற்றுள்ளன. அவை மேற்ஆய்விற்குரியதாகும்.

## முடிவுரை

திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்களிலுள்ள பெருங்கோயில்கள் பெரும்பாலும் கி.பி ஏழாம் நூற்றாண்டு முதல் சோழர் மற்றும் பாண்டிய மன்னர்களால் புதிய நீர்க்கால்கள் உருவாக்கப்பட்டபோது தோன்றியவையாகும். புதியநீர்க்கால்களின் பெருக்கம் என்பது

விளைநிலங்களின் அளவுப்பெருக்கமும் அதனைத் தொடர்ந்த மக்களின் பெருக்கமுமாக அமையும். பக்தி இலக்கியங்களின் பொதுப்பண்புகளில் ஒன்று கோயிலை உள்ளூர் மக்களோடு தொடர்புபடுத்துவதாகும். தேவார மூவராலும், ஆழ்வார்களாலும் பாடப்பெற்ற ஊர்கள் ‘பாடல்பெற்ற தலங்கள்’ என இன்றளவும் மரியாதையோடு பேசப்படுகின்றன. எனவே உள்ளூர் மரபு சார்ந்தும் உள்ளூர் கோயில் பெற்ற பாடலை நினைவில் நிறுத்தவும் தெய்வங்களுக்குப் பெயரிடும் முறை பயன்பட்டுள்ளது. இப்பெயர்கள் காலவழக்கில் அழிந்து போகாமல் இன்றளவும் நிலைத்து நிற்கின்றன. குடும்பங்களில் மக்கட் பெயரிடும் முறையிலும் இம்மரபு உயிர் வாழ்கின்றது. இம்மரபு சைவ, வைணவச் சமய எல்லைகளைத் தாண்டி நாட்டார் அனைவரையும் வெற்றி கொண்டுள்ளது. கோயிலுக்கும் மக்களுக்குமான உறவில் இது முக்கியமான கண்ணி எனக் குறிப்பிடலாம்.

## இயல் இரண்டு

# கதையாடல்களும் உள்ளூர் மரபுகளும்

### பகுதி ஒன்று:

## 2.1. தலபுராணங்களின் வடிவமைப்பும் உள்ளடக்கமும்

2.1.0 தமிழகத்தில் பெரும்பாலும் எல்லா *குடியிருப்புகளிலும்*[1] நாட்டார் தெய்வங்கள்(Folk deities), பெருங்கோயில்கள் (agamic temples) அல்லது இரண்டும் அமைவிடம் கொண்டுள்ளன. பெருங்கோயில்கள் மட்டுமே நீதிமன்றமாக, கருவூலமாக, கல்விச்சாலையாக, கலைக்கூடமாக, மருத்துவமனையாக, படைவீரர்கள் தங்கிச்செல்லும் படைவீடாக, வேலைவாய்ப்பளிக்கும் மையமாக எனப் பல்வேறு நிறுவங்களாகச் செயல்பட்டிருக்கின்றன. இவை அரசதிகாரத்தின் அலகுகளாகும். இந்த அரசதிகாரப் பலத்தைக் கொண்டு பெருங்கோயில்கள் மக்களின் வாழ்வியல் நடைமுறைகளைக் கட்டுப்படுத்தின. இதன்காரணமாக அவை வழிபடும் இடங்களாக மட்டும் அமையாமல் அரசதிகாரத்தின் துணை நிறுவனங்களாகவும் செயல்பட்டன.

பெருங்கோயில்கள் சொத்துடைமை நிறுவனங்களாகவும் விளங்கின. இவற்றின் சொத்துக்கள் விளைநிலங்கள், கால்நடைகள், பொற்காசுகள், வைர, பொன்ஆபரணங்கள் என அமைந்திருந்தன. இதுபற்றி திருவரங்கம் தலவரலாறு, *“கோயில்களின் செல்வச்செழிப்பு, வளம் இருவகை வழிகளில் அமைந்தது. முதலாவது, நன்கொடைகள். அது கோயில் கருவூலத்தைச் செழிப்பித்ததுடன், அதன் மூலதனத்தை மிகுதிப்படுத்தியது. தந்தத்தால் ஆன மேடைகள், தூக்கிச் செல்லக்கூடிய நாற்காலிகள், பலவகைப்*

---

1.மக்களின் வாழிடங்கள்

*பேழைகள், படிமங்கள், வைரம், மாணிக்கம், முத்து, பவளம் முதலியவற்றால் இயன்ற அணிகலன்கள். கடவுள் வழிபாட்டிற்குரிய பொற்கலங்கள், முத்துக்கள் முதலிய விலை உயர்ந்த உலோகங்களால் அமைந்த கடவுள் படிமங்கள், பொற்பாத்திரங்கள், பொற்குடைகள், கொடிகள், விளக்குகள் முதலியன அளிக்கப்பட்டதனைச் சொத்துப் பதிவேடுகள் அறிவிக்கின்றன. நிலங்கள், கிராமங்கள், பண்ணைகள், ஆடு மாடுகளின் தொகுதிகள் ஆகியவை வழங்கப்படுவது கோயிலின் செல்வச் செழிப்பிற்கு இரண்டாவது மூலாதாரமாக விளங்கியது. அதன் விளைவாகக் கோயில்கள் வாழ்ந்ததுடன் வளமடைந்தன''* (:42) என்று குறிப்பிடுகிறது. இது பெருங்கோயில் தன்மைகளில் ஒன்றான சொத்துடைமைப் பண்பினை வெளிப்படுத்துகின்றது. இத்தகையப் பண்புகளைக் கொண்ட பெருங்கோயில்களின் இறைவன், இறைவி, துணைத்தெய்வங்கள், கட்டடஅமைப்பு ஆகியவை குறித்து மக்களிடம் ஏராளமான புராணக் கதைகள்(*myth)*, பழமரபுக் கதைகள்(*legend)*, கதைகள்(*tale)*, நம்பிக்கைகள் வழக்குமரபில் காணப்படுகின்றன. இவை குறித்து இவ்வியல் ஆராய்கின்றது.

புராணங்கள், பழமரபுக்கதைகள், கதைகள் போன்ற வாய்மொழி வழக்காறுகளைப் பொதுவாகக் 'கதையாடல்' (narration) என்பர். *'கற்பனை அல்லது கற்பனையற்று திரும்பத் திரும்ப சொல்லப்படும் நிகழ்வுகளின் தொகுப்பே கதையாடலாகும். கதை(story), கதையாடல் ஆகிய இரண்டும் நிகழ்வுகளின் தொகுப்புகளாகும். இரண்டிற்குமான வேறுபாடு மிகச் சிறியதே. நிகழ்வுகளின் தொகுப்புக்களாக மட்டும் அமைவது கதை ஆகும். ஒரு காரணம் அல்லது நோக்கத்துடன் அக்கதை நிகழ்வுகள் வடிவமைக்கப்பட்டிருப்பின் அது கதையாடல் ஆகும்'* (Peter Brooker:1999:168).

புராணங்கள், பழமரபுக்கதைகள், நாட்டார்கதைகள் ஆகிய மூன்றிற்கும் இடையிலான வேறுபாடுகள் மிக நுணுக்கமானதாகும். இதனை மானிடவியல் பேராசிரியர் வில்லியம் பாஸ்கம் பின்வருமாறு அட்டவணைப்படுத்துவதாக தே.லூர்து (1988:141) குறிப்பிடுகின்றார்.

| வடிவம் | நம்பிக்கை | காலம் | இடம் | மனப்பான்மை | கதைமாந்தர் |
|---|---|---|---|---|---|
| புராணக்கதை | உண்மை | நினைப்பிற்கெட்டாநெடுங் காலத்திற்கு முன் | பல்வேறுலகம் | புனிதம் | மனித இனம் சாராதோர் |
| பழமரபுக்கதை | உண்மை | அண்மைப்பழங்காலம் | இவ்வுலகம் | சாதாரணம் | மனிதர் |
| நாட்டார்கதை | புனைவு | எல்லாக்காலத்திலும் | எல்லாஇடங்களிலும் | சாதாரணம் | மனிதர் அல்லது மற்றையவை |

புராணங்களின் இயல்பு அவை உண்மையானதாகவும் புனிதமானதாகவும் நினைப்பிற்கெட்டாத காலத்திற்கு முன்னர் நடந்தவையாகவும் நம்பப்படுபவையாகும். புராணக் கதைமாந்தர்கள் மனிதர்களரல்லர் என்பது புராணங்களின் முதன்மையான பண்பாகும். கதையாடல்கள் ஒவ்வொன்றினையும் ‘செவ்வியல்(classic)’, ‘நாட்டார்(folk)’ என இரண்டாக வகைப்படுத்தலாம்.

எடுத்துக்காட்டாக, கதையாடல்களுள் ஒன்றான புராணத்தைச் ‘செவ்வியல் புராணங்கள்’, ‘நாட்டார் புராணங்கள்’ என இரண்டாக வகைப்படுத்தலாம். பௌராணிக மரபுக்கதைக் கூறுகளைக் கொண்டு எழுத்துவடிவில் காணப்படும் தெய்வக்கதைகளைச் செவ்வியல் புராணங்கள் எனலாம். மக்கள் வாய்மொழியாகக் கேட்டு பல வடிவ வேறுபாடுகளுடன் (version and variation) தெரிந்து வைத்துள்ள தெய்வக்கதைகளை நாட்டார் புராணங்கள் எனலாம்.

**புராணம்: வரையறை**

‘புராணம்’ என்ற சொல் இந்த ஆய்வேட்டில் ஆங்கிலச் சொல்லான

myth என்பதற்கு இணையாகப் பயன்படுத்தப்படுகின்றது. *'myth என்பது கிரேக்கச் சொல்லான muthos என்ற சொல்லிலிருந்து பெறப்பட்டதாகும். கடவுள், இயற்கை கடந்த உயிர்களைப் பற்றிய கதைகள் mythos என அழைக்கப்படுகின்றன'* (Encyclopaedia of Social Sciences: Page 261). *'புராணம் என்ற சொல் புராதனம் (பழமை) என்ற வடமொழிச் சொல் அடியாகப் பிறந்ததாகும். புராணம் என்ற இவ்வடசொல் புரா-நவ என்ற இரு வேர்ச் சொல்களிலிருந்து பிறந்ததாகும். இதன் பொருள் பழமைக்கும் பழமையாய் புதுமைக்கும் புதுமையாய் உள்ளது என்பதாகும்'* என்கிறார் வே.இரா.மாதவன் (1995:5). இவரது இவ்வரையறை உணர்ச்சி வசத்தில் செய்யப்பட்டதாகும். புராணம் என்பது பழமையை மையமிட்ட கதையாகும். அவற்றில் புதுமை எதுவும் சேர்க்கப்படுவதில்லை. புராணம் என்பதற்குக் கதையாடுவோர் காலத்திற்கு முன் நிகழ்ந்தது என்பதே பொதுப்பொருள் ஆகும்.

புராணம் என்ற சொல்லை, *'காதல் கொண்டு கடல்வணன் **புராணம்** ஓதினன்'* என முதன் முதலில் மணிமேகலையில்(27:98-99) காண்கிறோம். புராணங்கள் என்பன கதைகளின் தொகுப்புக்களாகும். இவற்றில் மனிதனின் விருப்பங்கள், ஏக்கங்கள், கற்பனைகள், நம்பிக்கைகள் ஆகியவை கலந்துள்ளன.

'புராணம்' வடமொழிச் சொல் என்பதனால் தமிழ் ஆய்வுலகில் 'தொன்மம்' என்ற சொல் பயன்படுத்தப்பெறுகிறது. *"ஒரு சமுதாயத்தின் அமைப்பு, சட்டவிதிகள், ஒழுக்கமதிப்பு ஆகியவற்றின் அடித்தளமாய் அமைகின்ற முக்கியமான சமுதாய ஆற்றலே தொன்மம். இது நம்பிக்கைகளை ஒழுங்குபடுத்தித் தொகுத்தமைப்பதுடன் நடைமுறைச் செயற்பாட்டை வழிப்படுத்துவதாயும் ஒழுகலாற்று விதிகளைப் பயிற்றுவிப்பதாயும் அமைகின்றது. இது சடங்கு உள்ளிட்ட அனைத்து*

*வாழ்வியற் கூறுகளிலும் ஊடுருவி நிற்கின்றது"* என்று மாலினோவ்ஸ்கி கூறுவதை பெ.மாதையன் (2006:26) எடுத்துரைக்கின்றார்.

*'புராணத்தை உயர்ந்ததாகச் சொல்லி அதைச் சமயத் துறையில் ஒரு காவிய வரலாறாகப் படைத்த பெருமை சைனரைச் சாரும்'* (1974:12) என வே.கிருஷ்ணசாமி சமயத்திற்கும் புராணத்திற்குமான தொடர்பினை மதிப்பிடுகிறார்.

**புராணங்களின் வகைகள்**

புராணங்கள் என்ற நிலையில் தமிழில் பல பெருநூல்களும், சிறுநூல்களும் நமக்குக் கிடைக்கின்றன. அவற்றின் அமைப்பு, உள்ளடக்கத்தைக் கொண்டு புராணங்களைப் பின்வருமாறு வகைபாடு செய்கின்றனர்.

*'1.மகா புராணங்கள், 2.இதிகாசப் புராணங்கள் 3.சிவபுண்ணியம் சிவதருமம் கூறுவன 4.ஆண்டவன் அடியார் வரலாறும் பிற வரலாறும் 5.சாதிப் பெருமை விளக்குவன 6. ஊர்ச் சிறப்பினை எடுத்துரைப்பன (தலபுராணம்) என்பனவாகும்'* வே.இரா.மாதவன் (1995:25). அவர் புராணங்களின் ஒருவகையாக தலபுராணத்தைக் குறிப்பிடுகிறார்.

**தலபுராணம்**

ஒருதலத்திலுள்ள இறைவனது பெருமையினை விரித்துச் சொல்வது தலபுராணமாகும். ஊர்ப்பெயர், இறைபெயரில் இப்பெருமைகள் பேசப்படுகின்றன. இவ்வகைப் புராணநூல்கள் 'தலம்', இறைவனாகிய 'மூர்த்தி', அங்கு அமைந்துள்ள நீர்நிலையாகிய 'தீர்த்தம்' ஆகிய மூன்றின் பெருமைகளையும், தலத்து இறைவனைப் பூசித்து நற்பேறு பெற்றவர்களின் கதைகளையும் எடுத்துரைக்கின்றன.

*'தலம் என்பது 'ஸ்தல' என்ற வடசொல்லின் தமிழ் வடிவமாகும்'* (வே.இரா.மாதவன்:1995.30). தலம் என்பதற்கு 'இடம்', 'பூமி' எனப் பிங்கல நிகண்டு பொருள் தருகின்றது. இங்கு கோயில் அமைந்துள்ள இடம் 'தலம்' எனப் பொருள் கொள்ளப்படுகின்றது. தலம் என்னும் சொல்லைத் தமிழில் எழுத்துப் பதிவாக முதன் முதலில் **'இத்தலம்** நீங்கேன் இளங்கொடியானும்'(21-169) என மணிமேகலையிலே காண்கிறோம். இட்ட(இஷ்ட) தெய்வங்களுக்கான புராணங்கள் தோன்றிய பின்னரே மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பனவற்றின் சிறப்பைக் காட்டுவதற்காகத் தலபுராணங்கள் தோன்றின எனலாம். தமிழில் காணப்பெறும் தலபுராணம் என்ற எழுத்திலக்கிய வகைமை(genre) கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றியதாகும்.

## தமிழ்த் தலபுராண வரலாறு

*"தலபுராணங்களாக அட்டாதச புராணம், கன்னிவன புராணம் என்று இரண்டு புராணங்கள் பன்னிரண்டாம் நூற்றாண்டில் ஏற்பட்டன என்று சாசன வாயிலாக அறிகிறோம். இப்பண்டைப் புராணங்கள் ஒன்றும் இன்று கிடைக்கவில்லை. கிடைக்கின்ற புராணங்களில் பழமையானது சேக்கிழார் பாடிய பெரியபுராணமே"* என்கிறார் மு.அருணாசலம் (2005:தொகுதி8:38). திருவாலவாயுடையார் திருவிளையாடல் புராணமே இன்று நமக்குக் கிடைக்கும் முதல் தமிழ்த் தலபுராண நூலாகும். இது மதுரை இறைவனான, சொக்கரின் திருவிளையாடல்களைப் பேசுகின்றது. இதன் ஆசிரியர் பெரும்பற்றப் புலியூர் நம்பி ஆவார். இவர் கி.பி பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். தலபுராணம் பெருமளவில் எழுதப்பட்டது பதினான்காம் நூற்றாண்டிலே ஆகும். 19ஆம் நூற்றாண்டில் 'புராணக்கருவூலம்' எனப் பெயர்பெற்ற மீனாட்சிசுந்தரம் பிள்ளை இருபத்தேழு புராணங்களைப் படைத்துள்ளார்.

## தலமும் புராணங்களும்

தலபுராணங்கள் பெரும்பாலும் ஒருதலத்திற்கு ஒருபுராணம் என அமைகின்றன. ஒருதலத்திற்கு ஒன்றிற்கு மேற்பட்ட புராணங்களும் இயற்றப்பட்டுள்ளன. உதாரணமாக, மதுரை மீனாட்சியம்மன் கோயில் 'மரகதாசல மான்மியம்', 'கடம்பவனப் புராணம்', 'திருவாலவாயுடையார் திருவிளையாடல் புராணம்', 'திருவிளையாடல் புராணத்திரட்டு' எனப் பல புராணங்களைப் பெற்றுள்ளது. தமிழகத்தில் மதுரையே அதிக எண்ணிக்கையிலான புராணங்களைப் பெற்ற தலம் ஆகும். ஒரு புராணத்தை ஒருவரே முழுமையாக இயற்றுவது பொது வழக்கமாகும். இருப்பினும் ஒரு தலபுராணத்தை ஒருவருக்கு மேற்பட்ட புலவர்கள் பகுதி பகுதியாக இயற்றியுள்ளதையும் காணமுடிகின்றது. திருக்கூவப்புராணம் செய்த சிவப்பிரகாசசுவாமிகள் தன்னுடைய இரு சகோதரர்களான கருணைப்பிரகாசர், வேலையர் ஆகியோருடன் இணைந்து சீகாளத்திப் புராணத்தைப் படைத்துள்ளார்.

### 2.1.1. வடிவமும் உள்ளடக்கமும்

தலபுராணங்கள் ஒத்த வடிவமைப்பினைக் கொண்டுள்ளன. அவை மூர்த்தி (இறைவன்), தலம்(ஊர்-இடம்), தீர்த்தம்(புனிதநீர்) ஆகிய மூன்றினைப் போற்றுகின்றன. இதனையே தாயுமானவர்

'**மூர்த்தி தலம் தீர்த்தம்** முறையால் தொடங்கினர்க்கு ஓர்
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே'
(43பராபரக்கண்ணி:156) எனக்

குறிப்பிடுகின்றார்.

இது ஒரு பொதுவடிவமாகும். விரிவாக நோக்கும் போது தலபுராணங்கள் மேலும் சில பொதுக்கூறுகளைக் கொண்டுள்ளன. அவை:

1.காப்புச்செய்யுள் 2.கடவுள்வாழ்த்து 3.அவையடக்கம் 4.திருநாட்டுச்சருக்கம் 5.திருநகரச் சருக்கம் 6.நைமிசாரண்யச் சருக்கம். 7.புராண வரலாற்றுச்சருக்கம் 8.திருநதிச்சருக்கம் 9.தலமகிமைச் சருக்கம் 10.மூர்த்தி விசேடச் சருக்கம் என்பனவாகும்.

இறைவன் 'தலத்தில் தோன்றியமுறை', 'அதற்கான காரணம்', 'அவன் புரிந்த திருவிளையாடல்கள்' ஆகியனவற்றை விளக்கும் கதைகள் தலபுராணங்களில் காணப்படுகின்றன. இக்கதைகள் விண்ணுலகம் (பௌராணிக மரபு) சார்ந்தும், மண்ணுலகம் (நாட்டார் மரபு) சார்ந்தும் உள்ளன. 'இறைவன் வானிலிருந்து கீழே இறங்கி பூமிக்கு வந்தவன்' எனக்கூறுவது பௌராணிகக் கதை மரபு ஆகும். இறைவன் இம்மண்ணில் தானாக அல்லது வேறோரு உயிரியின் துணையால் வெளிப்பட்டுத் தோன்றியவன் எனக் கூறுவது மண்ணுலகம் சார்ந்த கதை ஆகும். தலபுராண நூலில் இம்மண்ணுலகம் சார்ந்த கதைகள் ஒருபகுதியாக இருப்பினும் அவை விண்ணுலகம் சார்ந்த வடமொழிப் பனுவலோடு நெருக்கமற்று இருப்பதையே அறியமுடிகின்றது. இந்த நாட்டார் பண்பாட்டியற் கூறுகள் புராணங்களில் காணப்படுவதற்கான காரணத்தைக் க.கைலாசபதி பின்வருமாறு எடுத்துரைக்கின்றார்.

*"சாத்திர நூல்களை அடுத்து இலக்கியப் பண்புகளுடன் தோன்றிய புராணங்களிலே நாட்டார் பண்பாட்டியற்கூறுகள் வெவ்வேறு விதங்களில் பிரதிபலிக்கின்றன. தலபுராணங்கள் பெரும்பாலும் மக்கள் மத்தியில் வழங்கிய செவிவழிச் செய்திகளையும் வாய்மொழிப் பாடல்களையும் ஆதாரமாய்க் கொண்டு எழுந்தவையே'* எனத் தெ.பொ.மீ குறிப்பிடுவதை எடுத்துக்காட்டி *'நாட்டார் பண்பாட்டியற் கூறுகள் தலபுராணங்களில் அதிகமாக இடம் பெற்றமையாலேயே அவை மக்கள் மத்தியில் பிரபல்லியம் அடைந்தன"* (1979:146) என்கிறார். தலபுராண நூலில் இந்த நாட்டார் மரபுக்கதைகளின்

இணைப்பிற்கான தேவை அல்லது காரணத்தைக் கண்டறிவது இவ்வியலின் நோக்கமாகும். தலபுராணங்கள் தொடங்கும் நிலையிலேயே தம்மை 'வடமொழிப் புராணங்களின் தழுவல்கள்' எனத் தயங்காமல் கூறுகின்றன. இதனைப் பெருமையாகவும் கருதுகின்றன. இதனைப் புராணங்களின் ஒரு கதைக்கூறு(motif) எனலாம். இதற்கான காரணம் யாது?

*"பல்லவர் காலச் சைவ, வைணவ எழுச்சியால், குன்றுதலுற்ற சமண, பௌத்த மதங்கள் சோழப் பெருமன்னர்களின் பரந்த மனப்பான்மை காரணமாக மீளவும் தலையெடுக்கலுற்றன. அவற்றின் வளர்ச்சியைத் தடை செய்து சைவம் பெற்றுவிட்ட வெற்றியை நிலை நிறுத்த வட இந்தியாவில் முன்பு புராணங்கள் தோன்றியது போலத் தமிழ் நாட்டிலும் சோழர் காலத்தில் புராணங்களை உருவாக்கினர். இதனாலேயே தமிழில் புராணங்கள் சில தோன்றின்"* (ஆ.வேலுப்பிள்ளை:1969:97) எனத் தமிழ்ப் புராணங்களின் தோற்றக்காலத்தையும், அவற்றின் வடமொழித் தழுவல்களுக்கான காரணத்தையும் எடுத்துரைப்பர்.

## 2.1.1.0. உள்ளடக்கம்

### கதைக்கூறு

தலபுராணங்களில் சில பொதுக் கதைக்கூறுகள் இடம்பெற்றுள்ளன. *"நாட்டார் வழக்காறுகளில் திரும்பத் திரும்ப வரும் குறிப்பிடத்தக்க அலகே கதைக்கூறு ஆகும். அக்கூறு ஒரு பொருளாக இருக்கலாம், ஒரு கருத்தாக்கமாகலாம், ஒரு செயலாக இருக்கலாம், ஒரு கதாபாத்திரமாக இருக்கலாம், ஓர் அமைப்பியல் கூறாகலாம் "*(தே.லூர்து:1988:154). இங்கு 'வடமொழிப் புராணங்களின் தழுவல்கள்' என்ற கருத்து கதைக்கூறாகக் கருதப்படுகிறது. புராணங்கள் தம்மை *'வாய்மொழி இலக்கிய வகைமையாகக்'* காட்டிக்கொள்ளும் கதைக்கூறினைக் காண்போம்.

#### 2.1.1.1. வாய்மொழியாகச் சொல்லப்பட்டவை

புராணங்கள் பெரும்பாலும் முனிவர் ஒருவரால் அல்லது சூதமுனிவரால்[1] அவரது சீடர்களுக்கு வாய்மொழியாகச் சொல்லப்பட்ட விதத்தை முதலில் எடுத்துரைக்கின்றன. *"நைமிசாரண்யத்தில் ரிசிகளும் முனிவர்களும் ஒன்றாகக் கூடினர் அவர்கள் சூத முனிவரை திருமால் விரும்பும் புனித இடத்தையும் அவனது திருவிளையாடல்களையும் எடுத்துரைக்க வேண்டினர். சூதமுனிவர் இத்தலத்து (திருப்பதி வேங்கடேசப்பெருமாள்) வரலாற்றை எடுத்துரைக்கலானார்"* (N.Ramesan:2004:176). என்பது திருப்பதி வேங்கடேசப் பெருமாள் கோயில் தலபுராணமாகும்.

இவ்வாய்வுப் பகுதிக்குரிய கோயில் புராணங்களில் இக்கதைக்கூறு வெளிப்படுவதைக் காணலாம். **நெல்லையப்பர் கோயில்** வேணுவன புராணக் கதையாவது:

*"பூவுலகம் எல்லாம் இன்பமாக வாழ, இறைவி பூசை செய்ய ஏற்ற இடத்தைக் காட்டுமாறு இறைவனிடம் கேட்டாள். இறைவன் வேணுவனத்தில் காஞ்சி என்ற மரத்தின்கீழ் இறைபூசை செய்யலாம் என இறைவியை அனுப்பி வைத்தார்... இதனை சனகாதி முனிவர்கள் வேண்ட சூத முனிவர் கூறினார்"* (வேணுவன புராணம்:37).

நாங்குநேரி **வானமாமலை (தோதாத்திரி)ப்** பெருமாள் கோயில் தலபுராணம், நைமிசாரணியத்து முனிவர்கள் இத்தலத்தின் பெருமையை எடுத்துரைக்கச் சூத புராணிகரை வேண்டினர் எனத் தனது தலபுராணத்தைப் பேசத் தொடங்குகிறது.

*"நைமிசாரணியத்து முனிவர்கள் சூத புராணிகரை நோக்கி, புராணப்பொருள்களைத் தெள்ளதின் அறிந்துணர்ந்த ஆன்றவரே, முன்பு*

*நீர் பிரம்மாண்ட புராணத்தை விளக்கியுரைத்தீர். அப்புராணத்தில் வானமாமலை சிறப்பாகப் புகழப்பட்டது. அதன் பெருமைகளை விளக்கி உரைக்க வேண்டும் என்று வேண்டினார். அதைக் கேட்ட சூத புராணிகர் பிரம்மாண்ட புராணத்தில் கூறியுள்ளபடி, வானமாமலைப் புராணத்தை உரைக்கலுற்றார்"* (தோதாத்திரி தலவரலாறு பக்1-2).

நெல்லை மாவட்டம் சங்கரன்கோவில், **சங்கரநாராயணர் கோயில்** சிவனும், திருமாலும் ஒன்றாக இணைந்து காட்சி கொடுத்த தலம் என நம்பப்படுகின்றது. இத்தலத்துப் புராணம் சிவபெருமானால் சொல்லப்பட்டதாகத் தொடங்குகின்றது.

*"உமாதேவியார் சிவபெருமானிடத்தில், விஷ்ணுமூர்த்தியுடன் நீர் பொருந்தியிருக்கும் திருக்கோலத்தைக் காட்ட வேண்டும் என்று விண்ணப்பம் செய்தார். சிவபெருமான் அம்மையாரிடம், அகத்திய முனிவரிருக்கும் பொதிகை மலைப்பக்கத்தில் புன்னை மர வடிவமாக தவம் செய்கின்றவர்களோடு நீயும் சென்று தவம் செய்வாயானால் நீ விரும்பிய திருஉருக்காட்டுவோம் என்றார். அவர்களுக்கு ஆடிமாதம் பௌர்ணமியன்று இறைவன் சங்கர நாராயணராகிய திருஉருவக் காட்சிகொடுத்தார்"* (சங்கரநாராயணர் கோயில் தலவரலாறு: பக்.8).

இதுவரை பேசப்பட்ட சைவ, வைணவக் கோயில்களின் தலபுராணங்களில் அவை 'வாய்மொழியாகச் சொல்லப்பட்டவை' என்பது ஒரு தனித்தகதைக்கூறாக இடம்பெறுவதற்கான காரணங்களை நோக்கவேண்டும்.

பெருங்கோயிலின் பண்புகளில் ஒன்று அது தன்னைத் தொன்மையானதாக வெளிக்காட்டுவது ஆகும். தலப்பெயர், இறைப்பெயர் மூலம் இதனை உறுதிப்படுத்த தலம் 'ஆதிபுரம்' என்றும் இறைவன்

'ஆதிநாயகன்' எனவும் சில இடங்களில் பெயரிடப்பட்டுள்ளனர். புராணங்கள்வழி இக்கருத்தினை வலியுறுத்தவே அவை முனிவர்களால் 'வாய்மொழியாகச் சொல்லப்பட்டவை' என்ற கதைக்கூறினைப் பயன்படுத்துகின்றன எனலாம்.

### 2.1.1.2. **விண்ணுலகிலிருந்து பூமிக்கு இறங்கி வருதல்**

புராணங்களில் இடம்பெறும் மற்றுமொரு கதைக்கூறு *'தெய்வங்கள் விண்ணுலகத்திலிருந்து மண்ணுலகத்திற்கு (தலத்திற்கு) இறங்கி வந்தன'* என்பதாகும். அதாவது இறைவனும், இறைவியும் விண்ணுலகத்திலிருந்து இப்பூமிக்கு இறங்கி வந்ததையும், அதற்கான காரணங்களையும் தலபுராணங்கள் விளக்குகின்றன.

*"பிரம்மா தான் கொண்டிருந்த வேதசாத்திரங்களை சோமகன் என்னும் கொடியவனிடம் இழந்தார். அதனைத் திரும்பப் பெறுவதற்காக திருவைகுண்டத்தில் தவமிருந்தார். திருமால் வைகுண்டத்திலிருந்து இறங்கி வந்து இத்தலத்தில் தவமிருந்த பிரம்மனுக்கு காட்சி கொடுத்தார்"* (திருவைகுண்டம், கள்ளப்பிரான் கோயில் தலவரலாறு பக் 7-9). பிரம்மனுக்குக் காட்சியளிக்க திருமால் விண்ணிலிருந்து இத்தலத்திற்கு இறங்கி வந்தார் என்பதே தலபுராணச் செய்தியாகிறது.

'விண்ணுலகம்' என்பது ஒரு கற்பித வெளியாகும். வழிபடும் அடியவர்களாலும், பிராமணர்களாலும் இவ்வெளி உயர்வானதாகவும் புனிதமானதாகவும் கருதப்படுகின்றது. பெருங்கோயில்கள் என்பன புனிதம், தீட்டுக் கோட்பாட்டைப் பேணிக்காக்கும் நிறுவனங்களாகும். இறைவனின் புனிதத்தை விளக்குவதற்காகத் தலபுராணங்கள் இத்தகைய கதைக்கூறினைக் கொண்டுள்ளன எனலாம்.

### 2.1.1.3. பிறகூறுகள்

தலபுராணங்கள் வேறு சில பொதுவான கதைக்கூறுகளையும் கொண்டுள்ளன. அவை, 'இக்குறிப்பிட்ட தலத்திற்கு ஈடான வேறொன்று இப்பூமியில் இல்லை'. 'இத்தலத்தில் வாழ்பவர்கள் புண்ணியம் செய்தவர்கள்'. 'இத்தலம் பாவம் செய்வதால் கிடைக்கும் சாபத்தைப் போக்கக்கூடியது'. 'இங்கு செய்யப்படும் மிகச் சிறிய சடங்கு, பலகோடி சடங்கு முறைகளுக்கு ஈடானது'. 'இத்தலத்துப் புராணத்தைப் படித்தவர்களும், கேட்டவர்களும் தேவலோகம் செல்வர்' என்பனவாகும். இவைகளைத் தமிழ்த் தலபுராணங்களின் பொதுக்கூறுகள் எனலாம்.

### 2.1.2. உள்ளூர்த் தன்மைகள்

தலபுராணங்கள் மேலே கூறப்பட்ட பொதுக் கூறுகளோடு, சில உள்ளூர்த் தன்மையுடைய கதைகளையும் கொண்டுள்ளன. அவை இத்தலத்திற்கு மட்டுமே உரிமையுடையன என வாதிடுகின்றன. இறைவன் தோன்றிய விதம், அவன்செய்த திருவிளையாடல்கள் ஆகியனவற்றை உள்ளூர் மரபுகளுடன் எடுத்துரைக்கின்றன. இக்கதைகள் கோயில்களில் சடங்குகளாகவும் நிகழ்த்தப்படுகின்றன. *"சடங்கு அல்லது வழிபாட்டு வடிவில் நிகழும் எந்த உள்ளூர்த் தனிப்பண்புகளும் (Idiosyncrasies) புராணங்கள் மூலம் விளக்கப்படுகின்றன"* என்கிறார் சுல்மன்(1980:17).

இக்கதைகள் பல தலைமுறைகளாகக் குறிப்பிட்ட தலத்து மக்களால் மட்டும் நினைவுபடுத்தப்படுகின்றன. அதாவது இக்கதைக்கூறினையும், அதன் சடங்கியல் நிகழ்த்துமுறையினையும் கோயில் அமைந்துள்ள நிலப்பகுதியினைச் சார்ந்த மக்கள் மட்டுமே அறிந்து வைத்திருப்பர். புராணங்களின் இத்தகைய தனித்துவமான கூறுகளை உள்ளூர்மரபுகள் எனலாம்.

நெல்லையப்பர் கோவில் தலபுராணமான **வேணுவனப் புராணம்** இறைவனின் தோற்றம் பற்றி பௌராணிக மரபிற்குரியதும் உள்ளூர் மரபிற்குரியதுமான கதையினைக் கொண்டுள்ளது. அம்மனின் தவத்திற்கு இரங்கி இறைவன் விண்ணிலிருந்து இறங்கி பூமிக்கு வந்தார் என்ற பௌராணிகக் கதையினை முன்னர்க் கண்டோம். உள்ளூர் மரபுக்கதை வேணுவனப் புராணத்தில் **'வேண்ட வளர்ந்த சருக்கம்'** என்னும் பெயரில் அமைந்துள்ளது. இது நெல்லையப்பர் இத்தலத்தில் தோன்றிய கதையினைப் பின்வருமாறு விளக்குகின்றது.

*''இராமக்கோன் என்னும் இடையன் மணற்படை வீட்டில் (திருநெல்வேலிக்கு அருகிலுள்ள ஊர்) ஆட்சிபுரியும் பாண்டிய மன்னது அரசவைக்கு நாள்தோறும் மூங்கில்காடு வழியே மட்பானையில் பால் கொண்டு செல்வது வழக்கம். அவ்வாறு செல்லும் போது மூங்கில் தூறு ஒன்று இடையனின் காலை நாள்தோறும் இடறிவிட்டதால் பால் கொட்டியது. இடையன், அரசனின் கோபத்திற்குள்ளானான். கோபமடைந்த இராமக்கோன் ஒரு நாள் கோடரி கொண்டு மூங்கில்தூறை வெட்டினான். வெட்டுப்பட்ட இடத்திலிருந்து இரத்தம் பீறிட்டுவந்தது. அதிர்ச்சியும் வியப்பும் அடைந்த இடையன், இச்செய்தியை அரசனுக்குத் தெரியப்படுத்தினான். இதனைக் காணவந்த பாண்டிய மன்னன் தனதுகையால் மூங்கில் தூறைத்தொட்டபோது குருதி கசிவது நின்றது. அரசனுக்குக் காட்சிகொடுக்க இறைவன் நெடியவனாக வளர்ந்தான். அரசன், இறைவனிடம் எல்லோரது பார்வைக்கும் படும்படியாகத் தோன்ற வேண்டினான். இறைவன் அரசனின் ஆசைக்கு இணங்கி வணங்குவதற்கு ஏற்ற உயரமாக வளர்ந்தான். இதனால் 'வேண்ட வளர்ந்த நாதன்' என்ற பெயரைப் பெற்றான்''* (வேணுவன புராணம் பக் 8-12).

இத்தோற்றக் கதையினை இரட்டைப் புலவர்கள் பின்வருமாறு பாடியுள்ளனர்.

*'வேயீன்ற முத்தர்தமை வெட்டினானே யிடையன்*
*தாயீன்ற மேனி தயங்கவே- பேயா கேள்*
*எத்தனைநா ளென்றே யிடறுவான் பாற்குடத்தை*
*அத்தனையும் வேண்டு மவர்க்கு'*

(தனிப்பாடற்றிரட்டு: தொகுதி ஒன்று: பா: 33)

என்பது அப்பாடலாகும். இரட்டைப்புலவர்களின் காலம் கி.பி.14 ஆம் நூற்றாண்டு என்று மு.அருணாசலம் (2005:தொகுதி 8:17) வரையறுக்கின்றார். எனவே இக்கதை பதினான்காம் நூற்றாண்டிலிருந்து வழக்கில் இருந்து வருகின்றது என்பது தெரியவருகிறது. இக்கதை எளியமனிதர் ஒருவரின் செயலால் இறைவன் பூமியின் உள்ளிலிருந்து வெளிப்பட்டதாகப் பேசுகின்றது.

இக்கதையில் இறைவன் விண்ணிலிருந்து இறங்கியதாகச் சொல்லும் பௌராணிகக் கூறு இடம்பெறவில்லை. ஆனால் அதற்கு மாறாக பூமிக்குள் மறைந்திருந்த இறைவன், கால்நடைவளர்ப்பில் ஈடுபட்ட இடையர் சாதி மனிதருக்குக் காட்சி கொடுத்ததாகக் கூறுகின்றது. இது எளியமனிதரை- அவர் சார்ந்த மனிதத் திரளை- கோயிலோடு இணைக்கும் பணியினைச் செய்கின்றது.

'பால் கொட்டிய இடத்தில் இறைவன் தோன்றுதல்', 'காயப்படுத்தப்பட்டு இறைவன் தோன்றுதல்' என்பவை தமிழ்த் தலபுராணங்களின் கதைக்கூறுகள் ஆகும். *"வெள்ளைத்திரவமான பாலும் சிவப்புத் திரவமான குருதியும் இணையும் நேரத்தில் இறைவன் தோன்றுகிறான் என்பது தமிழ்ச் சைவக் கோயில் தலபுராணங்களில் காணப்படும் ஒரு பொதுவான அடிக்கூறாகும்"* என்பர் சுல்மன் (1980:13). இப்பொது கதைக்கூறு நெல்லையப்பர் புராணத்திலும் காணப்படுகின்றது.

ஆத்தூர்ச் சிவபெருமான், **'சோமநாதர்'** வெட்டப்பட்ட நிலையில் குருதியுடன் தோன்றியதாகத் தலபுராணம் கூறுகின்றது.

"ஆத்தூர் பழங்காலத்தில் ஆலமரங்கள் நிறைந்த காடாக இருந்தது. அக்காட்டிலிருந்த ஓர் ஆலமரத்தில் அரண்மனைப் பசு ஒன்று நாள்தோறும் பாலினைச் சுரந்தது. இச்செய்தியைப் பாண்டிய அரசனுக்குத் தெரிவித்தனர். அவன் மரத்தை வெட்ட ஆணையிட்டான். மரத்தை வெட்டும் போது குருதி வெளிவந்தது. இவ்வற்புதத்தை அரசனிடம் தெரிவித்தனர். அன்றிரவு அரசனின் கனவில் இறைவன் தோன்றி அவ்விடத்தில் கோயில் ஒன்றினை எழுப்ப வேண்டினான். அரசன் கோயிலைக் கட்டினான். இறைவன் ஆலமரத்தடியில் தோன்றியதால் அவ்வூர் 'ஆலத்தூர்' என அழைக்கப்பட்டுப் பின்னர் 'ஆத்தூர்' என மருவிற்று" (ஆத்தூர் தலபுராணம் பக் 1-3).

புராணக்கதைக்கூறு ஒவ்வொன்றும் பண்பாட்டில் சில செயற்பாட்டினைக் (function) கொண்டுள்ளது. அச்செயற்பாடுகளில் ஒன்றே தலத்து இறைவனை உள்ளூர்மயமாக்குதல் ஆகும். வேளாண் பொருளாதாரத்திலிருந்து கிடைத்த உபரி உற்பத்திப் பொருளைக் கொண்டே பெருங்கோயில்கள் எழுப்பப்பெற்றன. இருப்பினும் இந்நிலையில் கால்நடை வளர்ப்புக் குடிகளின் ஆதரவைப் பெறுவதற்காக இத்தகைய கதைகளைப் பெருங்கோயில்கள் உருவாக்கியுள்ளன. இதன்மூலம் வழிபாட்டில் *பால் பொருள்களின்* [1] அன்றாடத் தேவையினை நிறைவு செய்து கொள்வதையும் காண்கிறோம். இவை இக்கதைக்கூறின் செயல்பாடுகளுள் சிலவாகும்.

தலபுராணங்களின் மற்றொரு பண்பு, அத்தலத்து இறைவனை 'நிரந்தரமானவன்' எனக்கூறுவதாகும். இப்பண்பைச் சுட்டிக்காட்டும் விதமாக இறைவன் 'அழியாபதி', எனப் பெயரிடப்பட்டுள்ளார். தலங்கள் 'நிரந்தரபுரி' என அழைக்கப்படுகின்றன. திருநெல்வேலி கருப்பந்துறைச் சிவன், 'அழியாபதி' ஆவார். திருவைகுண்டம் **கள்ளப்பிரான்** கோயில் தலபுராணம்

இப்பொதுத் தன்மையிலிருந்து வேறுபட்ட நிலையில் தலம் அழிந்ததாகத் தனது தோற்றக் கதையினை எடுத்துரைக்கின்றது. இது ஆற்றங்கரை மீது அமைந்துள்ள கோயில் ஆகும்.

*"நிலவுலகில் வைகுண்டபதி பிரமன் தபசுக்கு மகிழ்ந்து அர்ச்சாவிக்ரகமாக இத்தலத்தில் எழுந்தருளிய பின் சில காலம் கழித்து இந்தச் சிறிய சந்நிதியும் வைகுந்தபதி விக்ரமும் பூமியில் புதையுண்டன...."* (கள்ளப்பிரான் கோயில் தலவரலாறு பக்:1).

தலம் அழிந்து பின்னர் தோன்றியதாகக் கூறுவது ஆய்விற்குரியதாகும். வைகைஆற்றின் தென்கரையிலுள்ள அயன் குருவித்துறை என்ற ஊரில் சிவன் கோயில் ஒன்று இருந்து பின்னர் அழிந்ததை வெ.வேதாசலம் (2002:272) குறிப்பிடுகின்றார். இக்கோயில் கி.பி ஏழாம்-எட்டாம் நூற்றாண்டில் ஆட்சி செய்த பாண்டியர்களால் எழுப்பப்பட்டு, பதினொன்றாம் நூற்றாண்டு வரை செழிப்புடன் இருந்து, பின் அழிந்ததை அங்கு கிடைத்த சிற்பங்களைக் கொண்டு உறுதிப்படுத்துகிறார். அப்பகுதி இப்போதும் 'ஈசுவரமேடு' என அழைக்கப்படுவதையும், அங்கு கருங்கல் கட்டுமானத்தின் அடிப்பகுதியும், செங்கற் கட்டடப்பகுதி ஒன்றின் அடித்தளமொன்றும் களஆய்வின் போது ஆற்றங்கரையில் கண்டறியப்பட்டதையும் அவர் தெரிவிக்கின்றார்

காவிரிக்கரைத் திருவரங்கத் திருப்பதி அழிந்து மீண்டும் எழுப்பப்பட்ட வரலாற்றைத் 'திருவரங்கம் கோயில்'(1993:10) நூலும் 'கோயிலொழுகும்'(.02) குறிப்பிடுகின்றன.

ஆய்வுப்பகுதியிலுள்ள வைகுண்டநாதர் கோயில் தாமிரபரணி ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. இக்கோயில் சிறியதாக இருந்த போது ஆற்று வெள்ளத்தால் அழிந்திருக்கக்கூடும். இப்போதுள்ள கோயில் அழிந்த

ஒன்றின் மேல் எடுக்கப்பட்ட மறுகட்டுமானமாக இருக்கலாம். ஆற்றங்கரைக் கோயில்கள் அழிந்து மீண்டும் எழுப்பப்பட்டதை இப்புராணக் கதைக்கூறு வெளிப்படுத்துகிறது.

'பசு பாற்சொரிதல்' என்பது கோயில் தோற்றப்புராணத்தின் ஒரு கதைக்கூறாகும். இது குறித்து சுல்மன் விரிவாக பேசுகின்றார். சைவக்கோயில்கள் போன்று வைணவக்கோயில் தலபுராணங்களும் பால் சொரிவின் போது திருமால் தோன்றியதாகக் கூறுகின்றன. திருவைகுண்டம், கள்ளப்பிரான் கோயில் தலபுராணம், பசு பால்சொரிந்த இடத்தில் இறைவன் தோன்றியதாகக் கூறுகின்றது.

*"அரண்மனைப் பசு ஒன்று பூமியிலுள்ள பிலத்துவாரத்தில் தன் பாலைச்சுரந்து அரண்மனையில் பால் கறக்காது இருந்ததை அரசனிடம் தெரிவித்தனர். அரசன் இதனைச்சோதிக்க வந்த போது பசு பிலத்துவாரத்தில் பால் சொரிவதைக்கண்டனர். அரசன் பூமியைத் தோண்ட அங்கு திருவைகுண்டபதி தோன்றினார்"* (திருவைகுண்டம் தலவரலாறு பக்:6).

இக்கதைக்கூறினை நினைவுபடுத்தும் விதமாக இறைவனுக்கு நாள்தோறும் முதலில் பால்திருமஞ்சனம் செய்யப்படுகின்றது. *"பால், குருதி ஆகியவற்றின் இணைவு சைவக்கோயில் தோற்றப் புராணத்தின் ஓர் அடிக்கூறாகும். பால், குருதி ஆகியன முறையே குளிர்ச்சியும் வெப்பமும் உடையதாகும். குருதி சக்தியுடன் (பெண்) இணைத்துப் பேசப்படுகின்றது. இந்தச் சக்தியை நிலைநிறுத்த பால் பயன்படுத்தப்படுகின்றது"* என்கிறார் சுல்மன் (1980:13). இந்த நிகழ்வுகளே இறைவனை உள்ளூர் மயப்படுத்துகின்றன.

**திருவிளையாடல்கள்**

தெய்வங்கள் பூமியில் நிகழ்த்திய அற்புதச் செயல்களே

'திருவிளையாடல்கள்' என அழைக்கப்படுகின்றன. நெல்லையப்பர் கோயில் தலபுராணத்தின், **'நெல்வேலிச் சருக்கம்'** இறைவனின் திருவிளையாடல் ஒன்றினை எடுத்துரைக்கின்றது.

*"வேதபட்டர் என்ற அந்தணர் ஒருநாள் திருவமுதிற்குரிய நெல்லைக் கோயில் முற்றத்தில் உலர வைத்து விட்டுத் தாமிரபரணி ஆற்றுத் துறைக்கு நீராடச் சென்றார். அப்போது பெரும் மழை பெய்தது. உலர வைத்த நெல் நனைந்து விடுமோ! எனப் பதற்றத்துடன் விரைந்து வந்தார். அவரது பதற்றத்தையும், வேதனையையும் உணர்ந்த இறைவன் நெல் மீது மழைநீர் பெய்யாதவாறு கண்ணுக்குப் புலனாகாத வேலியிட்டுப் பாதுகாத்தார். நனைந்து வந்த வேதபட்டர் இவ்வதிசயத்தைக்கண்டு கண்கலங்கினார். இறைவன் வேதபட்டருக்குக் காட்சி கொடுத்தார்"* (நெல்லையப்பர் கோயில் தலவரலாறு : பக் 25).

நெல்லையப்பரின் தோற்றத்தைக் கூறும் 'வேண்ட வளர்ந்த கதை', அவரது திருவிளையாடலான 'நெல்லிற்கு வேலியிட்ட கதை' என்ற இரு கதைகளும் வேணுவனத் தலபுராண நூலில் சேர்க்கப்பட்டிருப்பினும் அவை வடமொழிப் பனுவலோர்டு ஒட்டாமல் இருப்பதைக் காணமுடிகின்றது. அவை உள்ளூர்த் தன்மையுடன் விளங்குகின்றன. இக்கதைகளில் பௌராணிக மரபுக்கூறுகள் இடம்பெறவில்லை. இவ்விரண்டு கதையாடல்களும் இத்தலத்திற்கு மட்டுமே உரியன என்பதை உறுதிப்படுத்தும் வகையில் இத்தலத்தில் இவை சடங்காகவும் நிகழ்த்தப்படுகின்றன.

### 2.1.3. சடங்குநிகழ்த்துதல்

**வேண்டவளர்ந்த கதை (மூங்கில் திருவிழா)**

'வேண்டவளர்ந்த கதை' ஒவ்வொரு ஆண்டும் பங்குனித் திருவிழாவின் நான்காம் நாள் சடங்காக நிகழ்த்தப்படுகின்றது. இதனை **'மூங்கில்**

**திருவிழா', 'இராமக்கோன் கதை'** என மக்கள் அழைக்கின்றனர்.

'இராமக்கோன்' திருமேனி 'பால்காரர்' போன்ற அலங்காரத்தோடு மூங்கில் தூறுக்கு எடுத்து வரப்படுகின்றது. திருமேனியிலிருந்து கோடரியும், பாற்செம்பும் களையப்பட்டு மூங்கில் தூறில் வைக்கப்படுகின்றன. அன்றைய கட்டளைதாரரான உள்ளூர் இடையர் சாதியார் கொண்டு வந்த பால் மூங்கில் தூறில் கொட்டப்படுகின்றது. அவர்களில் ஒருவர் கோடரியைக் கொண்டு மூங்கில் தூறை வெட்டுவது போல் பாவனை செய்கின்றார். அதிலிருந்து இரத்தம் வருவது போல் காட்சியளிப்பதற்காகப் பாலில் குங்குமம் கரைத்து ஊற்றப்படுகிறது. குருதிவரும் காட்சியை அரசனிடம் தெரிவிக்கும் விதமாக இராமக்கோனின் திருமேனி, பாண்டியமன்னன் (செப்புத்திருமேனி) இருக்கும் மண்டபத்திற்கு எடுத்துச் செல்லப்படுகிறது. பாண்டியமன்னன் மேள, தாளங்களுடன் மூங்கில் தூறடிக்கு வந்து இதனைப் பார்வையிடுகின்றார். பின்னர் நெல்லையப்பர், காந்திமதியம்மன் சப்பரங்கள் அவ்விடத்திற்குக் கொண்டுவரப்படுகின்றன. இராமக்கோனுக்கும், மன்னனுக்கும் காட்சியளிப்பதாக இறைவன், இறைவி சப்பரங்கள் எதிராக நிறுத்தப்பட்டுத் தீபாராதனைகள் செய்யப்படுகின்றன. நிறைவாக இடையர்சாதி முதியவர் ஒருவர் பரிவட்ட மரியாதை பெறுகின்றார்.

இடையர்(கோனார்) சாதியைச் சார்ந்த உள்ளூர் இளைஞர்களே சடங்கில் இராமக்கோன் சப்பரத்தைச் சுமக்கின்றனர் (ஏனைய சப்பரங்களைக் கோயில் பணியாளர்களே சுமப்பர் என்பது குறிப்பிடத்தக்கது). அவர்களே சடங்கு நிகழ்த்த பால் கொண்டு வருகின்றனர், மூங்கில் தூறை வெட்டுவது போன்று பாவனை செய்கின்றனர். சடங்கில் இச்சாதி மக்களே பெரும்பான்மையாகப் பங்கேற்கின்றனர். 'இராமக்கோன் தமது முன்னோர்' என்ற மனநிலையே இதன் அடிப்படையாகும்.

இந்த நிகழ்த்துதலில் வேணுவனப் புராணத்தின் முற்பகுதியில்

குறிப்பிடப்பட்டுள்ள கதை நிகழ்வுகளான 'சூத முனிவரோ, கயிலை நாதரோ தலபுராணச் சிறப்பினைக் கூறுவது', 'சிவன் திருமாலுக்குக் கங்காளநாதர் வடிவினைக் காட்டுவது', 'சனகாதி முனிவர் புராணத்தைக் கேட்பது' போன்ற சடங்குக் கூறுகள் நிகழ்த்தப்படுவதில்லை. நிகழ்த்துதலில் இராமக்கோன், பாண்டியமன்னன் என்ற மானிடர்கள் மட்டும் பங்கு பெறுகின்றனர். மூங்கில் வெட்டு நிகழ்வும், குருதி வடியும் நிகழ்வும், இறைவன் இந்த மானிடர்களுக்குக் காட்சி வழங்குவதும் மட்டுமே நிகழ்த்திக்காட்டப்படுகின்றன. இதுவே இத்தலம் சார்ந்து இப்பகுதி மக்கள் அறிந்துள்ள புராணமாகும். உள்ளூர் மக்களின் நினைவில் பதிந்துள்ள ஒரு கதையாடலையே கோயில் நிகழ்த்திக்காட்டுகின்றது. இப்புராணத்தை நினைவுபடுத்தும் விதமாகக் கோயிலில் சில அடையாளங்கள் காணப்படுகின்றன.

1. இக்கதை தலபுராணநூலில் சேர்க்கப்பட்டுள்ளது.
2. ஆண்டுதோறும் சடங்காக நிகழ்த்தப்படுகின்றது.
3. தலையில் வெட்டப்பட்ட காயத்துடன் இருப்பது போல் மூலவர் வடிவமைக்கப்பட்டுள்ளமை.
4. நாள் அபிசேகத்தில் மூலவருக்கு(தலையில் காயம் இருப்பதால்) நல்லெண்ணெய் தவிர்க்கப்படுதல்.
5. இராமக்கோன் கல்திருமேனி கோயில் வளாகத்தினுள் மூங்கில் தூறுக்கு எதிரே நிறுவப்பட்டு நாள் பூசையின் போது தீபாராதனைகள் காட்டப்படுதல்.
6. ஆண்டுக்கு ஒரு முறை மூலவரின் காயத்திற்கு மருந்து பூசப்படும் நிகழ்வு ஆகியன அவ்வடையாளங்களாகும்.

வேளாண்சமூகத்தை அடுத்து கால்நடை வளர்ப்புச் சமூகத்தைத் தன்னுடன் இணைத்துக் கொள்வதற்குக் கோயில்கள் புராணக்கதை, சடங்கியல் அடையாளங்களைப் பயன்படுத்துகின்றன.

‘**நெல்லுக்கு வேலியிட்ட**’ கதை சடங்காக நிகழ்த்தப்படும் முறையாவது. இச்சடங்கு இறைவன், ‘நெல்லையப்பர்’ என்ற பெயரினைப் பெற்ற காரணத்தை விளங்குகின்றது. இக்கதை ஒவ்வொரு ஆண்டும் தை மாதம் பூசத் திருவிழாவில், நான்காம் நாள் காலையில் சடங்காக நிகழ்த்தப்படுகின்றது.

‘வேதபட்டரது திருமேனி சப்பரத்தில் வைத்து அம்மன் சந்நதி, சாமிசந்நதி ஆகிய பகுதிகளுக்கு எடுத்துவரப்படுகின்றது. அடியவர்கள் அவருக்கு அரிசி, நெல் ஆகியனவற்றைத் தானமாக வழங்குகின்றனர். (வேதபட்டர் தானம் பெற்று இறைவனுக்குத் திருவமுது படைத்ததைக் குறியீட்டு ரீதியில் உணர்த்துகின்றது). கோயிலின் உள்ளே நந்திக்கு அருகில் உயரமான நாற்காலியின் மேல் வைக்கப்பட்ட தட்டில் நெல் உலர வைக்கப்படுகின்றது. அந்த நெல்லினைச் சுற்றி நீர் தெளித்து நெல் தவிர பிற இடங்கள் ஈரமாக்கப்படுகின்றன (காண்க ஒளிப்படம் எண்.01). இவ்விடம் பந்தலிட்டு, வாழைமரம் நடப்பட்டு அலங்காரம் செய்யப்படுகின்றது. வெளியே சென்ற வேதபட்டர் ஈரஆடையுடன் நெல் உலர வைக்கப்பட்டிருக்கும் இடத்திற்கு வந்து இவ்விடத்தைப் பார்வையிட்டு வியக்க, இறைவன் அவருக்குக் காட்சி தருகின்றார்.

இச்சடங்கில் பௌராணிக மரபிற்குரிய கதாபாத்திரங்கள் இடம்பெறுவதில்லை. வேதபட்டர் திருமேனியை ‘ஓதுவா மூர்த்தி’ என்றே மக்கள் அழைக்கின்றனர். கோயிலில் திருமுறை பாடுபவர்கள் ‘ஓதுவா மூர்த்திகள்’ ஆவர். இச்சடங்கில் திருமுறைபாடும் ஓதுவார்களே முதல்மரியாதை பெறுகின்றனர். இதன் மூலம் திருமுறைபாடும் அடியவரைக் கோயில் தன்னுடன் இணைத்துக்கொள்கின்றது.

சங்கரன்கோயில், **சங்கரநாராயணர் கோயில்** தலவரலாறு

இறைவனின் தோற்றத்தை 'விண்ணிலிருந்து பூமிக்கு இறங்கி வந்தவர்' எனப் பௌராணிக மரபிலும், 'மணிக்கிரிவன்' என்னும் மனிதனால் பாம்புப் புற்றிலிருந்து கண்டு பிடிக்கப்பட்டார் என உள்ளூர் மரபிலும் எடுத்துரைக்கின்றது. உள்ளூர் மரபுக் கதையாவது:

*"மணிக்கிரிவன்' என்பவன் உக்கிரபாண்டிய மன்னனின் புன்னைவனக் காவலாளியாக இருந்தான். அதனால், அவன் 'காப்பறையன்', 'காவற்பறையன்' என அழைக்கப்பட்டான். ஒருநாள் புன்னைவனத்திலிருந்த புற்றினைத் தன் வாளால் வெட்டினான். புற்றிலிருந்த பாம்பின் வால் வெட்டுப்பட்டு அதிலிருந்து குருதி வடிந்து இறைவன் தோன்றியதைக் கண்டான். இச்செய்தியை மன்னனிடம் தெரிவிக்க, அரசன் புன்னை வனம் வந்து புற்றினையும், புற்றிடங் கொண்டாரையும் கண்டான். பின்னர் காடுகெடுத்து கோயில் கட்டி சங்கரன் கோவில் ஊரையும் உருவாக்கினான்"* (சங்கரன்கோயில் தலவரலாறு : பக் 10).

'இறைவன் புற்றிலிருந்து தோன்றுதல்' என்பது சைவப் புராண அடிக்கூறுகளில் ஒன்றாகும் என்கிறார் சுல்மன். 'திருவாரூர்ப்புராணம்' அத்தலத்து இறைவன் புற்றிலிருந்து தோன்றியதால் 'புற்றிடங்கொண்டார்' எனப் பெயரிடப்பட்டுள்ளதாகக் கூறுகின்றது. சோழஅரசனொருவன் வேட்டையின்போது அம்பு கொண்டு புற்றினைத்தாக்க அவ்விடத்தில் இறைவன் தோன்றினான் என்பது செய்யூர்ப் புராணம் ஆகும். "தமிழ்ச்சமூகத்தில் 'புற்று' நிலத்தோடும், வளமையோடும் தொடர்புபடுத்தப்படுகின்றது. இறைவன் புற்றினுள் இருப்பதைத் தாயின் கருப்பையில் இருப்பதோடு ஒப்பிடலாம்" என்கிறார் சுல்மன்(1980). பெருங்கோயில்கள் மக்களையும் பொருளாதார வளமையினையும் விரும்பும் நிறுவனங்களானதால் அவை வளமையான புற்றிலிருந்து இறைவன் தோன்றியதாகப் புராணத்தைப் படைக்கின்றன எனலாம்.

சங்கரநாராயணர் கோயிலின் தோற்றக்கதை கோயிலில் சடங்காகவும் நிகழ்த்தப்படுகிறது. சித்திரைத்திருவிழா தொடக்கநாளுக்கு முந்தையநாள் கோயில்யானை பெருங்கோட்டூருக்கு (உக்கிரபாண்டியனின் யானை கொம்பால் தரையைக்கீறிக் கீழே விழுந்த இடம்) அழைத்துச் செல்லப்படுகின்றது. பெருங்கோட்டூர் பகுதியிலிருந்து எடுக்கப்பட்ட பிடிமண் யானையின் மீது ஊர்வலமாக எடுத்துவரப்படுகின்றது. பெருங்கோயிலிலுள்ள காப்பறையன் சிலைக்கு மாலையிட்டு வழிபாடு செய்யப்பட்ட பின்னர் கோயிலில் திருவிழா தொடங்கப்படுகின்றது. இந்நிகழ்வில் காப்பறையனைக் குலதெய்வமாக வழிபடும் 'பறையர்' சாதியார் பெருமளவிற் பங்கேற்கின்றனர்.

தலபுராணத்தில் கூறப்பட்டுள்ளது போல் உமாதேவியார் சிவபெருமானிடம் விண்ணப்பம் செய்வது போன்றோ, முனிவர்களும் இறைவியும் தவம் செய்வது போன்றோ, இறைவன் விண்ணிலிருந்து பூமிக்கு வருவது போன்றோ சடங்குகள் நிகழ்த்தப்படுவதில்லை. மக்கள் மனத்தில் பதிந்துள்ள உள்ளூர் மரபுக் கதை ஒன்றே நிகழ்த்தப்படுகின்றது.

சங்கரநாராயணர் கோயிலில் இந்தக் கதையை நினைவுபடுத்தும் கூறுகள் காணப்படுகின்றன. அவையாவன:

அ. காவற்பறையன் கல்திருமேனி கோயிலில் நிறுவப்பட்டுள்ளது.

ஆ. இக்கதை தலபுராணத்தில் சேர்க்கப்பட்டுள்ளது.

இ. இக்கதை சித்திரைத் திருவிழாவில் சடங்காக நிகழ்த்தப்படுகின்றது.

ஈ. பெருங்கோயிலுக்கு தெற்கே மணிக்கிரீவனுக்கு தனிக்கோயில் ஒன்றுள்ளது. இது 'காப்பறையன் கோயில்' என அழைக்கப்படுகின்றது. ஒற்றையறையான இக்கோயிலில் உருவமற்ற கல்ஒன்று காப்பறையனாக வழிபடப்படுகின்றது.

உ. சித்திரைத் திருவிழாத் தொடக்க நாளிற்கு முன்தினம் காப்பறையனுக்குக்

கொடை கொடுக்கப்படுகின்றது. இவ்விழாவிற்குத் தேவைப்படும் பொருட்களில் அரிசி, துணி, எண்ணெய் போன்றவற்றைப் பெருங்கோயிலே வழங்குகின்றது.

ஊ. காப்பறையன் கோயிலில் அனுமதி பெற்றே பெருங்கோயிலில் சித்திரைத் திருவிழா தொடங்கப்படுகின்றது.

எ. காப்பறையனைக் குலதெய்வமாக வழிபடும் பறையர் சாதியினர் பெருங்கோயிலுக்குள் சென்று காப்பறையன் சிலைக்கு மாலையணிவிக்க பெருங்கோயில் நிர்வாகம் அனுமதி வழங்கியுள்ளது.

இச்சடங்கு, தலத்து இறைவனை உள்ளூர்மயப்படுத்துவதோடு, அந்நிலப்பகுதியில் பெரும் எண்ணிக்கையில் வாழும் பறையர் இன மக்களைக் கோயில் தன்னுடன் இணைத்துக்கொள்ள உதவும் காரணியாகவும் செயற்படுகிறது.

விண்ணுலகில் இறைவன், இறைவி ஆகிய இருவருக்கிடையில் ஏற்பட்ட ஊடலே அவர்களது மண்ணுலக வருகைக்குக் காரணம் எனப் புராணங்கள் பேசுகின்றன. தென்திருப்பேரை, 'மகரநெடுங்குழைக்காதர்' கோயில் புராணமாவது:

*"விண்ணுலக வைகுண்டத்தில் தாமரைக்கண்ணன் சிவந்த மேனியவளான திருமகளை நினையாது, கரியநிறத்தவளான பூமிதேவியிடம் அதிக காதல் கொண்டு வாழ்ந்துவந்தார். கோபம் கொண்ட திருமகள் துர்வாசமுனிவரை அடைந்து பூமிதேவியின் நிறத்தை தன் நிறம் போன்று செம்பொன் நிறமாக மாற்றவேண்டினாள். முனிவர் பூமிதேவியின் கருநிற உடல் செம்பொன் நிறமாக மாறச் சபித்தார். உடல் செம்பொன்நிறமாக மாறியது. பூமிமகள் மீண்டும் தந்நிறத்தைப் பெறுவதற்காக தவம் புரிய இத்தலத்திற்கு வந்தார்"* (மகரநெடுங்குழைக்காதர் கோயில் தலவரலாறு: 5-9).

கறுப்பு, சிவப்பு ஆகிய இரு நிறங்களுக்கிடையில் முரண்தோன்றியதாக இக்கதை பேசுகிறது. *"பக்தி இலக்கியங்களில் நாம் காணும் செய்தி கறுப்பு அழகுக்குரிய நிறம், அது ஒளிவீசும் என்பதாகும். திருமாலை, ஆண்டாள் 'கண்ணன் என்னும் கருந்தெய்வம் காட்சி பழகிக் கிடப்பேன்' என்கிறார். ஆழ்வார்கள் பலரும் திருமாலைக் 'கரியமாணிக்கம்' என்று பாடியுள்ளனர். இராமனது கரிய உடம்பிலிருந்து ஒளி கிளர்ந்தது என்ற செய்தியை 'வெய்யோன் ஒளி தன் மேனியின் விரிசோதியின் மறைய' என்று கம்பர் பாடுகிறார்"* எனக் கரியநிறத்தை வைணவம் போற்றுவதைத் தொ.பரமசிவன் (2001:112) குறிப்பிடுகிறார்.

வைணவம் கரிய நிறத்தைப் போற்றுகின்ற போதிலும் நிறம் பற்றிய முரண்பாடு இந்த வைணவக் கோயில் கதையில் முக்கியகூறாக அமைந்திருப்பதற்கான காரணம் யாது? வெப்பமண்டலமான தமிழ்நாட்டில் பிராமணர் முதலிய 'மேல்' சாதியாரே சிவந்த நிறத்தவர். பிற உடலுழைப்புச் சாதியார் கறுத்த நிறத்தவரே. ஆகவே பெருந்திரளான மக்களின் நிறமான கறுப்பு நிறமே அழகுக்குரியதாகப் போற்றப்பட்டிருக்கவேண்டும். கறுப்பிலிருந்து அழகுணர்ச்சி சிவப்பிற்கு மாறுவதை ஆராயும் தொ.பரமசிவன் தமிழ்நாட்டில் சிவப்பு நிறம் பிற்காலத்திலே அதிகாரத்தின் குறியீடாக்கப்பட்டது எனக் கூறுகின்றார். *'கி.பி 14ஆம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் ஐந்து நூற்றாண்டுக்கும் மேலாகத் தமிழ் நாட்டில் அரசியல் அதிகாரமும், அரசியல் சித்தாந்தங்களையும் நடைமுறைகளையும் உயர்த்திப்பிடிக்கின்ற ஆன்மீக அதிகாரமும் சிவந்த நிறமுடையவர்களின் கையிலேயே இருந்தது. எனவே இந்த நிறம் அதிகாரத்தின் நிறமாக, உயர்ந்த ஆன்மீகத்தின் நிறமாக, மேட்டிமையின் சின்னமாக, அழகு நிறைந்ததாகக் காட்டப்பட்டது'* (2001:112) என அவர் விளக்குகிறார். எனவே நிலமகள் கறுப்பு நிறத்திலிருந்து சிவப்பு நிறத்திற்கு மாறினாள் என்பது நிலத்தின் மீதானஉரிமை கறுப்புநிற

மனிதர்களிடமிருந்து சிவந்த நிறமுடைய பிராமணர்களுக்கு மாற்றப்பட்டது என்பதன் குறியீடாகும்.

நிலவுரிமை மாற்றம் குறித்து மே.து. ராசுகுமார் *'பல்லவர் காலத்தில் தொடங்கி தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்த நிலவுரிமை மாற்றம்- தமது உழைப்பினால் காடுகளாகக் கிடந்த நிலங்களைப் பண்படுத்திய அல்லது நேரடி உழைப்பில் உற்பத்தியை உருவாக்கிக் கொடுத்த பிரிவினரிடமிருந்து நிலங்கள் வலுவில் பறிக்கப்பட்டு, உற்பத்தியில் நேரிடையாக ஈடுபடாத வேளாளர், பிராமணர், கோயில்கள் போன்ற மறைமுக உடைமையாளர்களுக்குச் செய்யப்பட்ட நிலவுரிமை மாற்றம்* (2004:68)' என்று குறிப்பிடுகிறார். இச்செய்தியைக் கல்வெட்டுகளும் விவரிக்கின்றன. குடிமக்களிடமிருந்து கோயிலதிகாரத்திற்கு மாற்றப்பட்ட நிலங்களைத் 'தேவதானம்' எனக் கல்வெட்டுகள் பேசுகின்றன. தேவதான நிலங்கள் என்பவை மறைமுகமாகக் கோயில் பிராமணர்களின் ஆளுகைக்குட்பட்ட நிலங்களேயாகும்.

இக்கருத்துக்களை நோக்கும் போது இக்கதையாடலைச் சொத்துடைமை அதிகாரமாற்றத்தின் வெளிப்பாடாகக் கொள்ளலாம்.

### 2.1.4. **ஆகமவிதி விலக்கும் -உள்ளூர்மரபும்**

பெருங்கோயில்களில் ஆகமவிதிக்குட்பட்டே கட்டட அமைப்பு, தெய்வங்களின் திருமேனிகள், வாகனங்கள் ஆகியவை அமைக்கப்படுகின்றன. இது பொது வழக்கமாகும். இவற்றில் விதிவிலக்குகளும் ஆய்வுப்பரப்பில் காணப்படுகின்றன. இவ்விதிவிலக்குகளுக்கான காரணங்களை விளக்கும் கதைகள் மக்களிடம் வழக்கிலுள்ளன. இவை கோயில்களுக்கு உள்ளூர்த் தன்மையை வழங்குகின்றன.

### 2.1.4.1. **மூலத்திருமேனி**

சைவக்கோயில்களில் லிங்கத்திருமேனிகள் ஆகமவிதிப்படி அங்கக்குறைவின்றி நேராக அமைக்கப்படுவது பொது வழக்கமாகும். நெல்லை மாவட்டம் திருப்புடைமருதூர் 'நாறும்பூநாதர் கோயில்' மூலத்திருமேனி இதற்கு விதிவிலக்காகத் தென்திசை நோக்கிச் சற்றுச் சரிந்து காணப்படுகின்றது. இதற்கான காரணத்தை விளக்கும் கதையொன்று இப்பகுதி மக்களிடம் வழங்குகின்றது. இக்கதையாவது:

*"நாறும்பூநாதரை அடியவர் ஒருவர் மழைக்காலத்தில் வழிபட வந்தார். அப்போது ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. ஆற்றின் மறுகரையிலுள்ள இறைவனைத் தரிசிக்க இயலாமல் துன்பமடைந்தார். இறைவனை நோக்கி நாறும்பூநாதா! நாறும்பூநாதா! என மும்முறை அழைத்தார். அடியவரின் குரலினைக்கேட்ட இறைவன் அவருக்குத் தன்னுடைய திருமேனியைக் காட்டுவதற்காகச் சற்று சரிந்துநின்றார். இதன் காரணமாகவே இறைவன் இன்றும் சரிந்த நிலையில் உள்ளார்"* (பேட்டி:கணேசன், 20.05.05). இதனை ஒத்த கதைகள் பிற தலங்களிலும் சில வேறுபாடுகளுடன் வழக்கிலுள்ளதைக் காணமுடிகின்றது.

'தாடகை' என்ற பெண் மகப்பேறு வேண்டித் திருப்பனந்தாள் (மயிலாடுதுறைக்கு அருகிலுள்ள தலம்) இறைவனை நாள்தோறும் வழிபட்டாள். ஒருநாள் இறைவனுக்கு மாலைசாத்தும் போது அவளது மேலாடை நெகிழ்ந்தது. தனது இருமுழங்கைகளாலும் ஆடையைப் பற்றிக் கொண்டு மாலையைச் சாத்தமுடியாமல் வருந்தினாள். தாடகையின் வருத்தத்தைக் கண்ட இறைவன் தனது திருமுடியைத் தானே சாய்த்து மாலையைப் பெற்றுக்கொண்டார். அன்று முதல் சாய்வாக இருந்த இறைவனை குங்கிலியக்கலய நாயனார் சரிசெய்தார் என்பது 'திருப்பனந்தாள்' தலபுராணமாகும்.

இதைப் போன்றதொரு கதை மதுரைக்கு அருகிலுள்ள பாடல் பெற்ற தலமான திருப்பூவனத்திலும் வழக்கிலுள்ளது. இக்கதையில் மாலை சாத்த வந்தவள் 'பொன்னனையாள்' என்ற தாசியாவாள். உத்தம சோழபுரம் 'கரபுரநாதர் கோயில்' தலபுராணம், சிவசீலன் என்ற பாலகன், சிவலிங்க பூசை செய்ய முற்பட்ட போது இறைவனின் உருவம் எட்டாத நிலையில் இருந்ததால் வருத்தப்பட்டபோது, இறைவன் பாலகனுக்காகத் தனது முடியை வளைத்துக்கொடுத்தார் என்கிறது.

வழிபடும் எளியவரின் துன்பத்தைக் குறைக்க இறைவன் தனது திருமேனியை வளைத்ததாக இக்கதைகள் பேசுகின்றன. இவையே இறைவனை உள்ளூர் மயப்படுத்துகின்றன. எளிய-மனிதர்களே கோயிலின் இருப்பிற்கு முக்கிய பங்காற்றுகின்றனர். இவர்கள் ஆண்கள், பெண்கள், சிறுகுழந்தைகள், முதியோர், இளைஞர்கள், பல்வேறு சாதியினர் எனப் பன்முகத்தன்மையில் உள்ளனர். இவர்கள் அனைவரையும் கோயில் தன்னுடன் தக்கவைக்க முயல்கின்றது. குறிப்பாகத் திருப்பனந்தாள் கோயில் பெண்களையும், உத்தமசோழபுரம் சிறுவர்களையும், திருப்பூவணம் தேவரடியார்களையும் தம்முடன் இணைத்துக்கொள்ளவே இத்தகைய கதையாடல்களைப் புனைந்துள்ளன எனலாம். நாறும்பூநாதர் கோயில் கதையும் இக்கருத்தின் அடிப்படையில் உருவாக்கப்பட்டதாகும்.

### 2.1.4.2. **கொடிமரம் விலகல்**

கோயிலில் இறைவனுக்கு நேர் எதிராகக் கொடிமரம், நந்தி ஆகியன அமைக்கப்படுவது கோயிலின் நடைமுறையாகும். சில தலங்களில் விதிவிலக்குகளும் காணப்படுகின்றன. இந்த விலக்கிற்கான காரணமும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. நெல்லைமாவட்டம் திருக்குறுங்குடி 'அழகிய நம்பிராயர்' கோயில் புராணமாவது:

*"பாணர்' என்னும் தாழ்ந்த குலத்தைச் சார்ந்த நம்பாடுவான் திருக்குறுங்குடி அழகியநம்பி மீது தீராத காதல் கொண்டிருந்தான். அவன் தாழ்ந்த குலத்தவன் என்பதால் கோயிலுக்கு வெளியே நின்று கைசிகப்பண் இசைத்து நம்பியை வழிபட்டுவந்தான். அவனது இசைக்கு மயங்கிய இறைவன் நம்பாடுவான் தன்னை எளிதாகக் காண கோயில் கொடிமரத்தை அதன் இருப்பிடத்திலிருந்து சற்று விலக்கி வைத்தார். இதனால் இக்கோயில் கொடிமரம் இன்றும் விலகியுள்ளது"* (திருக்குறுங்குடி தலவரலாறு:1998:08). இது மக்கள் வழக்கிலுள்ள ஒரு கதையாகும். இதனைப் போன்றதொரு கதை 'நந்தனார் கதையின்' ஒரு பகுதியாக சேக்கிழாரால் காட்டப்பெறுகின்றது.

கோயில் புனிதம்(sacred), தீட்டு(profane) என்ற கருத்தியலை முன்வைக்கும் நிறுவனமாகும். இங்கு காலம், வெளி ஆகியவை மீது புனிதம், தீட்டுக் கோட்பாடுகள் கடைப்பிடிக்கப்படுகின்றன. மனிதர்களும் இக்கருத்தியலுக்கு உட்பட்டவர்களே. கோயிலின் கருவறை, மடைப்பள்ளி ஆகியவை புனிதமானவை. அங்கு அதற்குரியவர் (பிராமணர்) தவிர பிறர் அனுமதிக்கப்படுவதில்லை. கோயில் குறித்து அடியவர்கள் கொண்டுள்ள இக்கசப்பான எண்ணங்களைச் சரிசெய்ய அது முயலுகிறது. அத்தகைய முயற்சிகளில் ஒன்றே இது போன்ற புராணங்களைப் படைப்பதாகும். தாழ்த்தப்பட்ட அடியவர்களுக்கு இறைவன் தானே முன்வந்து காட்சியளிப்பார். அவர்கள் கோயிலுள் நுழையக் கூடாது என மறைமுகமாக இக்கதைகள் கூறுகின்றன. தடைசெய்யப்பட்டவர்கள் கோயிலுள் நுழைவதைத் தடுக்கும் மேல் சாதியாரின் காப்பு நடவடிக்கையாகவும் இக்கதை செயல்படுகின்றது.

இதுவரை, குறிப்பிட்ட தலத்திற்கு மட்டுமேயுரிய கதையாடல்களையும் அதன் சடங்கியல் நிகழ்த்துமுறைகளையும் அதன் பயன்பாட்டையும்

கண்டோம். இனி, பொதுக்கதையாடலில் காணப்படும் உள்ளூர்சார்ந்த நிகழ்த்துதல் முறையினைக் காண்போம்.

### 2.1.5. பொதுக்கதையாடலும் உள்ளூர்சார் நிகழ்த்துதலும்

கோயில் கதைகளைப் 'பொதுக்கதை', 'உள்ளூர் மரபுக்கதை' என இரண்டாக வகைப்படுத்தலாம். 'பொதுக்கதை' என்பன எல்லாத் தலத்திற்கும் பொருந்துமாறு உருவாக்கப்பட்டுள்ள புராணங்களாகும். ஒரு குறிப்பிட்ட தலத்திற்கு மட்டும் பொருந்துவதாக உருவாக்கப்பட்டுள்ள கதைகளை 'உள்ளூர் மரபுக் கதைகள்' எனலாம். இவ்விரு கதையாடல்களும் கோயில்களில் சடங்குகளாக நிகழ்த்தப்படுகின்றன. உள்ளூர்க் கதையாடலையும் அதன் நிகழ்த்து முறையையும் முன்னர் கண்டோம். பொதுக்கதைகள் உள்ளூர்த்தன்மையுடன் நிகழ்த்தப்படுவதற்கு திருநாவுக்கரசர் புராணத்தை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

#### 2.1.5.1. அப்பர் தெப்பம்

*"சிவபெருமான் அருள் செய்யாமையினால் திருநாவுக்கரசர் சமண சமயத்தைத் தழுவினார். சிவன் அவருக்குச் சூலைநோய் பற்றச்செய்தார். சமணரால் தீர்க்கயியலாத இச்சூலைநோயைத் திலகவதியார் தீர்த்தார். அதனால் நாவுக்கரசர் சைவத்திற்குத் திரும்பினார். கோபமடைந்த சமணர்கள் முதலாம் மகேந்திரவர்ம (கி.பி 610-630) மன்னனின் ஆதரவுடன் நாவுக்கரசரைக் கல்லினோடு சேர்த்துக்கட்டி கடலில் போட்டனர். நாவுக்கரசர் ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதி தெப்பம் போல் கடலில் மிதந்து கரையேறினார்"* (பெரியபுராணம் பக் 172-190). இக்கதை, அப்பர் தேவாரத்தில்

*"கல்லி னோடெனைப் பூட்டி அமண்கையர்*
*ஒல்லை நீர்புக நூக்க என் வாக்கினால்*

*நெல்லு நீள்வயல் நிலக் குடிஅரன்*

*நல்ல நாமம் நவிற்றியுய்ந் தேனன்றே"*

எனக் குறிப்பிடப்படுகின்றது.

இலக்கியப்பதிவு பெற்ற இக்கதை நெல்லையப்பர் கோயிலில் ஒவ்வொரு ஆண்டும் மாசி மாதம் மகம் நட்சத்திரத்தன்று திருவிழாவாக நிகழ்த்தப்படுகின்றது. *இத்திருவிழாவிற்கான காரணம் 'நாவரசர் நெல்லையை அடைந்து பதிகம் பாடியதை நினைவூட்டவே என்பர். ஆனால் அப்பர் நெல்லையைப் பாடிய பதிகம் இன்று நமக்குக் கிடைக்கவில்லை'* (உமாமகேசுவரி: 1990:63). இத்திருவிழா 'அப்பர்தெப்பம்', 'அப்பர் பொற்றாமரைத்தெப்பம்', 'உள்தெப்பம்' என அழைக்கப்படுகின்றது.

திருவிழாதினத்தன்று அப்பர் திருமேனியின் முதுகுப்பகுதியில் செம்புத் தகட்டினாலான சிறு உரல் ஒன்று வைத்துக் கட்டி அலங்காரம் செய்யப்படுகின்றது. இது கோயிலுக்குள் பிள்ளையார் இருக்கும் இடத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டு அங்கு அப்பர் தேவாரம் ஓதப்படுகின்றது. பின்னர் இத்திருமேனி பொற்றாமரைக்குளத்தில் (உள்தெப்பம்) மின்விளக்கால் அலங்கரிக்கப்பட்ட தெப்பத்தில் வைத்து ஒன்பது முறை வலம் வருகின்றது. இந்த நிகழ்வினைக் கைலாய மலையிலிருந்து பார்த்துக்கொண்டிருப்பது போல் தெப்பத்திற்கு எதிரே உள்ள மண்டபத்தில் இறைவனும் இறைவியும் எழுந்தருளுகின்றனர்.

சமணத்திற்கும் சைவத்திற்கும் ஏற்பட்ட முரண்பாடுகளில் சிவனின் வலிமையைக் காட்டவும் மதமாற்றத்தைத் தடுக்கவும் இக்கதை சைவமரபினரால் புனையப்பட்டதாகும். நெல்லையப்பர் கோயிலில் இப்பொதுக்கதையாடல் உள்ளூர்த் தன்மையுடன் நிகழ்த்தப்படுகின்றது. இனி, மற்றொரு கதையாடலைக் காண்போம்.

### 2.1.5.2. வேடன் முக்தி பெறுதல்

வேடன் ஒருவன் வேட்டையாடச் சென்ற போது மிருகம் (புலி) ஒன்று வந்தது. மிருகத்திடமிருந்து தப்பிக்க மரத்தில் ஏறினான். மிருகம் மரத்தின் அடியில் நின்று கொண்டிருந்தது. இரவு முழுவதும் தூக்கத்திலிருந்து விடுபடத் தான் ஏறியிருந்த வில்வமரத்திலிருந்த இலைகளைப் பறித்துக் கீழேபோட்டான். அவ்விடத்தில் 'லிங்கம்' ஒன்று இருந்தது. அன்று மகாசிவராத்திரியாக இருந்ததால் சிவபெருமான் மனமகிழ்ந்து வேடனுக்குக் காட்சிகொடுத்து முக்தியளித்தார். இது ஒரு பொதுப்புராணமாகும்.

சிவத்தலங்கள் பல இப்புராணத்தை நிகழ்த்திக்காட்டுகின்றன. ஆய்வுக்களத்தில் நெல்லைமாவட்டம் வடக்கு விஜயநாராயணம், மனோன்மணீஸ்வரர் கோயிலில் இப்புராணம் பின்வருமாறு மாசி மாதம் சிவராத்திரியன்று இரவு பின்வருமாறு நிகழ்த்தப்படுகிறது.

இத்தலத்திலுள்ள வேடன் செப்புத்திருமேனியின் கையில் வில், அம்புகள் இருப்பது போன்று அலங்காரம் செய்யப்பட்டுச் சப்பரம் ஒன்றில் வைத்து ஊரின் நடுப்பகுதிக்கு (காட்சி கொடுக்கும் இடத்திற்கு) எடுத்து வரப்படுகின்றது. மனோன்மணீஸ்வரர், மணீஸ்வரி திருமேனிகளும் மற்றொரு சப்பரத்தில் எடுத்துவரப்படுகிறன. இத்திருமேனிகள் திரையிட்டு மறைக்கப்படுகின்றன. இருசப்பரங்களும் எதிரெதிரே நிறுத்தப்படுகின்றன. எதிரே நிற்கும் வேடனுக்குக் காட்சிகொடுப்பது போன்று தெய்வத்திரை விலக்கப்படுகின்றது நிறைவாகக் கட்டளைதாரருக்கு மரியாதை செய்யப்படுகின்றது.

இதனை 'மோட்சக்காட்சி' என மக்கள் அழைக்கின்றனர். இப்புராணக்கதை இங்கே நிகழ்த்தப்படுவதன் மூலம் இத்தலத்துச்

சிவபெருமானே இக்கதையாடலுக்குரியவன் என வாதிடப்படுகின்றது. இத்தலத்து இறைவனும் திருவிளையாடல் ஒன்றினைப் புரிந்து எளிய மனிதனுக்கு மோட்சம் அளித்தவன் எனத் தலத்திற்குப் பெருமை ஏற்படுத்தப்படுகின்றது.

சிவனைப் போன்று திருமாலும் எளிய அடியவருக்கு முக்தியளிக்கக் கூடியவர் என வைணவக்கோயில் புராணங்கள் கூறுகின்றன. திருமங்கை மன்னனுக்குத் திருமால் முக்தியளித்தார் என்பது வைணவப் பொதுமரபுக் கதையாகும். இக்கதையாவது:

2.1.5.3. **மன்னன் மடிபிடி**

கள்ளர் குலத்தில் பிறந்த திருமங்கைமன்னன் காட்டின்வழியே திருமணக்கோலத்தில் வந்த மணமக்களிடம் நகைகளைக் கொள்ளையிட்டு அதனைத் தூக்கமுடியாது இருந்தார். மந்திரம் செய்திருப்பதாக நினைத்து மணமகனுடன் வாக்குவாதத்தில் ஈடுபட்டார். வந்திருப்பவர் மன்னன் காதில் 'நமோ நாராயணாய' என்ற எட்டெழுத்து மந்திரத்தை ஓதினார். மணமகன் வடிவில் வந்திருப்பவர் திருமாலே என்பதை உணர்ந்து மன்னர் முக்தி பெற்றார் என்பது வைணவக்கதையாகும். *சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் உள்ள 'திருமங்கை மன்னன் மடிபிடி' என்ற பெயருள்ள ஓர் ஏடு இக்கதையையே பேசுகின்றது* (1989:133) என்கிறார் தொ.பரமசிவன்.

இக்கதை 'வேடுபறி உற்சவம்' என்னும் பெயரில் சடங்காகத் தமிழகத்தின் பல்வேறு வைணவத் தலங்களில் நிகழ்த்தப்படுகின்றது. மதுரை அழகர் கோயிலில் இத்திருவிழா கொண்டாடப்பெறும் விதத்தை தொ.பரமசிவன் (1989:133) விரிவாக விவரித்துள்ளார். இத்திருவிழாவினைக் குருபரம்பரை நூலின் கதையோடு ஒப்பிட்டு இரண்டிற்குமான வேறுபாட்டை விளக்குகின்றார். இக்கோயிலில் முன்பொரு காலத்தில் நகைகள்

கொள்ளையிடப்பட்டதாகவும் அதனை ஜமீன் கண்டுபிடித்து கொள்ளையிட்ட வேடர்களை வெட்டியதும் உண்மை எனச் செப்பேடு ஒன்றின் மூலம் நிறுவுகிறார். கள்ளர்களின் தொல்லையை என்றென்றைக்கும் தடுக்க வேண்டி இத்திருவிழா நடத்தப்படுகின்றது என்பது அவரது முடிவாகும்.

இவ்வாய்வுப்பகுதியான ஆழ்வார்திருநகரி, ஆதிநாதர் கோயிலில் இப்புராணம் உள்ளூர்த் தன்மையுடன் நிகழ்த்தப்படுகின்றது. கோயில் தலபுராணம் இதற்கு 'மன்னன்மடிபிடி' எனப் பெயரிடுகின்றது. இது மக்களால் 'கள்ளர் திருவிழா' என அழைக்கப்படுகின்றது. தேவர் சாதி இளைஞர்களால் தூக்கிவரப்படும் திருமங்கையாழ்வார் சப்பரம் இரதவீதியின் சந்திப்பில் நிறுத்தப்படுகின்றது. இச்சப்பரத்துடன் கள்ளர் வேடம் தரித்த ஆண்கள் கையில் கம்பு, வேல்கம்பு ஆகியவற்றுடன் வருகின்றனர். இறைவனும் இறைவியும் மணக்கோலத்தில் நகைகள் அணிந்து இரதவீதிக்கு வருகின்றனர். இதனைத் திருமங்கை மன்னன் மூன்றுமுறை வலம் சுற்றுகின்றார். இறைவன் தப்பித்து ஓடுவது போல் முன்னால் செல்கிறார். திருமங்கை மன்னனது சப்பரத்தைத் தூக்கி வருபவர்களில் சிலர் 'விடாதே பிடி', 'விடாதே பிடி' எனச் சத்தம் எழுப்பியவாறு இறைவனின் சப்பரத்தின் பின்னால் ஓடுகின்றனர். இந்நிகழ்வு மூன்று சந்திப்புகளில் நடைபெறுகின்றது. கோயில் வடபுறத்துச் சந்திப்பில் இருசப்பரங்களும் எதிராக நிறுத்தப்படுகின்றன.

பெருமாள் சப்பரத்தில் இருக்கும் அர்ச்சகர் கோயிலின் நகைப்பட்டியல் கொண்ட ஓலை ஏடு ஒன்றினை வாசிக்கின்றார். அதனை இறைவன் அணிந்திருக்கும் நகைகளோடு ஒருவர் ஒப்பிட்டுப்பார்க்கின்றார். அர்ச்சகர் ஓலையைக் கிழித்துப் போடுவதுபோல் பாவனை செய்கின்றார். அப்போது அடியவர்கள் 'கணக்குச் சரியில்லை', 'கணக்குச் சரியில்லை' எனத் தங்களுக்குள் பேசிக் கொள்கின்றனர். இரண்டாவது ஓலை ஒன்றினை

எடுத்து முன்புபோல் வாசித்து அதனையும் கிழித்துப் போடுவதுபோல் பாவனை செய்கின்றார். இப்போதும் அடியவர்கள் 'கணக்குச் சரியில்லை' எனப்பேசுகின்றனர். மூன்றாவது ஓலை ஒன்றினை எடுத்து அதனை வாசிக்கின்றார். இப்போது நகைப்பட்டியலின் வாசிப்பு நீண்டு செல்கின்றது. அடியவர்கள் 'கணக்குச் சரியாகிவிட்டது' எனத் தங்களுக்குள் பேசுகின்றனர். அதாவது திருடப்பட்ட நகைகள் திரும்பப்பெறப்பட்டு விட்டன. நகைவாசிப்பு நிறைவு பெற்றவுடன் திருமங்கை மன்னனுக்கு இறைவன் காட்சி கொடுக்கின்றார். தேவர்சாதி முதியவர் ஒருவருக்குப் பரிவட்டம் கட்டி மரியாதை செய்யப்படுகின்றது. இத்திருவிழாவில் இக்கோயிலைச் சுற்றியுள்ள கிராமங்களில் வாழும் தேவர்இனமக்கள் பெருமளவில் பங்கேற்கின்றனர்.

திருமங்கைமன்னன் திருமணக்கோலத்தில் வந்த இறைவனின் நகைகளைக் கொள்ளையிட முற்பட்டபோது இறைவன் அவருக்குக் காட்சி கொடுத்தார் என்பது வைணவப் பொதுக்கதையாகும். இது ஆதிநாதர் கோயிலில் பனைஓலையில் எழுதப்பட்டுள்ள கோயில் நகைப்பட்டியலை வாசித்தல் என்னும் சடங்கோடு உள்ளூர்த்தன்மை பெறுகின்றது. கோயிலைச் சுற்றியுள்ள கிராமங்களில் வாழ்கின்ற தேவர்இன மக்களைத் தன்னுடன் இணைத்துக்கொள்ள ஆதிநாதர் கோயில் இக்கதையாடலையும் சடங்கினையும் பயன்படுத்துகின்றது.

பெருங்கோயில் சடங்குகளில் மக்கள் பக்தி உணர்வோடும் உறவினர் என்ற உணர்வோடும் பங்கேற்கின்றனர். நெல்லையப்பர் கோயில் 'மூங்கில் சடங்கில்' (இராமக்கோன் கோனார் சாதியைச் சார்ந்தவர்) கோனார் சாதியார் பங்கேற்பதும், திருமங்கைமன்னன் கள்ளர் குலத்தைச் சார்ந்தவர் என்பதால் தேவர் இனத்தவர் 'மன்னன்மடிபிடி' திருவிழாவில் பெருமளவில் பங்கேற்பதும் இந்த உணர்வினாலே ஆகும். சாதியத் திரளைத் தம்முடன் இணைத்துக்கொள்ளவே இப்பொதுக் கதையாடல்களை உள்ளூர்த்

தன்மையுடன் கோயில்கள் நிகழ்த்துகின்றன. "*தெய்வானை பரதவர் குலத்தில் பிறந்தவள் என்பதால் திருச்செந்தூர் வட்டார பரதவர்கள் செந்தில் முருகனை மச்சான் (மைத்துனன்) என உறவு கொண்டு திருவிழாவில் பங்கெடுக்கின்றனர்*' என்கிறார் ந.கல்யாண சுந்தரம் (1998:21).

### 2.1.6. புராணம் - நாடகம்

பெருங்கோயில்களில் தலபுராணக்கதைகள் நாடகமாக நடித்துக் காட்டப்படுகின்றன. கோயில்களில் நிகழ்த்தப்படும் இந்த நாடகங்களைச் 'சடங்கு நாடகம்' (ritual drama) என நாடகவியலர் அழைக்கின்றனர். இந்நாடக நிகழ்வில் கோயில் வளாகம் அரங்கமாகவும், அடியவர்கள் பார்வையாளர்களாவும் திகழ்கின்றனர். கோயில்களில் புராணங்களை நாடகமாக்குவதற்குத் தனிமண்டபங்கள் கட்டப்பட்டுள்ளன. புராணச் செய்திகள் சடங்குகளில் ஒப்பனையற்று நிகழ்த்தப்படுகின்றன.

'அந்நாளில் பார்ப்பனர்கள் திருக்கோயில் மண்டபங்களில் அமர்ந்து வடமொழியிலுள்ள மகாபாரதம், பதினெண்புராணங்கள் முதலானவற்றைப் படித்துப் பொது மக்கள் உணர்ந்து கொள்ளுமாறு பொருள் விளக்கம் தந்தனர். இத்தகைய புராணச் சொற்பொழிவு 'புராண வக்காணித்தல்' எனவும் புராண வாசித்தலுக்காகப் பிராமணர்களுக்குத் தானமாக வழங்கப்பட்ட நிலங்கள் 'புராணவிருத்தி', 'புராணமானியம்' எனவும் அழைக்கப்பட்டன. தமிழகத்தில் வடமொழிப்புராணச் சொற்பொழிவுகள் போன்று தமிழ்ப்புராணச் சொற்பொழிவுகளுக்கும் நிலக்கொடைகள் வழங்கப்பட்டன. திருவாரூரிலும், திருப்பூவணத்திலும் 'புராண மண்டபம்' என்ற பெயரிலே மண்டபம் அமைக்கப்பட்டுள்ளது. இரண்டாம் இராசாதிராசன் காலத்தில் அவனது ஒன்பதாம் ஆட்சியாண்டில் (கி.பி 1172) திருவொற்றியூரில் இறைவனான படம்பக்கநாயகதேவர் திருமகிழின்கீழ்த் திருவோலக்கம்

செய்தருளினார். அப்போது ஆளுடைய நம்பிகள் புராணம் (பெரிய புராணத்துள் சுந்தரமூர்த்தி நாயனார் சரிதம் கூறும் பகுதி) விரிவுரை செய்யப்பட்டது' எனத் தமிழ்ப்புராணச் சொற்பொழிவு வரலாற்றினை மு.அருணாசலம் (தமிழ் இலக்கிய வரலாறு: 16ஆம் நூற்றாண்டு) பதிவு செய்கின்றார். இனி, ஆய்வுக்களத்தில் புராணம் நாடகமாக்கப்படும் விதத்தைப் பார்ப்போம்.

திருக்குறுங்குடி அழகிய நம்பிராயர் கோயிலில் 'கைசிகப்புராணம்' நாடகமாக்கப்படுகின்றது. இதற்காக 'கைசிகமண்டபம்' என்னும் மண்டபம் அமைக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு ஆண்டும் கார்த்திகை மாதம், வளர்பிறை சுக்ல பட்ச ஏகாதசி நாளன்று கைசிகப்புராணம் நாடகமாக நிகழ்த்தப்படுகின்றது. இப்புராணக் கதையாவது:

'நம்பாடுவான்' என்னும் பக்தன் கார்த்திகை மாதம் சுக்லபட்ச (வளர்பிறை) ஏகாதசியன்று அழகிய நம்பியை வழிபட வீணையுடன் காடுவழியாக வந்தான். அவனை ராட்சசன் ஒருவன் பிடித்துத் தின்று தன் பசியைப் போக்க விரும்பினான். நம்பியை வழிபட்டுத் திரும்பியவுடன் தன்னைப் புசிக்கவேண்டினான். இறைவனைச் சேவித்துவிட்டு தன்னை ராட்சசனிடம் ஒப்படைக்கவரும் வழியில் இறைவன் காட்டில் தோன்றி நம்பாடுவானை வேறுவழியில் போகச் சொன்னான். நம்பாடுவான் சத்தியம் தவறுவது வைணவ அடியாருக்கு அழகில்லை எனக்கூறி ராட்சசனிடம் சென்று தன்னைத் தின்று பசியைப் போக்க வேண்டினான். அதற்கு ராட்சசன் மறுத்து, ஏகாதசி விரதத்தில் கைசிகப்பண் பாடிப் பெற்ற பலனைக்கேட்டான். நம்பாடுவான் தர மறுத்தான். ராட்சசன் தன் முற்பிறப்புக் கதையினைக்கூறி கைசிகப்பண்ணின் கால்பாகத்துப் பலனைத்தந்து தன்னை விடுவிக்கவேண்டினான். நம்பாடுவான் ஏகாதசி விரதத்தின் கால்பாகப்

பலனைக் கொடுத்து ராட்சசனை வீடுபேறு பெறச்செய்தான்' (திருக்குறுங்குடி தலவரலாறு: பக் 8-13).

திருவரங்கம், ஆழ்வார்திருநகரி ஆகிய வைணவத் தலங்களில் இப்புராணம் கார்த்திகைமாதம் சுக்லபட்சஏகாதசி அன்றுகாலை வாய்மொழியாக வாசிக்கப்படுகின்றது. திருவைகுண்டம் 'கள்ளப்பிரான்' கோயிலில் துவாதசி அன்று அதிகாலை நான்கு மணிக்கு உற்சவருக்குத் திருமஞ்சனம் முடிந்தவுடன், அவர் நாச்சியார்களோடும் ஆழ்வார் ஆசாரியர்களோடும் சயனக்குறட்டில் எழுந்தருளுவார். அப்போது 'மதுரகவிதாசர்' கைசிகப்புராணத்தை வாசிப்பார். புராணவாசிப்பு முடிந்தவுடன் மதுரகவிதாசருக்கு மரியாதை செய்யப்படுகின்றது. கோயில் பணியாளர்கள் அவரை மேளதாளத்துடன் திருமாளிகை(வீடு) சேர்க்கின்றனர். ஆய்வுக்களப்பகுதியான திருக்குறுங்குடி, அழகியநம்பிராயர் கோயிலில் மட்டும் இது நாடகமாக்கப்படுகின்றது.

இந்நாடகத்தில் 'பிரம்மராட்சசன், நம்பாடுவான், நம்பிக்கிழவன் என்ற மூன்று கதாபாத்திரங்கள் ஒப்பனை செய்கிறார்கள். கைசிக மண்டபத்தில் எழுந்தருளியுள்ள அழகிய நம்பி முன்பு நம்பாடுவானும் ராட்சசனும் தங்களது வாதங்களை முன்வைப்பது போன்று நடித்துக்காட்டுகின்றனர். (காண்க ஒளிப்படம் எண்.15). முடிவில் ராட்சசன் முக்தி பெறுவது போன்று நடிக்கப்படுகின்றது. நாடக நிகழ்வின் போது இடையிடையே தேவதாசிகளைக் கொண்டு இறைவனுக்கு வழிபாடுகள் செய்யப்படுகின்றன. இப்புராணத்தை நினைவூட்டும் பல கூறுகள் இக்கோயிலில் காணப்படுகின்றன.

அ. புராணத்தை நாடகமாக்குவதற்குத் தனியானதொரு மண்டபம் அமைக்கப்பட்டுள்ளது.

ஆ. இக்கதை தலபுராண நூலில் ஒரு பகுதியாகச் சேர்க்கப்பட்டுள்ளது.

இ. பல ஆண்டுகளாக நின்று போன இந்நாடகம், தஞ்சைப் பல்கலைக்கழக நாடகத்துறைப்(முன்னாள்) பேராசிரியர் சே.ராமானுசம் அவர்களால் மீண்டும் தொடங்கப்பெற்று கடந்த ஏழு ஆண்டுகளாக தொடர்ந்து நிகழ்த்தப்படுகின்றது. இக்கூறுகள் இத்தலத்திற்கும் இப்புராணத்திற்கும் இடையிலான தொடர்பைப் புலப்படுத்துகின்றன.

*"இந்நாடக நிகழ்வின் போது பாத்திரப்பிரவேசத்தில் சிறிய அளவு அசைவுகளைத் தவிர நாடகத்தோடு தொடர்புள்ள ஒருஅசைவும், அடவும் இங்கு காணப்படவில்லை. எடுத்துச் சொல்பவருக்குப் பிரதியோடு எந்த பரிச்சயமும் காணப்படவில்லை. சிலசமயம் பிரதியை என்னவென்று புரியவே தடுமாறுகிறார். இந்த நிலையிலும் பார்வையாளர்கள் நிகழ்வு முடியும் வரை தங்களுக்குள் குழு அமைத்து வம்பளந்து கொண்டிருக்கிறார்கள்'* என இந்நாடகத்தை ஜி.ஆர். வெல்பர்ன் என்னும் அமெரிக்கர் 1969 இல் விமர்சனம் செய்ததை ராமானுஜம் (2002:45) குறிப்பிடுகின்றார். *"கோயில் நாடகங்களின் தனிச்சிறப்பு அது சிந்தனையையும், களிப்பையும் தருவதாகும். இதனாலே இன்றும் நாடகம் நிலைத்து நிற்கின்றது'* என்கிறார் ராமானுஜம் (2002:45).

பெருங்கோயிலில் புராணம் ஒன்று நாடகமாக நிகழ்த்தப்படுவதற்குப் பலவேறு காரணங்கள் இருக்கக்கூடும். சாதி வேறுபாடின்றி தாழ்த்தப்பட்ட எளிய அடியவருக்கும் இறைவன் முக்தியளிக்கக்கூடியவன், இறைவன் மட்டுமல்லாது தாழ்த்தப்பட்ட இறை அடியார்களும் முக்தியளிக்கும் தன்மை பெற்றவர்கள் அதற்கு உண்மையான இறைவழிபாடும், சத்தியம் தவறாமையும் இருந்தால் போதும் என இப்புராணம் எடுத்துரைக்கின்றது. சமூகத்தில் சாதி அடிப்படையிலான வேறுபாடுகள் இருக்கின்ற வரையிலும், பெருங்கோயில்களுக்கு அடித்தட்டு மக்களைத் தன்னோடு இணைத்துக்கொள்ளவேண்டிய தேவை நிலைத்து நிற்கின்றவரையிலும்

இக்கதையினை வாய்மொழியாகவோ, நாடகமாகவோ நிகழ்த்திக்காட்டவே செய்வர்.

தலபுராணங்கள் என்ற இலக்கியவகைமை கி.பி பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோற்றம் பெற்றாலும் கடந்த ஒரு நூற்றாண்டுக் காலமாகவே அவை சிறிய அளவிலோ பெரிய அளவிலோ அச்சிடப்பட்டு வருகின்றன. அவ்வாறான அச்சிடலின் போது அவற்றில் உள்ளூர் மரபுக்கதைகளும் சேர்க்கப்பட்டன. இவ்வாறான கதைகளைக் கோயில்கள் நிகழ்த்தியும் காட்டுகின்றன. பெருங்கோயில் அமைந்துள்ள இடத்தின் மக்கள் தொகையினை நோக்குகையில் கோயிலுக்கு வழிபட வரும் அடியவர்களின் எண்ணிக்கை மிகக் குறைந்த அளவே உள்ளது. ஆனால் உள்ளூர்க் கதைகளை நிகழ்த்திகாட்டும் சடங்குகளில் மக்களின் பங்களிப்பு சற்று அதிகமாகக் காணப்படுகின்றது. இவையே கோயில் என்ற நிறுவனம் நிலைத்து வாழ வழிவகுக்கின்றது.

## பகுதி இரண்டு

## பாவம்போக்கும் கதைகளும் உள்ளூர்மரபுகளும்

### 2.2.0. முன்னுரை

பெருங்கோயில் கதையாடல்களில் பாவ, சாப விமோசன நிகழ்வுகள் இடம்பெற்றுள்ளன. பல உயிர்கள் பெற்ற பாவ விமோசனங்களைத் தலபுராணங்கள் எடுத்தியம்புகின்றன. அவை அரசர், பிராமணர், எளிய-மனிதர், விலங்கு, எளிய உயிர் என அமைகின்றன. பாவவிமோசன நிகழ்வு தலபுராணங்களின் இரண்டாம் பகுதியாக அமைகின்றது. 'பாவம்' என்பது ஒருவர் அறிந்தோ அறியாமலோ செய்த தவறுகளாகும். இறைவனின் தோற்றக் கதையினை எடுத்துரைக்காத புராணங்கள் கூட அத்தலத்தில் முக்தி பெற்றவர்களைப் பேசுகின்றன. இத்தலம் அனைத்து வகையான பாவங்களையும் போக்கக் கூடியது எனத் தொடங்கி சமூகத்தில் மிகப் பெரியதாகக் கருதப்படும் பாவங்களைக் குறிப்பிட்டு, அப்பாவத்திலிருந்து விடுதலை பெறும் வழிகளையும் கூறுகின்றன. பெருங்கோயில்கள் 'பாவவிமோசனம்', 'முக்திபெறுதல்' ஆகியனவற்றை முதன்மைப்படுத்துவது ஏன்? என்பது இங்கு ஆய்வுப் பொருளாகின்றது.

பாவவிமோசனம் பெற்ற உயிர்களின் அடிப்படையில் தலங்களை

1. விலங்குகளுக்கு முக்தியளித்தவை
2. பிராமணர்களுக்கு முக்தியளித்தவை
3. அரசர்களுக்கு முக்தியளித்தவை
4. முனிவர்களுக்கு முக்தியளித்தவை
5. தேவலோகத்தவர்களுக்கு முக்தியளித்தவை
6. எளிய-மனிதர்களுக்கு முக்தியளித்தவை
7. பேய், பிசாசுகளுக்கு முக்தியளித்தவை என வகைப்படுத்தலாம்.

### 2.2.1. விலங்குகளுக்கு முக்தியளித்தவை

ஐந்தறிவு கொண்ட விலங்குகள் அந்தத் தலத்தில் இறந்ததால் முக்தி பெற்றதாகத் தலபுராணங்கள் கூறுகின்றன. எடுத்துக்காட்டாக, ஆழ்வார்திருநகரி ஆதிநாதர் கோயில் தலபுராணக் கதையை நோக்கலாம்.

*"இத்தலத்தில் மதயானையும், வேடனும் சண்டையிட்டனர். ஆதிசேத்திரத்தில் இருவரும் மாண்டதால் விஷ்ணுதூதர்கள் இருவரையும் அழகிய விமானத்திலேற்றி விஷ்ணு லோகத்திற்கு அழைத்துச் சென்றனர்"* (ஆதிநாதர்தலவரலாறு:9-10). இங்கு தலத்தின் புனிதத்தன்மை முதன்மைப் படுத்தப்படுகின்றது.

### 2.2.2. பிராமணர்களுக்கு முக்தியளித்தவை

இதே தலபுராணத்தின் மற்றொரு கதை பிராமணர் ஒருவருக்கு முக்தியளித்ததைப் பேசுகின்றது. அதனைத் **தாந்தன் வரலாறு** என அழைக்கின்றது.

*"வேதத்தை ஒழுங்காகக் கற்காததினால் சாபம்பெற்ற தாந்தன் என்ற பிராமணன் ஆதிசேத்திரத்தில் (ஆழ்வார்திருநகரி) சூத்திரனாகப் பிறந்து, கோயிற் பணி செய்து வாழ்ந்தான். அவனை இந்திரனும், இந்திராதிகளும் ஏளனம் செய்தனர். கோபம் கொண்ட தாந்தன் அவர்களைக் குருடாகும்படி சபித்தான். விஷ்ணுவின் கட்டளைப்படி தாந்தனிடம் மன்னிப்பு வேண்டி அவர்கள் கண்ணொளி பெற்றனர். தாந்தனுக்கு ஆதிநாதர் சாபவிமோசனம் அளித்து விஷ்ணுலோகத்திற்கு அழைத்துச் சென்றார்'* (ஆதிநாதர் கோயில் தலவரவாறு, பக் 10-12).

வேதம் பிராமணர்களுக்கு அதிகாரத்தை வழங்கும் ஒரு கருவியாகும். பிராமணர்கள் வேதங்களைக் கசடறக் கற்க வேண்டும், சூத்திரர் பிறப்பு

ஒரு சாபப்பிறப்பு, கோயிலில் செய்யும் உடலுழைப்பு முக்தியளிக்கக் கூடியது, விஷ்ணு அடியவர்களுக்கிடையில் சாதி வேறுபாடு கடைபிடித்தல் ஒரு பாவச்செயல் என்பதை இக்கதை வெளிப்படையாகக் கூறுகின்றது. இது பிராமணச் சார்புக் கதையாடலாகும்.

### 2.2.3. முனிவர்களுக்கு முக்தியளித்தவை

சில தலங்கள் முனிவர்களுக்கும் முக்தியளித்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. ஆதிநாதர் கோயில் தலபுராணத்தில் இடம்பெறும் மற்றுமொரு கதையாவது:

*"கிராதன்' என்ற மகாபாவியான சங்கமுனி, விந்திய மலைவாசிகளைத் துன்புறுத்தி வந்தான். அவன் விஷ்ணு பக்தனான தாந்தன் படுத்துறங்கிய குருகாசேத்திரத்து ஆலமரத்தடியில் ஓய்வெடுத்தான். அதன் பலனாய் பிராமணக்குலத்தில் பிறந்து இந்திர பதவியடையத் தவமிருந்தான். இதனால் நாரதர் கோபம்கொண்டு அவன் சங்காகப் பிறக்க சாபமிட்டார். கிராதன் வங்கக்கடலிலே சங்காகப் பிறந்து குருகாசேத்திரமடைந்து தாமிரபரணியிலே நீராடியதால் முக்தி பெற்றான்"* (ஆதிநாதர் தலவரலாறு பக் 12-18).

பிராமணப் பிறப்பை உயர்ந்ததாகக் காட்ட இக்கதை புனையப்பட்டுள்ளது எனலாம். தலபுராணம் மூர்த்தி, தலம், தீர்த்தம், மரம் ஆகிய நான்கினை உயர்ந்ததாகப் பேசுகின்றது. அவற்றில் தீர்த்தத்தின் (தாமிரபரணி) பெருமையினை உறுதிப்படுத்துவதாக இக்கதை புனையப்பட்டுள்ளது எனலாம்.

### 2.2.4. அரசர்களுக்கு முக்தியளித்தவை

அரசர்களுக்கும் பெருங்கோயிலுக்குமான உறவு மிக நெருக்கமானதாகும். கோயில் என்ற கட்டட அமைப்பு அரசனின் ஆதரவால்

கட்டப்பட்டதாகும். இது அரண்மனைக்குகந்த கருத்தைச் செயல்படுத்தும் நிறுவனமாகச் செயல்படுகின்றது. அரண்மனைகளை ஒத்த சடங்குமுறைகள் கோயில்களிலும் நடைபெறுவதற்கு இதுவே காரணமாகும். ஆகவே கோயில்கள் அரசர்களுக்கு முக்தியளித் தலையாகத் தம்மைக் காட்டிக்கொள்கின்றன. நாங்குநேரி வானமாமலைப் பெருமாள் கோயில் தலபுராணம், ஒரு அரசன் பிராமணச் சாபத்திலிருந்து விடுதலை பெற்றதைப் பேசுகின்றது.

*"சிந்து நாட்டு அரசன் மனுநீதி வழுவாமல் ஆண்டு வந்தான். அந்நாட்டு மலைகளில் அளவிறந்து வாழும் விலங்குகள் செய்யும் தீங்குகளிலிருந்து தங்களைக் காக்க வேடர்கள் வேண்டினர். அரசன் விலங்குகளை அழிக்க காட்டிற்குச் சென்று, அரண்மனைக்குத் திரும்புகையில் வழியிலுள்ள ஆசிரமம் ஒன்றினுள் நுழைந்தான். அங்கு விஷ்ணுவின் ஆராதனைக்காக வைக்கப்பட்டிருந்த உணவினை உண்டான். ஆசிரமத்தின் குசானனன் அரசன் மீது கோபம் கொண்டு அவனை நாயாகும் படிச் சபித்தான். அரசன் நாயானான். அதனைக் கழைக்கூத்தாடி ஒருவன் பிடித்து ஊர் ஊராகச் சென்று வேடிக்கை காட்டி பிழைத்தான். ஒருநாள் நாங்குநேரி சேற்றுத்தாமரைத் தீர்த்தத்தில் நாயை நீராட்டிய போது அது மனித உருவம் பெற்றது. அரசன் மீண்டும் தன் நாடு அடைந்து அரசாட்சி புரிந்தான்"* (தோதாத்திரி மான்மியம் பக் 6-13).

இக்கதையில் காணப்படும் 'அளவிறந்து பெருகும் விலங்குகளை அழித்தல்' என்பது வேட்டைக்காடுகளை அழித்து நிலத்தைப் புஞ்சை அல்லது நஞ்சை வேளாண்மைக்குக் கொண்டு வரும் முயற்சி எனலாம். இக்கதையாடல் அரச மரபினரைத் தன்னுடன் இணைத்துக்கொள்ள கோயிலில் உருவாக்கப்பட்டுள்ளது எனலாம். இதனை ஒத்த மற்றொரு கதை சங்கரநாராயணர் கோயில் தலபுராணத்திலும் இடம்பெற்றுள்ளது.

*"வீரசேனன் என்ற அரசன் நகர்வலம் செல்லுகையில் மழை பெய்ததால் பிராமணர் ஒருவரின் வீட்டிற்குச் சென்று பசியின் காரணமாகப் பிராமணர் வைத்திருந்த உணவினை உண்டான். பிராமணர் அரசனைச் சபித்தார். அரசன் இத்தலத்து இறைவனை வழிபட்டு முக்தி பெற்றான்"* (சங்கரநாராயணர்கோயில் தலவரலாறு பக்.22) என்பது கதையாகும்.

நிலத்தின் முழு உரிமையாளரான அரசனேயானாலும் பிராமணர் உணவினை உண்பது கொடிய பாவம் என்ற கருத்தை இக்கதைகள் உருவாக்குகின்றன. இத்தகைய பாவத்தை இத்தலமும், தீர்த்தமும் போக்கக்கூடியது எனக் கூறுகின்றன. அதாவது பெருங்கோயில்களின் உணவின் மீது குறிப்பாக பிராமணர் உணவின் மீது ஒரு பாதுகாப்பினை உருவாக்க இக்கதையாடல்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

### 2.2.5. தேவலோகத்தவருக்கு முக்தியளித்தவை

அரசர், அடியவர்கள் மட்டுமல்லாது தேவலோகத்தில் வாழ்பவர்களுக்கும் பாவ விமோசனம் அளித்ததாகத் தலபுராணங்கள் கூறுகின்றன. நவதிருப்பதிகளில் ஒன்றான திருப்புளிங்குடி காசினி வேந்தன் பெருமாள் கோயில் தலபுராணம், ரிஷி ஒருவருக்குப் பிரம்மஹத்திதோஷம்[1] நீங்கியதைக் கூறுகின்றது.

*"இமயமலையிலுள்ள தாமரைத் தடாகத்தில் இந்திரன், இந்திராணியுடன் விளையாடிக் கொண்டிருந்தார். பிராமண ரிஷி ஒருவர் மாற்றுருவம் கொண்டு தனது மனைவியுடன் அதனைப் பார்த்து ரசித்தார். கோபமடைந்த இந்திரன் ரிஷியைத் தாக்கினார். இதனால் இந்திரனுக்கு பிரம்மஹத்தி தோஷம் பிடித்தது. அவர் பித்துப் பிடித்தவன் போல் எங்கும் திரிந்து திருப்புளிங்குடி வந்து, அங்குள்ள தடாகத்தில் நீராடினார். இதனால் இந்திரனின் பிரம்மஹத்திதோஷம் தீர்ந்தது"* (திருப்புளிங்குடி தலவரலாறு,

பக் 42-43).

இக்கதையாடல் 'பிரம்மஹத்திதோஷம்' என்னும் பாவம் ஒன்றினைக் கருத்துருவப்படுத்துகின்றது. அதாவது, பிராமணரைத் தண்டித்தால் கிடைக்கும் பாவத்தைக்கூறுகின்றது. பிராமணர் குற்றம் செய்தாலும் தண்டனைக்குரியவரல்லர். குற்றம் செய்த பிராமணர்களைத் தண்டித்தல் பாவச்செயல் என இக்கதையாடல் கருத்துரைக்கின்றது. இத்தகைய கொடியபாவத்தையும் இத்தலம் போக்கக்கூடியது. தேவலோகத்து இந்திரனே பிரம்மஹத்தி தோஷத்திற்குரியவன் என்பதன் மூலம் மண்ணுலகத்துப் பிராமணர்கள் குற்றம் செய்தாலும் தண்டனைக்குரியவரல்லர் என்ற கருத்து, இக்கதைவழி வலியுறுத்தப்படுகின்றது. இது ஒரு பிராமணச் சார்புக் கதை ஆகும்.

### 2.2.6. எளிய-அடியவர்களுக்கு முக்தியளித்தவை

இறைவனை நம்பிக்கையோடு மட்டும் வழிபடும் பாமரர்களை 'எளிய-அடியவர்கள்' எனலாம். இவர்களும் ஒரு குறிப்பிட்ட தலத்தில் வாழ்ந்து இறைபணியில் ஈடுபட்டு முக்தி பெற்றனர் எனத் தலபுராணங்கள் கூறுகின்றன.

வரகுணமங்கை(நத்தம்) விசயாசனப் பெருமாள் (வெற்றியிருக்கைப் பெருமாள்) கோயில் தலபுராணம் எளிய-அடியவர் ஒருவருக்கு முக்தியளித்ததைப் பேசுகின்றது.

*"செம்படவன்(கிராதன்) என்பவன் வரகுணத்திருப்பதியிலுள்ள குளத்தில் வலையிட்டு மீன்களைப் பிடித்தான். அப்போது அவனைக் கொடிய நாகம் ஒன்று தீண்டி இறந்தான். செம்படவன் இத்தலத்தில் இறந்ததால் சுவர்க்கம் அடைந்தான்"* (வரகுணமங்கை தலவரலாறு:பக் 40-41).

சங்கரநாராயணர் கோயில் தலபுராணமாவது:

*“தாழ்ந்த சாதி புலைச்சி வயிற்றில் பிறந்தவன் கானவன். அவன் எலி பிடிக்கும் ஆசையில் பூமியைத் தோண்டிய போது திரவியம் மிகுந்த குடம் ஒன்றினைக் கண்டெடுத்தான். அதனை வீண் செலவு செய்து ஏழையானான். ஒருநாள் சங்கரன்கோவில் நாகசுனை அருகே பசி காரணமாக மயங்கி விழுந்தான். சிலர் சுனையில் நீரெடுத்து கானவன் மீது தெளிக்க அவன் உயிர் துறந்து நாகசுனை தீர்த்தப்பலனால் கயிலாசப் பதவியடைந்தான்”* (சங்கர நாராயணர் தலவரவாறு பக் 131-133)

எளிய-அடியவர்கள் தலத்தில் இறந்த ஒரே காரணத்திற்காக முக்தி பெற்றதாக இக்கதையாடல்கள் கூறுகின்றன. இங்கு தலம், தீர்த்தம் ஆகிய இரண்டும் பெருமைப்படுத்தப்படுகின்றன. எளிய-அடியவர்களைத் தன்னுள் இணைத்துக் கொள்ளவே கோயில்கள் இத்தகைய கதையாடல்களைப் புனைந்துள்ளன எனலாம்.

### 2.2.7. பேய், பிசாசு போன்ற நலிந்த உயிர்களுக்கு முக்தியளித்தவை

தலம் அரசன், முனிவர்கள், எளிய-மனிதன் ஆகியவர்களோடு பிசாசு, பேய் போன்றவற்றிற்கும் சாபவிமோசம் தருகின்றன. வானமாமலைப்பெருமாள் கோயில் தலபுராணம் பிசாசுகளுக்குச் சாபம் நீக்கியதைக் குறிப்பிடுகின்றது.

*“சங்கநிதியின் மகள் சுசீலை விஷ்ணு பூசை செய்து வந்தாள். அவள் பிராமண இளைஞர் ஒருவர்மேல் காமமுற்றாள். அவளும், அவளுடைய தோழிகளும் அவனிடம் தங்களை உடனே ஏற்க வேண்டினர். அவன் மறுத்ததால், அவனைப் பலாத்காரத்தால் பற்ற முயன்றனர். அவன் சினங்கொண்டு அவர்களைப் பேயாகுமாறு சபித்தான். சேற்றுத்தாமரைத் தீர்த்தத்தில் நீராட அவைகள் முன்னைய உருவத்தைப்பெற்றன”*

(தோதாத்திரி மான்மியம் பக் 85-90).

சாதி மறுத்துச்செய்யப்படும் திருமணங்கள் ‘அனுலோமம்’, ‘பிரதிலோமம்’ என இருவகைப்படும். அனுலோமம் என்பது ‘உயர்சாதி’ ஆண் ‘தாழ்ந்த சாதிப்’ பெண்ணைத் திருமணம் செய்வதாகும். ‘பிரதிலோமம்’ என்பது ‘தாழ்ந்த சாதி’ ஆண் ‘உயர்சாதிப்’ பெண்ணைத் திருமணம் செய்வதாகும்.

இக்கதை எழுந்த காலகட்டத்தை நிர்ணயிக்க பிராமணர்களின் தமிழக வருகை நிலையினை பரிசீலிக்க வேண்டியதுள்ளது. *“விளைநிலமும் மனையும் அளித்த பல்லவ, சோழ மன்னர்களை நோக்கி வட நாட்டிலிருந்து விரைவாக இடம் பெயர்ந்த பிராமணர்கள் தங்களுடன் பெண்கள் இன்றியே வந்தனர். எனவே அவர்கள் வேறு வழியின்றித் தம்மிலும் தாழ்ந்த சாதிப் பெண்களைத் திருமணம் செய்தபோது, சமஸ்கிருதம் வீட்டு மொழியாக விளங்க இயலாது போயிற்று”* (தொ.பரமசிவன் 2005: 36) எனவும், சிவப்பிராமணர்களைப் போலவே வைணவப் பிராமணரும் கலப்புச் சாதியினராகவே உருவாகியிருக்க வேண்டும். பிராமணர்கள் கி.பி. ஏழாம் நூற்றாண்டளவிலேயே பிற சாதிகளில் பெண் கொண்டனர் என்றும் பிராமணப் பெண்களைப் பிற சாதியினர் மணந்து கொண்டனர் என்று சி.மீனாட்சி குறிப்பிடுவதாகவும் தொ.பரமசிவன் (2005:35) கூறுவது இங்கு நினைக்கத்தக்கது.

பெண்துணையின்றி வந்த பிராமணர்கள் இங்குள்ள பெண்களைத் திருமணம் செய்து மக்கட்பெருக்கமாகினர். தம் குழுவுக்குள் திருமணம் செய்யமுடியும் என்ற நிலையை அடைந்தபோது சாதிக்கலப்புத் திருமணத்தைத் தடை செய்து, அகமணமுறையை வலியுறுத்தினர். பிராமணர்கள் சாதிக்கலப்புத் திருமணத்தைக் குறிப்பாக அனுலோமத்

திருமணத்தைத் தடை செய்த காலத்திலேயே இக்கதை எழுந்ததாக இருக்கலாம்.

ஒரு சமூகவரலாற்று நிகழ்வினை இக்கதையாடல் தன்னுள் பொதிந்து வைத்துள்ளது. சமூகத்தில் நிலவுகின்ற சாதிய ஏற்றத் தாழ்வுகளைத் தக்கவைத்துக்கொள்ளவும், பெண் தனக்கான வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுப்பதைத் தடுக்கவும் குறிப்பாக 'தாழ்ந்த' சாதிப் பெண், 'உயர்சாதி' ஆண் மீது காதல் கொள்வதை நிறுத்தவும், சாதிக்கலப்பினைத் தடுக்கவுமே ஆணாதிக்க நிறுவனமான பெருங்கோயில்கள் சாதிக்கலப்புத் திருமணத்தைப் பாவமாகச் சித்தரிக்கும் இத்தகைய கதையாடல்களை உருவாக்கியுள்ளன. இத்தகைய பாவத்தை இத்தலமும், தலத்துத் தீர்த்தமும் தீர்க்கக் கூடியன என்ற எண்ணத்தையும் உருவாக்கியுள்ளன.

முக்தி பெறுதல், இவ்வுலக வாழ்விலிருந்தும் பிறப்பிலிருந்தும் விடுதலையடைதல், விண்ணுலகில் பிறப்பற்றுவாழ்தல், பூமியில் வாழ்வதனால் கிடைக்கும் கொடுமைகள் ஆகியவை குறித்துத் தலபுராணங்கள் பேசுகின்றன. முக்தி வழங்குவது இறைவனின் செயலாகும். இவை முக்தியடைய இறைவனைத் தொழுதால் போதும் என்கின்றன. இக்கருத்துக்கள் யாவும் பௌராணிக மரபிற்குரியதாகும். அதாவது பூமி தாழ்ந்தது, வானம் உயர்ந்தது, பூமியில் வாழ்தல் இழிவானது, விண்ணில் வாழ்தல் உயர்வானது, பூமியின் வாழ்வு துன்பங்கள் கொண்ட நிரந்தரமற்ற ஒன்று. விண்ணில் வாழ்தல் இன்பமான, நிரந்தரமான ஒன்று என்கின்றன. இக்கருத்துக்கள் யாவும் வேதப்பிராமண மரபு சார்ந்தவையாகும்.

### 2.2.8. மண்ணுலக வாழ்வினைப் போற்றுதல்

தலபுராணங்கள் இத்தகைய வைதீகக் கருத்துக்களை முதன்மைப் படுத்தினாலும், அவற்றிற்கு எதிரான மண்ணுலக வாழ்வினைப்போற்றும்

நாட்டார் கதைகளையும் கொண்டுள்ளன. அதாவது தலத்து இறைவன், அடியவர்களை இவ்வுலக இறப்பிலிருந்தும், எமனிடமிருந்தும் காப்பாற்றும் தன்மை கொண்டவன் என எடுத்துரைக்கின்றன. முக்திபெறும் வழிமுறைகளோடு நீண்டகாலம் வாழும் வழிமுறைகளையும் கற்றுக்கொடுக்கின்றன.

### 2.2.8.1 **மரணபயம் ஒழித்தல்**

நெல்லையப்பர் கோயில் தலபுராணம், சுவேதகேது என்ற அடியவருக்கு இறைவன் மரணபயம் போக்கியதைப் பேசுகின்றது. இக்கதை 'சுவேத கேதுவிற்கு எமபயம் ஒழித்த திருவிளையாடல்' எனத் தலபுராணநூலில் (பக்47-49) பெயரிடப்பட்டுள்ளது.

இத்திருவிளையாடல் வைகாசித் திங்களில் சடங்காகவும் நிகழ்த்தப்படுகிறது. திருக்கடவூர், 'வீரட்டானேசுவரர்' கோயிலிலும் இதே கதை வழக்கிலுள்ளது. இந்த நம்பிக்கையின் அடிப்படையிலேயே இப்பகுதி மக்கள் இத்தலத்தில் தங்களது அறுபதாம் திருமணச் சடங்கை இக்கோயிலில் வைத்து நிகழ்த்துகின்றனர்.

கோயிலின் கட்டட அமைப்பும், அடியவர்களின் வாழ்வும் சமூகத்தின் எதார்த்தமான பருப்பொருள்களாகும் (concrete). முக்திபெறுதல், பாவவிமோசனம் ஆகியன சமூகத்தில் நிலவும் அருவப்பொருட்களாகும் (abstract ). கோயில்கள் புராணங்கள் வழியாக பாவம், புண்ணியம், பாவவிமோசனம், முக்தி போன்ற அருவமான கருத்தாக்கங்களை உருவாக்குகின்றன. இக்கருத்தாக்கங்களே கோயிலின் சடங்குகள், வீதிஉலாக்கள், நாள்வழிபாடுகள் தடையின்றி நடைபெறத் துணைபுரிகின்றன.

### 2.2.9. தலம் சாபமடைதல்

தலங்களைத் தேவர், மனிதர், விலங்குகள், எளிய- மனிதர் ஆகிய உயிரிகளுக்கு 'சாபவிமோசனம் அளித்தவை' என புராணங்கள் அறிவிக்கின்றன. இதனைத் தலபுராணங்களின் ஒரு கதைக்கூறு எனலாம். இக்கதைக்கூறிலிருந்து மாறுபட்டு, தலம் ஒருவரால் சபிக்கப்பட்டதான கதையினையும் சில தலபுராணங்கள் கொண்டுள்ளன. நெல்லையப்பர் கோயில் தலபுராணம் இதற்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. இத்தலம் சித்தர் ஒருவரால் சபிக்கப்பட்டு பின் சாபவிமோசனம் பெற்றதாகக் கூறுகின்றது. இது சடங்காகவும் நிகழ்த்தப்படுகின்றது.

*"கருவூர்ச் சித்தர் நெல்லையப்பரை வழிபட வந்தபோது சித்தரின் குரலுக்கு இறைவன் பதில் தராததால் சித்தர் இத்தலத்தில் எள்ளும், எருக்கும் முளைக்க எனச் சபித்து கோபத்துடன் மானூர் சென்றார். இறைவன் இடபத்தின் மீதேறி மானூர் சென்று சித்தருக்குக் காட்சி கொடுத்தார். சித்தர், 'இங்கு இறைவன் இருக்கின்றான்' எனக்கூறி கோயில் மீது இட்ட சாபத்தைப் போக்கினார்'* (நெல்லையப்பர் தலவரலாறு: பக் 49).

இக்கதை ஒவ்வோர் ஆண்டும் ஆவணித் திருவிழா பத்தாம் நாள் சடங்காக நிகழ்த்தப்படுகின்றது. இதனை 'மூலத்திருவிழா', 'கருவூர்ச் சித்தர் காட்சி' என அழைக்கின்றனர்.

நெல்லையப்பரும், காந்திமதியம்மனும் மானூர், அம்பலவாணர் கோயிலுக்குச் சென்று சித்தருக்குக் காட்சிகொடுக்கின்றனர். இவ்வூரைச் சுற்றியுள்ள கிராம மக்கள் பெருமளவில் காட்சியைக் காண்கின்றனர். இப்பெருந்திருவிழா குறித்த பல நம்பிக்கைகள் இப்பகுதி மக்களிடம் வழக்கிலுள்ளன.

1. நெல்லையப்பர், காந்திமதியம்மன் ஆகிய இருவரும் பச்சை

வண்ண ஆடையுடுத்தி காட்சி கொடுத்தால் பச்சைக்காய்கறிகளும், சிவப்பு வண்ண ஆடையுடுத்தி காட்சிகொடுத்தால் மிளகாய் வற்றலும் அவ்வருடம் நன்றாக விளையும் என மக்கள் நம்புகின்றனர். இங்கு இறைவனின் ஆடை வண்ணம் வேளாண்மையோடு தொடர்புபடுத்தப்படுகின்றது.

2. இத்திருவிழாவில் நெல்லையப்பரை வழிபட்டால் மூலநோய் நீங்கும் என்பது மக்களின் நம்பிக்கையாகும்.

3. கருவூர்ச் சித்தர் நெல்லையப்பரைச் சபித்துவிட்டு மானூர் செல்லும் வழியில் தொண்டர்கள்நயினார் சிவனை வழிபட்டுச்சென்றார் என்பது மக்களின் கருத்தாகும். இதனை நினைவுபடுத்தும் விதமாக இன்றும் கருவூர்ச்சித்தர் மானூர் செல்லும் போது இக்கோயிலில் நின்று தீபாராதனை பெற்றுச்செல்கின்றார்.

4. அம்பலவாணர் கோயிலில் கருவூர்ச் சித்தருக்குக் கற்திருமேனி ஒன்றுள்ளது.

5. இத்திருவிழா அன்று சித்தருக்கு முறுக்கு, அதிரசம், பொரி ஆகியவை படைக்கின்றனர்.

6. நெல்லையப்பர் கோயிலில் கருவூர்ச் சித்தர் செப்புத்திருமேனி ஒன்று உள்ளது.

7. கருவூர்ச் சித்தர் கதையாடல் தலபுராணநூலில் சேர்க்கப்பட்டுள்ளது.

8. திருவிழா அன்று இப்பகுதி மக்கள் தங்களது புஞ்சை நிலங்களில் விளைந்த பொருட்களை நெல்லையப்பருக்கு நேர்த்திக்கடனாகக் கொடுக்கின்றனர். அதாவது இச்சடங்கு வேளாண்சார் திருவிழாவாக மாற்றப்படுகின்றது.

9. இத்திருவிழாவிற்குப் புத்தாடை அணிவதை மானூர்ப் பகுதி மக்கள் வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

பெருங்கோயில்கள் வைதீகச்சார்புடைய நிறுவனங்களாகும். அங்கு வேதச் சடங்குகளும், வடமொழி மந்திரச்சொல்லாடல்களும், வேள்விகளும், ஓர் இறைக் கொள்கையும், ஆணாதிக்கச் சிந்தனையும், நிலவுடைமைப்பண்புகளும், சரணாகதியும், சாதிய ஏற்றத் தாழ்வுகளும் கடைப்பிடிக்கப்படுகின்றன.

இப்பண்புகளுக்கு எதிராகத் தமிழ் மரபுச்சடங்குகள்- பல தெய்வக்கொள்கை, பால் சமத்துவம், சாதி சமத்துவம், அரசு சாராமை (anti state) ஆகிய மாற்றுப்பண்பு கொண்ட சித்தர்கள் தமிழகத்தில் வாழ்ந்தனர். *"தமிழ் நாட்டில் சித்தர் இயக்கம் மூன்று நிலைகளில் கால் கொண்டது. வேத எதிர்ப்பு, வேதியர் எதிர்ப்பு, கோயில் எதிர்ப்பு என்பவையே அந்த மூன்றுமாகும். அவற்றை எதிர்த்தே சித்தர் மரபினர் கலகம் செய்யத் தொடங்கினர்* என்கிறார் தொ.பரமசிவன் (2005:44). சித்தர்களின் காலத்தை 14ஆம் நூற்றாண்டு என மு.அருணாசலம் குறிப்பிடுகிறார். சித்தர்கள் அரசாதரவு பெற்றிருந்த பெருங்கோயில் செயல்பாட்டின் மீது கேள்விகளை எழுப்பினர். கோயில்கள் இவர்களின் கேள்விகளை எதிர்நோக்க வேண்டியிருந்தது. இந்த முரண்பாட்டினையே இக்கதையாடலில் காணமுடிகின்றது.

கருவூர்ச்சித்தர் நெல்லையப்பர் கோயில் மீது கொண்ட எதிர்ப்புக் காரணமாக கோயிலில் 'எருக்கு முளைக்க' (அழிந்து போகுமாறு) எனச் சாபமிடுகிறார். கோயில், இந்த எதிர்ப்பினைச் சமாளிக்கத் தாமேசென்று சித்தருக்குக் காட்சி கொடுத்ததாகக் கதையினை உருவாக்கி இதனை நிகழ்த்தியும் காட்டுகின்றது. தமிழ் நாட்டில் சோழ பாண்டியராட்சி சிதைந்து நின்ற கி.பி. பதின்நான்காம் நூற்றாண்டின் 'சித்தர்மரபை' உள்வாங்கவும் அதன் பண்பாட்டுக் கலகக்குரலை எதிர்கொள்ளவும் கோயில் மேற்கொண்ட

பண்பாட்டுச் சமரச நடவடிக்கையே இக்கதையும், நிகழ்த்துதலுமாகும். இச்சமரசங்களே சித்தர்களின் வலுவான கலகமரபிலிருந்து கோயில்களைக் காப்பாற்றின.

நெல்லையப்பரின் மானூர்ப் பயணம் மற்றோர் உள்ளார்ந்த செயல்பாட்டினையும் கொண்டுள்ளது. நிலவுடைமை நிறுவனமான பெருங்கோயில் தெய்வங்கள் 'திருவிழா' என்னும் பெயரில் தமது ஆட்சிக்குட்பட்ட நிலப்பகுதிக்குப் பயணம் செல்கின்றன. இதனை நிலப்பகுதியைக் கண்காணிக்கச் (பார்வையிடச்) செல்வதாகப் பொருள் கொள்ளலாம். அதாவது தமது விளைநிலத்தைப் பார்வையிட்டுத் தமக்குரிய பங்கினைப் பெறச் செல்வதாகும். திருவிழாவின் நடைமுறைகளை நோக்கும் போது இக்கருத்து உறுதியாகிறது.

### 2.2.10. தல வகைப்பாடு

தலங்களை முதுமை, பிணி, வறுமை, மகப்பேறின்மை நீக்குபவை எனவும் வகைப்படுத்தலாம்.

#### 2.2.10.1. முதுமை நீக்குபவை

முதுமை, வாழ்வின் எதார்த்தமாக இறப்பினை முன்னுணர்த்தி நிற்கின்றது. பெருங்கோயில்கள் முதுமை நீக்கும் தலங்களாகத் தம்மைக் காட்டிக் கொள்கின்றன. ஆதிநாதர் கோயில் தலபுராணம், இத்தலத்தில் இந்திரனின் கிழத்தன்மை நீங்கியதை விளக்குகின்றது.

*"காசிப முனிவர் தமது மகனான இந்திரனைப் பார்க்க வந்த போது அவன் பெற்றோரையும் ஏனைய விருந்தினர்கள்ளையும் உபசரிக்கத் தவறினான். இதனால் காசிப முனிவர் கோபம் கொண்டு இந்திரன் தனது இளமையை இழக்குமாறு சபித்தார். இந்திரன் ஆதிசேத்திரத்தில் தவம்*

*இயற்றி சாபம் நீங்கி இளமைத் தோற்றம் பெற்றான்"* (ஆதிநாதர் கோயில் தலபுராணம் பக் 21-22).

2.2.10.2. **பிணி நீக்குபவை**

கோயில்கள் சாபத்திலிருந்து விடுதலையளிப்பது போன்று நோயிலிருந்தும் விடுதலை அளிக்கக்கூடியன என்பதைக் கதையாடல்கள் எடுத்துரைக்கின்றன.

*"தர்மவத்சலன் என்ற வணிகன் முற்பிறப்பில் பிறரை ஏமாற்றி வணிகம் செய்ததால் அவனுக்குத் தொழுநோய் வந்தது. தோதாத்திரி (நாங்குநேரி) தலத்தையடைந்து அங்குள்ள சேற்றுத்தாமரைத் தீர்த்தத்தில் நீராடிய போது தொழுநோய்நீங்கி ஒளியுடம்பு பெற்றான்"* (தோதாத்திரி மான்மியம் பக் 74-80).

*"சத்யசீலர் என்பவர் கங்கை நதிக்கரையில் வாழ்ந்து வந்தார். அவரது மூத்த மகன் வன்னிசாரன் முற்பிறப்பில் தனது குருவின் பசுவைத்திருடியக் குற்றத்திற்காக குருவின் சாபத்தால் தொழுநோய்பெற்று அவதிப்பட்டான். துலைவில்லி மங்களத்தின் தாமிரபரணி (அச்வினி) தீர்த்தத்தில் நீராடி நல்லுடம்பு பெற்றான்"* (துலைவில்லி மங்கலம் தலவரலாறு).

*"கன்மாடன் என்பவன் தனது தந்தையின் வேள்விக்காகத் தருப்பைப்புல் எடுத்து வரும் போது எதிர்ப்பட்ட பசுவை ஆழமான குழியில் தள்ளிக் கொன்றான். பசுவைக் கொன்ற பாவத்தால் நோய்வாய்ப்பட்டு அவதிப்பட்டான். அதனைப் போக்க நாகசுனையில் நீராடினான்"* (சங்கர நாராயணர் தலவரலாறு பக் 139-142).

கொடிய நோயின் தாக்குதலிலிருந்து தலங்கள் பாதுகாப்பு அளிக்கக் கூடியன என இம்மூன்று கதைகளும் காட்டுகின்றன. பசுவின் மீது ஒரு புனிதத்தைக் கட்டமைக்கின்றன.

ஆய்வுக்களத்தில் சங்கரநாராயணர் கோயில் நச்சுத்தண்மை நீக்கும் தலமாக மக்களால் கருதப்படுகின்றது. தேள், பூரான், பாம்பு போன்ற நச்சுப் பூச்சிகள் கடித்தால் அல்லது கடிக்க முற்பட்டால் இக்கோயிலுக்குக் காணிக்கை நேர்வது நெல்லைமாவட்ட மக்களின் வழக்கமாகும். இக்கோயிலில் வெள்ளியிலான தேள், பூரான், பாம்பு போன்றவற்றை மக்கள் காணிக்கையாகச் செலுத்துகின்றனர். இது விஷப்பூச்சிகளின் தாக்குதலிலிருந்து விடுபட மேற்கொள்ளப்படும் மனத்தளவிலான ஒரு தற்காப்பு நடவடிக்கையாகும்.

நோய்களை அவை தீரும் காலத்தின் அடிப்படையில் 'குறுகிய காலநோய்கள்', 'நீண்ட காலநோய்கள்' (Chronic diseases) என இரண்டாக வகைப்படுத்துவர். குறுகியகால நோய்கள் மருந்துகளால் எளிதில் தீரக்கூடியன. இவை குறித்து மனிதர்கள் கவலைப்படுவதில்லை. நீண்ட காலநோய்க்கான மருந்துகளில் ஒன்றாகப் பெருந்தெய்வக் கோயில்கள் தம்மை காட்டிக்கொண்டன. 'தொழுநோய்' என்பது அங்கக்குறைவினை ஏற்படுத்தும் நோயாகும். எனவே மக்கள் இதனைப் பாவங்களின் விளைவாகக் கருதினர், கருதுகின்றனர். மக்களிடம் நிலவும் இந்த உணர்வைக் காப்பதற்குக் கோயில்கள், தம்மை அந்த நோய்நீக்கும் மருந்தாகச் சித்தரித்தன. தலத்துத் தீர்த்தங்களும், மண்ணும், திருமுழுக்குப் பொருட்களும் மருந்தாக நம்பப்பட்டன.

இப்பொருட்களை நோய்நீக்கும் மருந்தாகப் பயன்படுத்தும் வழக்கம் பலகோயில்களில் இன்றும் நடைமுறையிலுள்ளது. உதாரணமாக, நாங்குநேரி

வானமாமலைக் கோயிலில் பெருமாளுக்கு நாள்தோறும் நல்லெண்ணெயால் 'எண்ணெய்க் காப்பு' சாத்தப்படுகிறது. அங்கு அடியவர்கள் நேர்த்திக்கடனாக 'எண்ணெய் சாத்துதல்' சடங்கினைச் செய்கின்றனர். அதாவது மூலவருக்கு எள்ளெண்ணெயால் திருமுழுக்குச் (அபிசேகம்) செய்கின்றனர். *ஓராண்டில் இங்கு ஏறத்தாழ இரண்டாயிரம் லிட்டர் நல்லெண்ணெய் திருமஞ்சனம் செய்யப்படுகின்றது* (லட்சுமி நாராயணன்:பக் 8). இந்த எண்ணெய் சிறுதூம்பு வழியாக வடபுறத் திருச்சுற்றிலுள்ள கிணற்றிற்கு வந்து சேர்கின்றது. இதனை 'எண்ணெய்க் கிணறு' என அழைக்கின்றனர். இந்த எண்ணெய் தோல்நோய்களுக்கான மருந்தாக அடியவர்களால் பயன்படுத்தப்பெறுகின்றது.

சங்கரநாராயணர் கோயில் புற்றுமண் தோல்நோய்க்குரிய மருந்தாக அடியவர்களால் எடுத்துச்செல்லப்படுகின்றது. இக்கூறு இன்றும் செயல்பாட்டுக்கூறாக விளங்குகின்றது. ஆழ்வார் திருநகர் தலத்து மக்கள் தலவிருட்சமான புளிய மரத்துப் பட்டையைத் தலைவலி மருந்தாக அரைத்துப் பூசுகின்றனர்.

### 2.2.10.3. தகாப்புணர்ச்சிப் பாவம் நீக்குபவை

தலங்களில் சில எல்லா விதமான பாவங்களையும் போக்குபவையாகச் சித்தரிக்கின்றன. நெல்லை மாவட்டத்துப் 'பாபநாசம்' எல்லாவிதமான பாவத்தையும் போக்கும் தலமாகக் கருதப்படுகின்றது. இதன் காரணமாக அத்தலம் 'பாபநாசம்' எனப்படுகிறது. இறைவன் 'பாபவிநாசர்' என அழைக்கப்படுகிறார். 'தகாப்புணர்ச்சி' எனப்படும் மிகக் கொடிய பாவத்திற்கு விமோசனம் அளித்ததை இப்பகுதி மக்கள் கதையாக எடுத்துரைக்கின்றனர்.

*"சிறுவயதில் பிரிந்த அண்ணன், தங்கை இருவர் தங்களது*

*உறவுமுறையினைத் தெரியாது திருமணம் செய்து கொண்டனர். உறவுமுறையை அறிந்தபோது, இப்பாவத்தைப் போக்கப் பல தலங்கள் சென்று நீராடினர். பாபநாசம் தாமிரபரணியில் இருவரும் கைக்கோத்து நீராடிய போது அப்பெண்ணின் கழுத்திலிருந்த தாலி தானாகக் கழன்று விழுந்தது. கோத்திருந்த கைகள் பிரிந்தன. இருவரும் பாவவிமோசனம் பெற்று மீண்டும் அண்ணனும் தங்கையுமாக வாழ்ந்தனர்"* என்பது அக்கதையாகும். இக்கதையை 1916இல் எச்.ஆர். பேட் (1993:303) பதிவு செய்துள்ளார்.

நெல்லை மாவட்ட மக்கள் இத்தலத்தைப் பாவவிமோசனத் தலமாகக்கருதுகின்றனர். தை அமாவாசை, ஆடி அமாவாசை போன்ற சிறப்பு நாட்களிலும், தம்முன்னோர் இறந்த நாளிலும் இத்தலத்தில் நீர்க்கடன் செய்கின்றனர். இக்கடன் செய்ய விரும்புவோர் இத்தலத்தில் நீராடி ஒற்றைப்படை எண்ணிக்கையில் காவியாடை உடுத்திய பிச்சைக்காரர்களுக்கு பச்சைக்காய்கறிகளும், பலசரக்குப் பொருட்களும் தானமாகக் கொடுக்கின்றனர் (பச்சைக் காய்கறிகளில் வாழைக்காய், கத்தரிக்காயும் பலசரக்குப் பொருட்களில் புளி, மிளகாய்வற்றல் ஆகியனவும் கட்டாயப் பொருள்களாகும்). பிச்சைக்காரர்கள் இதனை 'சங்கு பெருக்கி' பெற்றுக் கொள்கின்றனர். இது இத்தலத்தில் நாள்தோறும் நடைபெறுகின்றது. மேலும் 'சாந்தி கழித்தல்' என்னும் சடங்கினைச் செய்ய ஏற்ற தலமாகவும் இதனைக் கருதுகின்றனர். 'சாந்தி கழித்தல்' என்பது அறிந்தோ, அறியாமலோ செய்த பாவங்களையும், கிரக நிலை சரியில்லாததால் அனுபவிக்கும் துன்பங்களையும் போக்க சோதிடர் நிகழ்த்தும் சடங்கு ஆகும். இக்கூறுகள் இத்தலம் ஒரு 'பாவவிமோசனத்தலம்' என மக்கள் கொண்டுள்ள எண்ணத்தை வெளிப்படுத்துகின்றன.

### 2.2.10.4. குருபாவம் நீக்குபவை

சில தலங்கள் தம்மைக் குருபாவம் நீக்குபவையாகக் காட்டுகின்றன. எடுத்துக்காட்டாக மகரநெடுங்குழைக்காதர் கோயில்,

*"வருணன் தன் குருவான வியாழ பகவானை மறந்து வேள்விகள் செய்தான். கோபமுற்ற வியாழன், வருணன் எதிரிகளிடம் அடிமையாகுமாறு சபித்தார். வருணன் தென்திருப்பேரை தலத்தில் பங்குனித் திங்கள் உத்திரமீன் கூடிய நிறைமதி நாளில் தாமிரபரணித் தீர்த்தத்தில் நீராடி சாபவிமோசனம் பெற்றான். தன் பகைவர்களை அழித்து நாடு நகரங்களை மீண்டும் பெற்றான்""* (மகரநெடுங்குழைக்காதர் தலவரலாறு) எனக் கூறுகிறது.

வருணன் சாபவிமோசனமடைந்த இந்நன்னாளில் இக்கதையாடலை நினைவூட்டும் விதமாக 'நாள்ஏர் பூட்டுதல்' என்னும் சடங்கு இக்கோயிலில் இன்றும் நிகழ்த்தப்படுகின்றது.

### 2.2.10.5. வறுமை நீக்குபவை

பெருங்கோயில்கள் தம்மை வறுமைநீக்கும் தலங்களாகவும் சித்தரிக்கின்றன. தென்திருப்பேரை மகரநெடுங்குழைக்காதர் கோயில், இறைவனை 'மழைவளம் அருளிய மாயவன்' எனப்போற்றுகின்றது.

*"விதர்ப்ப நாட்டில் கடும் பஞ்சம் ஏற்பட்டது. பன்னிரண்டு ஆண்டுகள் பருக நீரில்லாமல் உயிர்கள் தவித்தன. அரசன் திருப்பேரை எம்பெருமானை வழிபட்டால் பஞ்சம் தீரும் என சோதிடர் அறிவுறுத்தினார். அரசன் தீர்த்தத் துறையில் நீராடி குழைக்காதரை வழிபட்டான். நாடெல்லாம் திங்கள் தோறும் மும்மாரி பெய்து செல்வம் கொழித்தது"* (பத்மஜா :1991. பக் 15-16).

*"நீர் வளங்களை பெருங்கோயில் கைக்கொள்ள மேற்கொண்ட*

*முயற்சிகள் கல்வெட்டுகள் மூலம் நமக்குக் கிடைக்கின்றன. திருக்கச்சியூரில் பதியப்பட்டுள்ள மூன்றாம் குலோத்துங்களின் இருபத்து மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு நீர்ப்பாசன வசதிகளை ஏற்படுத்தித் தருவதில் கோயிலுக்கு இருந்த முன்முயற்சியையும் கடமையையும் மிகத் தெளிவாக எடுத்துரைக்கிறது'* என்கிறார் மே.து.ராசுகுமார்(2004:28). நீர் வளத்தைக் கையகப்படுத்தும் வழிமுறைகளில் ஒன்றாக மழை இறைவனால் அருளப்படுகின்றது என்ற கதையாடல்களைக் கோயில்கள் உருவாக்கியுள்ளன.

2.2.10.6. **மகப்பேறின்மை நீக்குபவை**

மகப்பேறின்மை தமிழ்ச் சமூகத்தில் பெருங்குறையாகவும் பாவத்தின் விளைவாகவும் கருதப்படுகின்றது. பெருங்கோயில்கள் இக்குறையினைப் போக்கும் மருத்துவமனையாகத் தம்மைக் காட்டிக்கொண்டன.

அரசர் ஒருவருக்கு ஏற்பட்ட இக்குறையை மகரநெடுங்குழைக்காதர் நீக்கியதாக அக்கோயில் தலபுராணக் கதை கூறுகின்றது.

*"பாண்டிய மன்னன் மகப்பேறில்லாது தவித்தான். இக் குறையைத் தவிர்க்க குழைக்காதரை வணங்கினான். இறைவன், அரசனது கனவில் தோன்றி தளவகார வேதம் ஓதும் வைணவ அந்தணர்கள் நூற்றெண்மரை இத்தலத்திற்குக் கொண்டு வந்து சாம வேதம் ஓதுவிக்கக் கட்டளையிட்டார். அரசன் நூற்றியெட்டு தளவகாரர்களை இத் தலத்திற்கு அழைத்து வந்தான். அப்போது இறைவன் இவர்களில் ஒருவரைக் குறையச்செய்தான். வைணவர் ஒருவர் குறைவது கண்டு அரசன் வருத்தப்பட இறைவனே அந்த ஒருவராக வந்து சாமவேதத்தை ஓதினான். இறைவன் பாண்டிய மன்னனுக்குக் குழந்தைப்பேறு வழங்கினான்".* (நெடுங்குழைக்காதர் தலவரலாறு பக் 30-32).

'மகப்பேறு' என்பது சொத்துடைமைச் சமூகத்தில் ஒருமனிதனின் அடிப்படைத் தகுதியாகும். அரசதிகாரத்தைப் பொறுத்தவரை இது மிகப்பெரும் தகுதியாகும். எனவே கோயில்கள் இதுகுறித்த கதையாடல்களையும் உருவாக்கிக் கொள்கின்றன.

அரசதிகார நிறுவனங்களுடன் இணைந்து அதன் பலன்களை அனுபவிக்க விரும்புவது மனித இயல்பாகும். பெருங்கோயில் என்ற அரசதிகாரத்துடன் இணைய இறைவன் எங்களுடன் சமமாக அமர்ந்தவன் எனக் கூறுவது ஒரு முறையாகும். இறைவன் எங்களில் ஒருவன் எனக் கூறி கோயிலதிகாரத்தோடு இணையவே வைணவப் பார்ப்பனர்கள் இத்தகைய கதையாடலை உருவாக்கியுள்ளனர். வைணவப் பார்ப்பனர்களின் இடப்பெயர்வினையும் இக்கதையாடல் எடுத்துரைக்கிறது.

### 2.2.11. முடிவுரை

இலக்கியத்தோற்றம் அதன் காலச்சூழலோடு பின்னிப்பிணைந்ததாகும். 'காலச்சூழல்' என்பது அரசர்களின் ஆட்சியையும் மக்களின் பண்பாட்டினையும் உள்ளடக்கியதாகும். தலபுராணங்கள் தமிழகத்தில் கி.பி பன்னிரண்டு முதல் பதினெட்டாம் நூற்றாண்டு வரையிலான காலத்தில் அக்காலச்சூழலுக்கு ஏற்ப தோன்றியதோர் இலக்கிய வகைமையாகும். கி.பி பன்னிரண்டாம் நூற்றாண்டு முதல் பதினெட்டாம் நூற்றாண்டு வரையிலான காலத்தில் தமிழகத்தில் நிலையான வலுவான ஆட்சி இல்லாததைப் பல வரலாற்றாசிரியர்கள் பதிவு செய்துள்ளனர்.

*"பண்பாட்டு வரலாற்றில் இக்காலகட்டத்தில் பொருளாதாரச் சீர்குலைவும், இடையிடையே தோன்றிய பஞ்சங்களும், சைவ-வைணப் போட்டிகளும், சமுதாயத்தில் தோன்றிய இனப்பூசல்களும், போராட்டங்களும் அடக்கி ஆளப்பட்ட மக்களின் உள்ளக்குமுறல்களும், நாட்டை மேலும்*

*பலவீனப்படுத்தின, மக்களைத் துன்புறுத்தின"* (வே.தி.செல்வம்:1998:291) என்று இக்காலத்தை வருணிக்கிறார்.

பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இருந்தே அராஜகமும், சீர் குலைவும் மிகக்கடும் அளவில் நாட்டைக் கவ்விப்பிடித்தன, இதற்கு முன் அமைதியோடும் வளத்தோடும் நாட்டை ஆண்ட பாண்டிய, சோழ அரசுகள் அரசியல் சக்திகள் எனும் வகையில் காலாவதியாகிவிட்டன. அவைகளின் இடத்தில் அந்நிய சக்திகள் பலம் பெறலாயின. வேளாண்மை, பொருள் உற்பத்தி, வணிகம் இவை தேக்கமுற்றன. இவற்றோடு சேர்ந்து பொருளாதாரவளம், பண்பாட்டு மேம்பாடு, அரசியல் அமைதி ஆகிய அனைத்தும் சீர் குலைந்தன என வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர்.

இக்காலகட்டத்தில் நிலவியிருந்த அமைதியற்ற வாழ்வில் கோயில்கள் அமைதியைத் தரும் நிறுவனங்களாகத் தம்மைக் கற்பிதப்படுத்தின. இதன் காரணமாக அரசன், எளிய-மனிதன், விலங்குகள், நலிந்த உயிர்களான பிசாசுகளுக்கு விமோசனம் அளிக்கும் இடமாக இவை தம்மைக் காட்டிக்கொண்டன. கொடிய நோயிலிருந்து மீளுதல் போன்ற அற்புதங்களைச் செய்யும் தலங்களாகத் தம்மைச் சித்தரித்தன. அதாவது காலச்சூழலுக்கும் சமூக உளவியலுக்கும் ஏற்ப கதைகளை உருவாக்கி அதனைத் தலபுராணம் என்ற பெயரில் மக்களிடம் அளித்தன. அதன் மூலம் வழிபடும் மக்களைத் தம்மோடு இணைத்துக்கொண்டன அல்லது தக்கவைத்துக் கொண்டன.

# இயல் மூன்று

## சடங்குகளும் உள்ளூர் மரபுகளும்

### 3.0. முன்னுரை

'திருவிழாக்கள்' என்பன சமூக அசைவியக்கங்களில் ஒன்றாகும். திருவிழாக்கள் இல்லாமல் எந்தச் சமூகமும் இயங்க இயலாது. அயராது உழைக்கும் மக்களுக்குத் திருவிழா என்பது ஓய்வு எடுக்கும் நாளாகவும், பண்பாட்டுக் கூறினை அடுத்த தலைமுறைக்கு எடுத்துரைக்கும் களமாகவும் அமைகின்றது. திருவிழாக்களில் நிகழ்த்தப்படும் செயல்களே சடங்குகள் ஆகும். 'சடங்குகள்' என்பன மந்திரச் சொல்லாடல்கள், செயல்முறைகள் ஆகியனவற்றைக் கொண்டுள்ளன. சடங்குகளில் மனிதனின் விருப்பங்கள், எண்ணங்கள் வெளிப்படுகின்றன. சமூகத்தில் நடைபெறும் பல்வகையான திருவிழாக்களில் கோயில் திருவிழாக்கள் ஒருவகையாகும். கோயில் திருவிழாக்களைப் பெருங்கோயில் திருவிழாக்கள், நாட்டார் கோயில் திருவிழாக்கள் என இரண்டாக வகைப்படுத்தலாம். திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்களில் நாட்டார் கோயில் திருவிழாக்கள் 'கொடை' என்ற சொல்லாலும் பெருங்கோயில் திருவிழாக்கள் 'திருவிழா' என்ற சொல்லாலும் மக்களால் சுட்டப்படுகின்றன.

பெருங்கோயில்களில் நாள்தோறும், வாரம், மாதம், ஆண்டுக்கு ஒன்று அல்லது இருமுறை என்ற எண்ணிக்கையில் காலஅட்டவணைக்குட்பட்டு திருவிழாக்கள் நடத்தப்படுகின்றன. இத்திருவிழாக்களில் பல்வேறு சடங்குகள் செய்யப்படுகின்றன. *'பெருங்கோயில்களில் திருவிழாக்கள் ஒரு குறிப்பிட்ட நட்சத்திரம் அல்லது திதி (தீர்த்தத்திதி)யில் தொடங்குகின்றன அல்லது நிறைவடைகின்றன'* (A.V.Jeyechandran:1985:207).

'தீர்த்தமாம் அட்டமீமுன் சீருடை ஏழுநாளும்

கூத்தராய் வீதிபோந்தார் குறுக்கை வீரட்டனாரே'

என்பது அப்பர் தேவாரம். இது அட்டமி திதியில் (எட்டாம் பிறைநாளில்) திருவிழா நிறைவு பெற்றதைக் குறிப்பிடுகிறது. *'பெருங்கோயிலில் ஆண்டுத் திருவிழாவோடு உள்ளூர் மரபினைக் கொண்டுள்ள திருவிழாக்களும் நடத்தப்படுகின்றன'* என்கிறார் ஏ.வி.ஜெயசந்திரன்(1985:209).

நாட்டார் கோயில்களில் நாட்டாரின் விருப்பகாலத்தில் திருவிழாக்கள் நடத்தப்படுகின்றன. *'தமிழகத்தின் நாட்டார் தெய்வங்களின் கோவில்களில் நிகழும் பல்வேறு சமயச் சடங்குகள் மந்திரமும் சமயமும் கலந்து உருவான சடங்குகளேயாகும். மேல்நிலையாக்கம் பெற்ற சைவ, வைணவக் கோவில்களில் நிகழும் சடங்குகள் மந்திரத் தன்மையை இழந்து, வளர்ச்சியடைந்த சமயச் சடங்குகளாகும்'* என்பர் ஆ.சிவசுப்பிரமணியன் (1999:26).

பெருங்கோயில் சடங்குகள் அர்ச்சகர்கள் அல்லது அதற்கென நியமிக்கப்பட்டுள்ள பணியாளர்களால் செய்யப்படுகின்றன. இங்கு பிராமண அர்ச்சகர்கள் சடங்குகளை நிகழ்த்துபவர்களாகவும், அடியவர்கள் பார்வையாளர்களாகவும் அமைகின்றனர். இங்கு சடங்கு முறைகளை நிகழ்த்துவதற்குத் திட்டமிட்ட விதிகள் உள்ளன. இந்த விதிகள் 'ஆகம விதியாகவோ' அல்லது 'உள்ளூர் மக்கள் கொண்டுள்ள வழக்கமாகவோ' இருக்கலாம். பெருங்கோயில்களில் நிகழ்த்தப்படும் சடங்குகளை அவற்றின் உள்ளடக்கங்களைக் கொண்டு *'நிலவுடைமைசார் சடங்குகள்', 'பிறவகைச் சடங்குகள்'* என இரண்டாக வகைப்படுத்தலாம். இந்த இரு சடங்கு முறைகளில் காணப்படும் உள்ளூர் மரபுகளை இவ்வியல் ஆராய்கின்றது.

இவ்வியலின் முதல் பகுதி பெருங்கோயில் சடங்குகளில் காணப்படுகின்ற நிலவுடைமைப் பண்பினையும் அதன் உள்ளூர்த் தன்மையினையும் எடுத்துரைக்கின்றது. இரண்டாம் பகுதி நிலவுடைமைசாராச் சடங்குகளின் பண்புகளையும் அதன் உள்ளூர்த் தன்மைகளையும் வெளிப்படுத்தி எடுத்துரைக்கிறது.

### 3.1. பகுதி ஒன்று : **நிலவுடைமைசார் சடங்குகள்**

3.1.0. பெருங்கோயில்கள் விளைநிலங்கள், வைரம், பொன், வெள்ளி அணிகலன்கள், கால்நடைகள், கட்டடங்கள், பாத்திரங்கள் ஆகியவற்றைச் சொத்துக்களாகக் கொண்டுள்ளன. இச் சொத்துக்கள் அனைத்தும் வெவ்வேறு காலப்பகுதியில் அரசர்கள், தளபதிகள், அமைச்சர்கள், பட்டத்தரசியர், பிறகுடிகள் ஆகியோரால் கொடையாக வழங்கப்பட்டனவாகும். ஆகவே பெருங்கோயில்கள் என்பன சொத்துடைமை நிறுவனங்களாக அமைந்தன. முற்காலத்தில் இங்குள்ள சொத்துடைமைகளில் அளவில் பெரியதாக நிலங்கள் இருந்தன. இவையே கோயிலுக்குப் பெருமளவில் வருவாயை அளித்தன. எனவே இங்கு நிலவுடைமை நிறுவனத்தின் செயற்பாடுகள் நடைபெறுகின்றன என ஆய்வாளர்கள் கருத்துரைத்துள்ளனர்.

தற்போது கோயில்களுக்கு நிலங்கள் மூலம் கிடைத்த வருவாய்கள் குறைந்தன. நிலச்சீர்திருத்தச் சட்டங்கள், பயிரிடு முறையில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள், நிலக்குத்தகைதாரர்களின் மனநிலையில் ஏற்பட்டுள்ள மாறுதல்கள் ஆகியன இந்த மாற்றத்திற்கான காரணங்களாகும். தற்காலத்தில் நகரப்பகுதியில் கோயில் கொண்டுள்ள வணிகவளாகங்களே இவற்றிற்கு ஓரளவு வருவாயை அளிக்கின்றன. இருப்பினும் பெருங்கோயில்கள் அடிப்படையில் நிலவுடைமை நிறுவனங்களே என்பதை

இன்றும் அவை கொண்டுள்ள பயிர்செய் குத்தகை நிலங்கள், சொந்த நிலங்களின் அளவுகள் உறுதிசெய்கின்றன. கோயில்களின் சடங்கியல் நடைமுறைகளும் இப்பண்பினை வெளிப்படுத்துகின்றன. தெய்வப் பெயர்கள், தலபுராணங்கள் ஆகியவற்றில் இந்த நிலவுடைமைப் பண்புகள் வெளிப்படுவதை முன் இயல்களில் கண்டோம். இனி, அவற்றின் சடங்குகளில் காணப்படும் நிலவுடைமைப் பண்பினைக் காணலாம்.

### 3.1.1. தெய்வ வீதிஉலாக்கள்

இறைவன், இறைவி ஆகிய இருவரும் கோயிலில் 'மூலவர்', 'உற்சவர்' என்ற இருநிலைகளில் எழுந்துள்ளனர். கருவறையில் இருக்கும் இறைவன், இறைவி மூலவர் என அழைக்கப்படுகின்றனர். வைணவக்கோயில் கருவறையில் இறைவனை(பெருமாளை) 'நின்ற', 'அமர்ந்த', 'கிடந்த' என மூன்று கோலங்களில் ஏதேனும் ஒன்றில் அமைப்பது பொது வழக்கமாகும். விதிவிலக்காக, தொண்டை மண்டலத்திலுள்ள சில கோயில்களில் இறைவன் புராண மரபுப்படி தனது வலதுகாலைத் தூக்கி வாமனச் சக்கரவர்த்தியின் தலையில் வைத்திருப்பது போன்று வடிவமைக்கப்பட்டுள்ளார். ஆய்வுக்களத்திலுள்ள மன்னார்கோயில், பாளையங்கோட்டை, சேரன்மாதேவி ஆகிய மூன்று தலங்களிலுமுள்ள இராஜகோபாலசுவாமி கோயில்களில் ஒன்றின் மேல் ஒன்றாக அமைந்துள்ள மூன்று அடுக்குக் கருவறைகளில் இறைவன் நின்ற, அமர்ந்த, கிடந்த கோலங்களில் காணப்படுகிறார்.

சிவத்தலங்களில் *'சாமி(சுவாமி)'* என அழைக்கப்படும் இறைவன் கருவறையில் லிங்க வடிவில் அமைக்கப்பட்டுள்ளார். *'எல்லாச் சைவக் கோயில்களிலும் 'லிங்கம்' என்னும் ஒரே மூலவடிவினை ஏற்படுத்தியவர் முதலாம் இராசராசனே. சோழ அரசு, அரசமதமாக சைவத்தை மாற்றியபோது அது கோயில் கட்டட அமைப்பில் இரண்டு மாற்றங்களை*

*உருவாக்கியது. அவற்றுள் ஒன்று சோழஅரசு வடக்கிலும் தெற்கிலும் தன் ஆதிக்கத்தை விரிவுசெய்த போது சைவக்கோயில் கருவறை மூர்த்தங்கள் (சோமாஸ்கந்த திருமேனிகள்) அப்புறப்படுத்தப்பட்டு அருவுருவமான சிவலிங்கம் திருநிலைப்படுத்தப்பட்டது'* எனக் கருவறையில் லிங்கம் அமைந்த வரலாற்றை எடுத்துரைக்கின்றார் தொ.பரமசிவன்(2005:27).

சைவக் கோயில் கருவறையில் இறைவி பொதுவாக நின்ற அல்லது அமர்ந்த கோலத்தில் இருப்பர். கருவறைத் தெய்வங்கள் அடியவர்களால் தொட்டு வணங்க இயலாதவையாகவும், கருவறை என்ற வெளியைக் கடக்காதவையாகவும் உள்ளன. இம்மூலத்திருமேனிகள் கல் அல்லது சுதையால் வடிவமைக்கப்படுவது வழக்கமாகும்.

'உற்சவர்' என்பவர் உலோகத் திருமேனியாக, அடியவர்களால் அருகிலிருந்து வணங்கக்கூடியவராக உள்ளார். இந்த உற்சவ மூர்த்தியே கோயிலுக்கு வெளியே வீதிஉலா செல்கின்றார். *'உற்சவர் என்ற சொல்லிற்கு ஏற்ற சொல்லாக 'வீதியாரவருவார்' என்ற ஒரு சொல்லை வைணவர்கள் வழங்கிவருகின்றனர். 'வீதியார வருவானை' என்ற சொல் ஆண்டாள் பாடலில்(நாச்சியார் திருமொழி 14:5) இடம் பெறுகின்றது'* (சு.வேங்கடராமன் 2002:115) பெரும்பாலான கோயில்களில் இந்த உற்சவரே சடங்குகளுக்கு உரியவராகிறார்.

'தெய்வ வீதிஉலாக்கள்' என்பன சடங்குகளின்போது தெய்வங்களை, அவைகளின் அருளாட்சி எல்லைக்குட்பட்ட பகுதிகளுக்கு எடுத்துச் செல்வதாகும். இவ்வீதிஉலாக்களின் போது உற்சவரைப் பட்டாடையில் வண்ண மாலைகள் அணிவித்துச் சப்பரங்களில் எடுத்துச் செல்கின்றனர். அப்போது வெண்குடைகள் பிடிக்கப்படுகின்றன, இசைக்கருவிகளோடு மேளதாளங்கள் வாசிக்கப்படுகின்றன, அடியவர்கள் இறைவனுக்கு மரியாதை

செய்கின்றனர். யானை, குதிரை, வழிபடுமக்கள் ஆகியோர் தெய்வத்திற்கு முன்னால் செல்கின்றனர். அதாவது தெய்வ வீதி உலாக்கள் அரசவீதி உலாவின் பிரதிபலிப்பாகவே அமைந்துள்ளன. அரசனும் பெருங்கோயில் இறைவனும் நிலவுடைமையாளர்கள் ஆவர். ஆகவே வீதிஉலாக்களில் தெய்வங்கள் அணிகின்ற ஆடைகள், அணிகலங்கள், உலா செல்லும் வாகனங்கள், மகுட அலங்காரங்கள் என்பன அரசனைப் போலச் செல்வச் செழுமையினைக் காட்டுகின்றன.

நெல்லையப்பர், திருநாள் ஒன்றில் ‘பிச்சாடனர் வேடம்’ கொண்டு கையில் திருவோட்டுடன் பிச்சைக்கோலத்தில் வீதிஉலா வருகின்றார். சிவன் தாருகாவனத்து ரிஷிபத்தினிகளைக் கவர்வதற்காக இக்கோலத்தில் வருகின்றார் என்பது ஒரு புராணச்செய்தியாகும். *‘சிவன் பிரம்மனின் ஒரு தலையை வெட்டியதால் பிராமண தோசம் பெற்றார். பிரம்மனின் கபாலம் சிவனின் உள்ளங்கையில் ஒட்டிக்கொண்டது. இந்தப் பாவத்தைப் போக்க சிவன் பிச்சைக்காரனாக ஆடையின்றித் திரிந்தார்’* (எச்.கிருஷ்ண சாஸ்திரி 1986:100) என்பது மற்றொரு கதையாகும். ‘திருவோடு’ என்பது பிச்சைக்காரர்களின் அடையாளமாகும். சடங்கியலாக இறைவன் பிச்சை எடுக்க வந்தாலும் தமது சொத்துடைமை காரணமாக அவர் தங்கத் திருவோட்டினையே ஏந்தி வருகின்றார். இது சொத்துடைமையின் வெளிப்பாடாகும். இறைவனின் செல்வச் செழிப்பு இங்கு காட்டப்படுகின்றது.

*‘அப்பர், சம்பந்தர் காலத்திற்கு முன்னரே ஆகமரீதியாக ஒழுங்கு படுத்தப்பட்ட கோயில்களில் சில வழக்கங்கள் நடைமுறைக்கு வந்து விட்டன அவற்றுள் ஒன்று, கோயில்களில் கொண்டாடப் பெற்ற திருவிழாக்களாகும். திருவிழாக்களின் முக்கிய நிகழ்ச்சி ஊர்வலம் அல்லது நகர்வலம் என்பதாகும். துறவு நெறியின் வீச்சாலும் பெண்பற்றிய தாழ்வான பார்வையாலும் சிதைந்து போயிருந்த சமூக உளவியல், திருவிழாக்களாலும்*

*ஊர்வலங்களாலும் சீர் செய்யப்பட்டது'* என்பது தொ.பரமசிவன்(2005:15) கருத்து. இது வீதிஉலாக்களின் விளைவுகளில் ஒன்றாகும். இச்சடங்குக்கூறு பெருங்கோயில்களின் நிலவுடைமைப் பண்பினையும் அடையாளப்படுத்துகின்றது எனலாம்.

வீதிஉலா என்பது அரசனின் அதிகார அசைவாகும். பக்திஇயக்க வளர்ச்சியின் போது இந்த அதிகாரம் கோயிலுக்கும் பகிர்ந்தளிக்கப்பட்டது. 'கோயில்' என்ற சொல் சிலப்பதிகாரத்தில் அரசனது அரண்மனையையே குறித்தது. பக்தி இயக்க காலத்தில் அது தெய்வங்களின் வாழ்விடங்களைக் குறிப்பதாக வளர்ந்தது.

### 3.1.2. நாள்ஏர் பூட்டுதல்

பெருங்கோயில்களில் நிகழ்த்தப்படும் சடங்குகளில் 'நாள்ஏர் பூட்டுதல்' ஒன்றாகும். இதனை மக்கள் தமது வழக்கில் 'நல்ஏர் பூட்டுதல்' என்று குறிப்பிடுகின்றனர். 'நாள்ஏர் பூட்டுதல்' என்பது விவசாய வேலையைத் தொடங்கி வைக்கும் ஒரு சடங்காகும். இச்சடங்கில் ஏர்பூட்டி 'நிலம் உழுதல்' என்னும் நிகழ்வு இடம்பெறுவதால், இது நாள்ஏர் பூட்டுதல் என அழைக்கப்படுகின்றது. இச்சடங்கு ஆய்வுக் களப்பகுதிக்குட்பட்ட பெரும்பாலான கோயில்களில் வேளாண்பருவத் தொடக்கத்தில் ஆண்டுக்கு ஒரு முறையோ அல்லது இரு முறையோ நடத்தப்படுகின்றது. அதாவது ஏதேனும் ஒரு 'பூவில்'(வேளாண்பருவத்தில்) மட்டும் அல்லது இரு பூவிலும் இச்சடங்கு செய்யப்படுகின்றது. எடுத்துக்காட்டாக, தென்திருப்பேரை மகரநெடுங்குழைக்காதர் கோயிலில் இச்சடங்கு நடைபெறும் விதமாவது:

நாள்ஏர் அன்று காலை நல்லநேரத்தில் முதியவர் ஒருவர் கோயில் மண்டபத்தில் தேங்காய், பழங்கள் கொண்ட தட்டினைக் கோயில் அர்ச்சகரிடம் கொடுக்கின்றார். அவர் சந்தனம், குங்குமம், கற்பூரம்,

வெற்றிலை, ஆகியவற்றோடு விதைநெல்லையும் ஒரு பாத்திரத்தில் எடுத்துக்கொண்டு சகுனம் பார்த்து மேளதாளங்களுடன் கோயில் வயலுக்குச் செல்கின்றார். அங்கு 'கோயில் உழவர்கள்' என அழைக்கப்படும் கோயில் நிலத்து விவசாயிகளும், கோயில் நிலக்கண்காணிப்பாளரும் அர்ச்சகரை எதிர்நோக்கி இருக்கின்றனர். வயலின் வரப்பில் தேங்காய் உடைத்து கோயிலை நோக்கிக் கற்பூரம் ஏற்றி உழவரொருவர் வழிபாடு செய்கின்றார். பின்னர் விவசாயிகள் தங்களுக்குள் ஒருவருக்கு ஒருவர் சந்தனம் பூசுகின்றனர். பின்னர் உழவு மாடுகளுக்குச் சந்தனம் பூசி, குங்குமப் பொட்டு இடுகின்றனர். கோயில் உழவர் ஒருவர் ஏர்பூட்டி மூன்று 'சால்' உழவு செய்கிறார். (ஒரு 'சால்' என்பது வயலின் ஒரு வரப்பிலிருந்து அதன் எதிர்வரப்பு வரை உழுது செல்வதாகும்). அன்றைய நாள் சூல நம்பிக்கையின் அடிப்படையில் கிழக்கு மேற்காகவோ, வடக்குத் தெற்காகவோ உழப்படுகின்றது.

உழவு முடிந்தவுடன் வயல்வரப்பில் உழவர், கண்காணிப்பாளர் ஆகியோருக்கு அர்ச்சகர் வெற்றிலை, பாக்குடன் தேங்காய், பழம் கொடுத்து மரியாதை செய்கிறார். விதைநெல்லை உழவரிடம் ஒப்படைக்கின்றார். உழவர்கள் சகுனம் பார்த்து கோயில் பணியாளர்களை வழியனுப்பி வைக்க அவர்கள் மேளதாளங்கள் ஒலிக்காமல் கோயிலுக்குத் திரும்புகின்றனர். இதுவே சடங்கு நிகழும் முறையாகும். இச்சடங்கு குறித்த பல நம்பிக்கைகள் மக்களிடம் காணப்படுகின்றன.

நாள்ஏர் பூட்டுதல் சடங்கு கோயில்நிலத்தில் நடைபெற்ற பின்னரே நிலவுடைமையாளர்கள் தங்கள் வயல்களை உழ வேண்டும் என்பது பெரும்பாலான ஊர்களில் காணப்படும் ஒரு கட்டுப்பாடு ஆகும். இவ்வூரிலும் இக்கட்டுப்பாடு கடைப்பிடிக்கப்படுகின்றது. இக்கட்டுப்பாட்டில் நிகழும் நெகிழ்வுகள் தெய்வத்திற்கு எதிராகச் செய்யப்படும் குற்றமாக மக்களால் கருதப்படுகின்றது.

உடைமையாளர் தமக்குரிய ஒரு பணியினைத் தொடங்கி வைத்தல் நிலவுடைமையின் மரபாகும். இங்கு விவசாயத்தின் முதல் வேலையான 'நிலம்உழுதல்' என்னும் பணியைக் கோயில் சடங்கு என்னும் பெயரில் கோயில் தொடங்கி வைக்கின்றது. இதனை மீறுவது குற்றமாகவும், மீறாதிருப்பது ஊர்க்கட்டுப்பாடாகவும் எண்ணப்படுகின்றது. இது நிலத்தின் மீதான கோயிலின் அதிகாரத்தைக் காட்டுகின்றது.

### 3.1.3. நாள்கதிர் அறுத்தல்

பெருங்கோயில்களில் நடத்தப்படும் மற்றொரு சடங்கு 'நாள்கதிர் அறுத்தல்' என்பதாகும். கோயில் நிலத்தில் விளைந்த பயிரின்கதிரை அறுவடை செய்யும் நிகழ்வே 'நாள்கதிர் அறுத்தல்' ஆகும். இதனை 'அனுமதிச் சடங்கு' என்றும் அழைக்கலாம். இச்சடங்கு நாங்குநேரி, வானமாமலைப் பெருமாள் கோயிலில் பின்வருமாறு நிகழ்த்தப்படுகின்றது.

வருடத்தின் இரண்டு வேளாண்பருவத்திலும் இச்சடங்கு நிகழ்த்தப்படுகின்றது. இவ்வூரில் கோயிலுக்குரிய நிலங்களும், கோயிலுக்கு அல்லாத நிலங்களும் உள்ளன. இங்கு முன்னர் குறிப்பிட்டவாறு கோயிலில் 'நாள்ஏர் பூட்டுதல்' சடங்கு நடைபெற்ற பின்னரே ஊர் மக்கள் தங்கள் நிலங்களில் விவசாயப் பணியைத் தொடங்குகின்றனர். இதனால் கோயில் நிலமே முதலில் அறுவடைக்கு வருவது வழக்கம். கோயிலில் நாள்கதிர் சடங்கு நடைபெற்ற பின்னரே மக்கள் தங்களது வயல்களில் அறுவடை செய்கின்றனர். இதுவும் ஊர்க்கட்டுப்பாடு ஆகும்.

கோயில் வயல் விளைந்தவுடன் கோயில் உழவர் அதனை ஜீயரிடம் (கோயிலை மேலாண்மை செய்யும் பிராமணத் துறவி) தெரிவிக்கிறார். அவர் நாள்கதிருக்குரிய நல்ல நாள், நேரம் குறித்து அதனை அர்ச்சகரிடம் தெரிவிக்கிறார். இச்செய்தி ஒலிபெருக்கியின் மூலம் ஊர் மக்களுக்கு

அறிவிக்கப்படுகின்றது. நல்லநாள் அன்று அர்ச்சகர் மேள தாளங்களுடன் வயலுக்குச் செல்கிறார். அங்கு விளைந்த கதிருக்குக் கற்பூரம் ஏற்றி வழிபாடு செய்கிறார். உழவர் ஒரு கட்டுக் கதிர் அறுத்து அதனை மேள தாளங்களுடன் கோயிலுக்குக் கொண்டு வருகிறார். கோயில் மண்டபத்தில் இக்கதிர்க் கட்டு வைக்கப்பட்டு அதன் ஒரு சிறு பகுதி மட்டும் கோயில் கருவறைக்குள் எடுத்துச் செல்லப்படுகின்றது. பின்னர் கதிர்க்கட்டு கோயில் நெற்களஞ்சியத்தில் (நெல்சேரில்) சேர்க்கப்படுகின்றது.

தற்போதைய வேளாண்மையில் சிலநேரங்களில் கோயில் சாரா வெளியாரின் நிலம் முதலில் அறுவடைக்குத் தயாராகி விடுவதுமுண்டு. இச்சூழலில் பயிர் விளைந்த வயல்காரர் கோயில் நிலத்தில் இச்சடங்கு நடைபெறும் வரை பயிரை அறுவடை செய்யாமல் இருக்க முடியாது. அதே நேரத்தில் ஊர்க்கட்டுப்பாட்டை மீறி தனது வயலை அறுவடை செய்து விடவும் முடியாது. இவ்வாறான நேரங்களில் கோயில் சில சமரசங்களைக் கையாளுகின்றது.

கோயில் விளையாத தனது வயல் கதிரை மக்களுக்காக அறுவடை செய்வதில்லை. அதே நேரத்தில் கட்டுப்பாட்டை மீறி மக்கள் தங்களது சொந்த வயலை அறுவடை செய்யவும் அனுமதிப்பதில்லை. விளைந்த வயலின் நிலத்துக்காரர் தன் நிலம் அறுவடைக்குத் தயாராக இருப்பதை ஜீயரிடம் தெரிவிக்கின்றார். நிலவுரிமையாளர் ஒரு குறிப்பிட்ட தொகையைக் கோயிலுக்குக் கட்டுகிறார். அர்ச்சகர் அவ்வயலுக்குச் சென்று நாள்கதிர் சடங்கைச் செய்கின்றார். ஒலிபெருக்கியின் மூலம் இச்செய்தி அறிவிக்கப்பட்டு ஊரில் அறுவடை தொடங்க அனுமதி வழங்கப்படுகின்றது.

நிலத்தின் மீது தம்முடைய கட்டுப்பாட்டையும், கண்காணிப்பையும் நிலைநாட்டவே கோயில், 'நாள்ஏர்பூட்டுதல்' என்ற வேளாண் தொடக்கநிலைச் சடங்கினையும், 'நாள்கதிர் அறுத்தல்' என்ற அனுமதிச் சடங்கினையும்

நிகழ்த்துகின்றது. சிக்கல்கள் தோன்றும் போது கோயில்கள் நெகிழ்விற்கு உட்பட்டுத் தம்மைத் தகவமைத்துக் கொள்கின்றன. சில கோயில்களில் வேளாண் சடங்குகள் அதன் பரிமாணத்தை இழந்து சடங்கியல் எச்சமாக நடத்தப்படுகிறது.

திருவரங்கம் கோயிலில் நிலத்தைக் குத்தகைக்கு விடுதல் என்பது நடைமுறையாக இருந்து பின்னர் அது சடங்கியலாக நிகழ்த்தப்படுவதைத் தலவரலாறு பின்வருமாறு எடுத்துரைக்கிறது.

*'முன்பு கோயிலுக்குச் சொந்தமாயிருந்த கிராமங்களின் உரிமைத் தொடர்பு, இப்போது ஆண்டு தோறும் நிகழும் ஒருசடங்கின் அளவிலேயே எஞ்சி நிற்கின்றது. தமிழ் ஆண்டுப்பிறப்பின் முதல் நாளன்று, பரம்பரை முறையில் தெரிந்தெடுக்கப்படுகின்ற ஒரு பொருளாளர், அவ்விழாவுக்கெனத் தனியலங்காரம் செய்து வைக்கப்பெற்றுள்ள சுவாமியின் திருமுன்னிலையில் சென்று சுவாமிக்குரிய நிலங்களையும் கிராமங்களையும் ஒரு கற்பனைக் குத்தகைத்தாரருக்குக் குத்தகை விடுவது போன்று ஒரு கற்பனைச் சடங்கில் கலந்து கொள்கிறார். திருவரங்கநாதர் தான் மேற்குறித்த நிலங்களுக்கும், கிராமங்களுக்கும் இன்றும், இனி என்றும், உண்மையான உரிமையாளராகத் திகழவல்லவராவர் என்பதை, உறுதிப்படுத்தும் வகையில் இச்சடங்கு நிகழ்ந்து வருகின்றது'* (திருவரங்கத் திருக்கோயில் 1993:59).

கோயில்கள் நிலவுடைமையினைக் கொண்டுள்ள வரையில் இவ்வகையான சடங்குகள் சில நெகிழ்வுகளுடன் நடத்தப்படும் என்பது உறுதியாகின்றது.

### 3.1.4. **ஊடல் திருவிழா**

பெருங்கோயில்களில் இறைவனுக்கும் இறைவிக்குமிடையில் ஏற்பட்ட

பிணக்கு காரணமாக இருவரும் பிரிந்து நிற்பது போன்று சில சடங்குகள் நிகழ்த்தப்படுகின்றன. இதனை 'ஊடல் திருவிழா' என்பர். வைணவக் கோயில்களில் இத்திருவிழாக்கள் விருப்பத்துடன் நிகழ்த்தப்படுகின்றன. மக்கள் இத்திருவிழாக்களைப் 'பிரணயகலகம்', 'மட்டையடி உற்சவம்', 'கதவடைப்புத் திருவிழா' எனக்குறிப்பிடுகின்றனர்.

### 3.1.4.1. பிரணயகலகம்

ஆய்வுக்களமான ஆழ்வார்திருநகரி ஆதிநாதர் கோயில் தலபுராணம் இச்சடங்கினைப் 'பிரணயகலகம்' எனச் சுட்டுகின்றது. மக்கள் அதனைக் 'கதவடைப்புத் திருவிழா' என்று அழைக்கின்றனர். இறைவனும் இறைவியும் ஒருவருக்கொருவர் ஊடல் கொண்டு இருந்ததால் உலகம் படைப்பு இன்றி இருளில் மூழ்கியது என்பது தலபுராணச் செய்தியாகும். இச்சடங்கின் போது கோயில் கதவு ஒரு நாள் முழுவதும் அடைக்கப்படுவதால் எளிய அடியவர்கள் இதனைக் 'கதவடைப்புத் திருவிழா' என அழைக்கின்றனர். ஒவ்வொரு ஆண்டும் மார்கழிமாதம் திருஅத்யயன திருவிழாவின் இராப்பத்து பத்தாம்நாள் காலையில் இது சடங்காக நிகழ்த்தப்படுகின்றது.

திருவிழாவிற்கு முந்தையநாள் ஆதிநாதர் ஊரின் கடைசி வீதிவரை தாயார் இன்றி நகர்வலம் செல்கின்றார் (பிற சடங்குகளின் போது இறைவன் இவ்வாறான பகுதிகளுக்குச் செல்வதில்லை). அதிகாலையில் கோயிலுக்குத் திரும்பும் போது இறைவியான ஆதிநாயகி அவரைக் கோயிலுக்குள் வரவிடாமல் கதவினைப் பூட்டி விடுகின்றார். இறைவன் மூன்று முறை கோயில் கதவைத் தட்டித் திறக்க முயன்று, முடியாமல் போகவே கோயிலின் பின்புறமுள்ள அப்பன் சந்நிதியில் எழுந்தருளுகிறார். அன்று கோயில் மூலவருக்கோ, தாயாருக்கோ வழிபாடுகள் எதுவும் நடைபெறுவதில்லை (உலகம் இயக்கமின்றி இருந்தது என்பதை இச்செயல்

குறியீட்டுரீதியில் உணர்த்துகின்றது). அன்று மாலை தாயார் சந்நிதி அர்ச்சகர் பெருமாள் எழுந்தருளியுள்ள அப்பன் சந்நிதி சென்று அவரைக் கோயிலுக்கு அழைத்து வருகின்றார். கோயிலில் இரு தாயார்களும் வடக்கு நோக்கியும், பெருமாள் அவர்களைப் பார்த்து தெற்கு நோக்கியும் எதிரெதிராக இருக்குமாறு எழுந்தருளிப்புச் செய்யப்படுகிறார்கள். அர்ச்சகர்கள் அந்தந்தத் தெய்வங்களுக்கு அருகில் நின்று கொள்கின்றனர்.

தாயார் அர்ச்சகர்கள் பெருமாளின் அர்ச்சகரோடு வாதத்தில் ஈடுபடுகின்றார். பெருமாளின் அர்ச்சகர் தான் சென்று வந்த இடங்களைப் பொய்யாகப் பட்டியலிடுகின்றார். தாயார் சந்நிதி அர்ச்சகர்கள் இறைவன் போகக் கூடாத இடத்திற்குச் சென்று வந்ததால் அவரை ஏற்க இயலாது என வாதிடுகிறார்கள். (போகக் கூடாத இடம் என்பது இங்கு தேவதாசி வீட்டினையே குறிக்கின்றது). ஒவ்வொரு விவாதத்திற்கிடையிலும் பெருமாள், தாயார் ஆகிய இருவருக்கும் இடையில் பூப்பந்து(பந்துபோல் சுற்றப்பட்டுள்ள பூச்சரம்) வீசுதல் நடைபெறுகின்றது. தாயாரிடமிருந்து வீசப்படும் பந்து கோபம் காரணமாக வேகத்துடன் வீசப்படுகின்றது. இறைவனிடமிருந்து பந்து தயக்கத்துடன் மிதமான வேகத்தில் வீசப்படுகின்றது. இருவருக்கும் இடையில் சமரசத்தை ஏற்படுத்தும் விதமாக விவாதங்கள் தொடர்கின்றன. சமரசம் எற்பட்டதன் அறிகுறியாகத் தாயாரிடமிருந்து பூப்பந்து மிக நிதானமாக வீசப்படுகிறது. பின்னர் ஊடல் நீங்கி இருவரும் ஒன்றாக எழுந்தருளுகின்றனர்.

இறைவன் பரத்தை வீடு சென்றதால், இறைவி கோபம் கொண்டு கோயில் கதவினை அடைத்தார். இருவரும் வாக்குவாதத்தில் ஈடுபட்டனர். பின்னர் தாமே சமரசம் ஆயினர் என்பதே சடங்கு நிகழ்வாகும். *"வர்க்க சமுதாயத்தின் உடன் விளைவான தனிச்சொத்துடைமையின் தோற்றத்துடன் சமூகத்தில் பால் உணர்வுக் கட்டுப்பாடுகள் தோன்றலாயின. பெண்களுக்குப்*

*பல புருஷமணம் தடைசெய்யப்பட்டு, கற்பு பேணப்பட்டது என்பர். ஆனால் இது ஆண்களைப் பொறுத்த அளவில் பரத்தமை முறையையும் பெண்களைப் பொறுத்த அளவில் சோரநாயக முறையையும் கொண்டு வந்தது"* (1991:115) என கோ.கேசவன், சமூகத்தில் பரத்தமை தோன்றிய முறையை விளக்குகிறார். கோயில் என்பது தனிச்சொத்துடைமையைக் கொண்டுள்ள நிறுவனம் என்பதால் அங்கு இறைவன் பரத்தமை வீட்டிற்குச் செல்வது போன்று சடங்குகள் நிகழ்த்தப்படுகின்றன. திருவரங்கம் பெருமாள் கோயிலில் இச்சடங்கு நடைபெறும் விதத்தைக் 'கோயிலொழுகு' பின்வருமாறு கூறுகின்றது.

இறைவன் பரத்தை வீடு சென்றதால், இறைவி கோபம் கொள்வதான சடங்கு திருவரங்கம் கோயிலில் பங்குனி உத்திரத் தினத்தன்று (திருவிழாவின் ஒன்பதாம் நாள்) நடத்தப்படுகிறது. அன்று சுவாமி சார்பிலும் தாயார் சார்பிலும் இருதொகுதிப் புரோகிதர்களும் வாதப்பிரதிவாதங்கள் செய்யும் முறையில் பாடல்களைப் பாடி அபிநயம் பிடித்து நடிக்கின்றனர்(கோயிலொழுகு1993:64). உத்திரம் ஆறாம் திருநாள் அன்று இறைவன் உறையூர் நாச்சியார் வீட்டிற்குச் செல்வதே பரத்தை வீடாகக் கருதப்படுகிறது.

இதைப் போன்றதொரு சடங்கு ஆய்வுக்களமான நெல்லை மாவட்டத்து திருக்குறுங்குடி, அழகியநம்பி கோயிலில் *'மட்டையடி உற்சவம்'* என்னும் பெயரில் நிகழ்த்தப்படுகின்றது.

#### 3.1.4.2. **மட்டையடி உற்சவம்**

இச்சடங்கிற்கு முந்தையநாள் பெருமாளாகிய அழகிய நம்பிராயர் ஊரின் ஒதுக்குப்புறமான பகுதிகளுக்கு வீதிஉலா செல்கின்றார். இறைவன் திரும்பி வரும்போது இறைவி அவரைக் கோயில் கருவறைக்குள் வர

அனுமதிப்பதில்லை. கோயில் முன்மண்டபத்தில் பெருமாளும் தாயாரும் அலங்காரம் செய்யப்பட்டு நேர் எதிரே அமர்ந்திருக்குமாறு எழுந்தருளிப்பு செய்யப்படுகின்றனர். பெருமாளின் அர்ச்சகருக்கும், தாயாரின் அர்ச்சகருக்கும் இடையே வாக்கு வாதம் தொடங்குகின்றது. தாயார் அர்ச்சகர் பெருமாளின் அர்ச்சகரிடம் முன்தினம் கோயிலைத் திறந்தவர் யார்? அர்ச்சகர் யார்? பெருமாள் எங்கெல்லாம் சென்றார்? ஏன் தாயாரைச் சந்திக்கவில்லை? அவரை அழைத்துச் சென்றவர்கள் யார்? யார்? எனத் தொடர்ந்து பல கேள்விகளைக் கேட்கின்றார். அப்போது முன்தினம் கோயிலைத் திறந்த காணியாட்சி, அன்றைய நாள் அர்ச்சகர், சப்பரத்தைத் தூக்கிச் சென்றவர்கள் ஆகியோர் பெருமாளுக்கு அருகில் வந்து நிற்கின்றனர். பெருமாள் முன்தினம் சென்ற இடங்களையெல்லாம் அன்றைய நாட்பணியில் இருந்த அர்ச்சகர் பொய்யாகச் சொல்கின்றார். அவர் சொல்வதைத் தாயாரால் ஏற்றுக் கொள்ள இயலவில்லை. கோபம் கொண்ட தாயார், பெருமாளைப் பல்வேறு இடங்களுக்கு அழைத்துச் சென்றவர்களுக்குத் தண்டனை வழங்க முற்படுகிறார்.

தாயாரின் அர்ச்சகர் வாழைமட்டை, தென்னைஓலை ஆகிய இரண்டால் கலந்து பின்னப்பட்ட நீண்ட தடியைத் தேவதாசி மரபைச் சேர்ந்த முதிய பெண் ஒருவரிடம் கொடுக்கின்றார். அவர் அத்தடியைக் கொண்டு முந்தையநாள் பணியிலிருந்த பெருமாளின் அர்ச்சகர், சப்பரம்தூக்கிகள், காவலாளி, கோயில் சாவி வைத்திருக்கும் காணியாட்சி ஆகியோரின் இடுப்பில் அடிக்கின்றார் (காண்க:ஒளிப்படம் எண்.04). இந்நிகழ்வு பலமுறை நிகழ்த்தப்படுகின்றது. முடிவில் பெருமாளும் தாயாரும் சமாதானமாகி ஒன்றாக எழுந்தருளுகின்றனர். இச்சடங்கு காலை பத்து மணியளவில் தொடங்கி மாலை மூன்று அல்லது நான்கு மணிவரை நடைபெறுகின்றது.

### 3.1.4.3. மாமியார்வீடு செல்லுதல்

ஆய்வுக்களமான கல்லிடைக்குறிச்சி, ஆதிநாராயணன் கோயிலில் இத்திருவிழா, *'பெருமாள் மாமியார்வீடு செல்லுதல்'* என்னும் பெயரில் நிகழ்த்தப்படுகின்றது. இத்திருவிழா அன்று பெருமாள் கோயிலுக்கு அருகிலுள்ள குறிப்பிட்டதொரு தெருவிற்குச் செல்கின்றார். இது சிறியதொரு முடுக்காகும். இவ்விடத்தை 'மாமியார் சந்து', 'மாமியார் முடுக்கு' என்றே அப்பகுதி மக்கள் அழைக்கின்றனர். இறைவன் மீண்டும் கோயிலுக்குத் திரும்புகையில் கோயில் நுழைவாயிலில் தாயார் நின்றுகொண்டு இறைவனைக் கோயிலுக்குள் வரவிடாமல் தடுக்கின்றார். பின்னர் சமாதானம் கொண்டு கோயிலுக்குக்குள் அனுமதிக்கின்றார். இதுவே இக்கோயிலில் சடங்குநடைபெறும் விதமாகும்.

மாமியார் முடுக்கு என அழைக்கப்படும் அப்பகுதி முன்பு தேவதாசிகள் வாழ்ந்திருந்த பகுதி என ஊர் மக்கள் குறிப்பிடுகின்றனர். அது சிறியதொரு முடுக்காக இருப்பதும், அங்கு உயரமான பாழடைந்த வீடுகள் சில இருப்பதும் இதற்கான அடையாளங்களாக உள்ளன. இப்பகுதிக்கு இறைவன் சென்று வருவது பரத்தமை வீட்டிற்குச் சென்று வருவதாகக் கருதப்படுகின்றது.

இதுவரை பேசப்பட்ட மூன்று கோயில்களும் வைணவக் கோயில்களாகும். இவற்றில் முதல் இரண்டு கோயில்களில் இச்சடங்குகள் கலையாக நிகழ்த்தப்படுகின்றன. திருமேனிகளின் ஆடை மற்றும் அணிகல அலங்காரங்கள், பாவனைகளுடன் கூடிய நடித்தல், விவாதங்கள் செய்தல் ஆகியன சடங்குகளின் கூறுகளாக அமைகின்றன. இவை சடங்குகளைக் கலையாக மாற்றுகின்றன. கல்லிடைக்குறிச்சியில் இது சடங்காக மட்டும் நிகழ்த்தப்படுகிறது.

சைவக்கோயில்கள் இச்சடங்கினை இறைவன் *'தேவிடியாள் குடிசெல்லுதல்', 'தாசி வீடு செல்லுதல்'* என வெளிப்படையாகச் சுட்டுகின்றன. அடியவர்களும், கோயிலின் பிராமணர், பிராமணர் அல்லாத பணியாளர்களும் இச்சொல்லினையே பயன்படுத்துகின்றனர்.

திருநெல்வேலி பகுதியில் 'தேவதாசி' மரபினரே தேவரடியாள் என அழைக்கப்பட்டனர். *'இச்சொல் முதலில் கோயிலில் நடனமாடும், திருவலகிடும் பணியைச் செய்யும் மகளிரைக் குறிப்பதாக இருந்தது* (பி.எம்.சுந்தரம்: 2002:13). இவற்றில் தேவரடியார் என்பதே 'தேவிடியாள்' என வழங்கப்படுகின்றது. 'தாசி' என்பது இதே பொருளைக் குறிக்கும் மற்றொரு சொல்லாகும்.

### 3.1.4.4. தேவரடியார் வீடு செல்லுதல்

நெல்லை மாவட்டம் வீரவநல்லூர், பூமிநாதர் கோயிலில் மார்கழி மாதத் திருவிழாவின் ஆறாம்நாள் இறைவன் *'தேவரடியார் வீட்டிற்குச் செல்லுதல்'* என்னும் சடங்கு நிகழ்த்தப்பெறுகின்றது. அன்று பூமிநாதர் தம் இருப்பிடத்திற்கு வடதிசையில் அமைந்துள்ள *'வீரமங்கை'* என்னும் நாட்டார் தெய்வக் கோயிலுக்குச் செல்கிறார். அவ்விடத்தில் சிறிதுநேரம் தங்கிவிட்டுக் கோயிலுக்குத் திரும்புகின்றார். அப்போது மரகதவல்லி (இறைவி) கோயில் நுழைவாயிலில் நின்று பூமிநாதர் உள்ளே வருவதைத் தடுக்கின்றார். இனிமேல் இது போன்ற இடத்திற்குச் செல்வதில்லை என இறைவன் சத்தியமளித்து கோயிலுக்குள் செல்கின்றார். இதுவே சடங்கு நிகழ்த்துதல் ஆகும்.

சைவம் பரத்தமையை அங்கீகரித்த முறையினைக் கோயில் ஆய்வாளர்கள் பின்வருமாறு மதிப்பிடுகின்றனர். "*சைவம் நிலவுடைமை சார்ந்து வளர்ந்த மதம் என்பதை ஆர்.பானர்ஜி, ஜி.எஸ்.குரே போன்றவர்கள்*

*விரிவாகவே எடுத்துக்காட்டியுள்ளனர். எனவே நிலவுடைமை சார்ந்து வளர்ந்த பரத்தமை என்ற நிறுவனத்தைச் சைவ சமயம் கண்டிக்கவில்லை, மாறாகத் தேவரடியார், பதியிலார், உருத்திரகணிகையர், மாணிக்கத்தார், தளியிலார் என்ற பெயரோடு சோழ, பாண்டிய, அரசுகளின் எழுச்சிக் காலத்தில் பரத்தமை கோயிலோடு சேர்க்கப்பட்டது. தேவார மூவரில் ஒருவரான சுந்தரர் திருவாரூர்க் கோயிலில் ஆடு மகளிர் மரபில் வந்த பரவை நாச்சியார் என்ற பெண்ணைக் கண்டு காதல் மணமும் செய்து கொள்கிறார். இக்கதை தொடங்கி பல்வேறு வகையில் சைவ மரபுகள் பரத்தைமையை அங்கீகாரம் செய்கின்றன"* (தொ.பரமசிவன்:2001:160).

நிலவுலகில் நிலவுடைமையாளன் பாலியல் இன்பமடைய பரத்தமை என்ற கூறினைச் சமூகம் அனுமதித்துள்ளது. 'பரத்தமை' என்பது மணவுறவுக்கு வெளியே ஆண் பாலியல் இன்பம் பெற ஏற்படுத்தப்பட்டுள்ள ஓர் அமைப்பாகும்.

கோயில் குடும்பம் என்ற நிறுவனத்தைக் கட்டமைக்கும் நிறுவனமாகும். ஆகவே சமூகம் பரத்தமையை நிலவுடைமையாளனுக்கு அனுமதித்திருப்பது போன்று பெருங்கோயில்கள் இறைவன் பரத்தமை வீட்டிற்குச் செல்வது போன்ற சடங்குகளை நிகழ்த்துகின்றன. இது கோயில் ஒரு நிலவுடைமை நிறுவனம் என்பதை விளக்கிக்காட்டும் மற்றுமொரு சான்றாகும்.

### 3.1.5. முடிவுரை

நிலவுடைமை என்பது நிலத்தை மையமிட்ட அதிகாரமாகும். தொழிற்புரட்சிக்கு முன்னர் எல்லா நாடுகளிலும் உற்பத்தி என்பது நிலத்தை மையமிட்டே இருந்தது. பண்டப் பரிவர்த்தனை என்பது நிலத்தில் விளைந்த பொருட்களின் அடிப்படையிலேயே இருந்தது. அரசியல் அதிகாரம் நிலத்தின்

மீதான உரிமை என்பதாகவே அக்காலத்தில் இருந்தது. அரசியல் அதிகாரத்திற்குத் துணையான சமூகஅதிகாரம் நிலவுறவுகள்மீதே அமைந்திருந்தது. இத்தகைய சமூகத்தை 'நிலமானியச் சமூக அமைப்பு' எனலாம். அங்கு நிலத்தை அடிப்படையாகக் கொண்டு கற்பிக்கப்பட்ட மனித உறவுகள் நிலவின. நிலமானிய முறை உருவாக்கிய சமூக மதிப்பீடுகளே அறங்களாகக் கருதப்பட்டன. காலம், திசை ஆகியவை குறித்த நம்பிக்கைகள், வழக்காறுகள், தனிமனிதக் குணங்களாகக் கற்பிக்கப்பட்டவை ஆகியவை சமூக மதிப்பீடுகளின் பகுதியாக ஆயின. சபைகளில் நிகழ்த்தப்படும் சடங்குகள், வழக்காறுகள், புழங்குபொருட்கள், புழங்குமுறை இவையெல்லாம் அரசியல்-சமூக அதிகாரங்களைத் தக்கவைக்கின்ற அல்லது வளர்க்கின்ற முறையிலேயே ஆக்கப்பட்டுள்ளன. இந்த மதிப்பீடுகள் எல்லாம் சொற்களாலும், சடங்குகளாலும் தலைமுறை தலைமுறையாகச் செய்யப்பட்ட போது அது நிலமானிய மதிப்பீடாக இறுக்கம் பெற்றன. எனவே நிலவுடைமை என்பது தலைமுறை தலைமுறையாகத் தக்கவைக்கப்பட்டு வந்தது. நிலவுடைமை நிறுவனமான கோயில் அத்தகைய மதிப்பீடுகளைப் பாதுகாக்கும் அரணாக விளங்கியது. எனவே கோயில்களில் நிகழ்த்தப்படும் சடங்குகளில் நிலமானிய மதிப்பீடுகள் காணப்படுகின்றன எனலாம்.

## பகுதி இரண்டு

### 3.2. பிறவகைச்சடங்குகளும் உள்ளூர்மரபுகளும்

கோயில்களில் நிலவுடைமை சார்ந்த சடங்குகளோடு வேறுவகைச் சடங்குகளும் நடத்தப்படுகின்றன. இந்தச்சடங்குகள் நடத்தப்படுவதற்கான காரணத்தை விளக்கும் கதைகள், சொல்லாடல்கள், நம்பிக்கைகள் ஆகிய வழக்காறுகளை மக்கள் கொண்டுள்ளனர். இனி, அச்சடங்குகள் குறித்துக் காண்போம்.

#### 3.2.1. குறவன்கொண்டை

ஆழ்வார் திருநகரி நம்மாழ்வார் அவதரித்த தலமாகும். இத்தலத்தை அடியவர்கள் 'ஆழ்வார் கோயில்' என்றே அழைக்கின்றனர். ஆழ்வார் என்பது நம்மாழ்வாரைக் குறிப்பதாகும். இங்கு நம்மாழ்வாருக்குத் தனிச் சந்நிதி அமைக்கப்பட்டுள்ளது. நம்மாழ்வாருக்கு நாள்தோறும் காலையில் முதல் திருமஞ்சனம் முடிந்தவுடன் *'குறவன் கொண்டை சாத்துதல்'* என்னும் சிறுசடங்கு நிகழ்த்தப்படுகிறது. 'குறவர்' என்போர் தமிழ்ச் சாதியத் திரளில் ஒருவராவர். இவர்களை எட்கர் தர்ஸ்டன் *'அட்டவணைப்படுத்தப்பட்ட மலையின மக்களாகப் பதிவுசெய்கிறார்'* (1987:Vol IV:123). கோயில் சொல்லாடலில் 'குறவன் கொண்டை' என்பது தலையணி ஆகும். இது குறவர் சாதிய ஆண்மக்கள் தங்கள் தலையில் இடும் கொண்டை போன்று வடிவமைக்கப்பட்டுள்ளது. இதுவே நாள்தோறும் நம்மாழ்வாருக்கு அணிவிக்கப்படுகின்றது. இச்சடங்கிற்கான கதை ஒன்று இப்பகுதி மக்களிடம் வழக்கிலுள்ளது.

*'இசுலாமியர் படையெடுப்பின் போது, நம்மாழ்வார் திருமேனியின் அழகில் மயங்கிய இசுலாமியர் ஒருவர் அதனைத் திருட முற்பட்டார். குறவர் ஒருவர் இதனை அறிந்து காட்டுவழியில் அவரிடமிருந்து*

*நம்மாழ்வாரைக் காப்பாற்றி, அவருக்குத் தாம் உண்ணும் தேனும், தினைமாவும் படைத்து வழிபட்டு வந்தார். படையெடுப்பு நின்றவுடன் நம்மாழ்வாரை இத்தலத்தில் சேர்த்தார். அதன் நினைவாக நாள்தோறும் சிறிது நேரம் நம்மாழ்வாருக்குக் குறவன் கொண்டை அணியப்படுகின்றது'* என்பது அக்கதையாகும்.

நாட்டார் நினைவு என்பது குறுகிய காலத்திற்குரியதாகும். அதனால் ஒரு நிகழ்வை ஏதேனும் ஒரு காலத்தோடு இணைத்துச் சொல்வது நாட்டாரின் வழக்கம் ஆகும். சிலைதிருட்டு, சிலைஉடைப்பு ஆகியனவற்றை மக்கள் எப்போதும் இசுலாமியரோடு இணைத்துப் பேசுகின்றனர். ஆழ்வார் திருநகரி நம்மாழ்வார் திருமேனியை யாரோ ஒருவர் திருடிச் செல்ல அதனைக் குறவர் இனமக்கள் தடுத்திருக்கலாம். இது உண்மையான நிகழ்வாகக்கூட இருக்கலாம். ஆனால் அதனை இசுலாமியப் படையெடுப்போடு இணைத்தல் என்பது பொதுப்புத்தியின் விளைவாகும்.

### 3.2.2. தேன், தினைமாவு படைத்தல்

மேற்குறிப்பிட்ட கதையின் நினைவாக குறவர்கள் உண்ட தேனும் தினை மாவும் நம்மாழ்வாருக்குப் படைக்கப்பட்டன. இப்பழக்கம் பல நூற்றாண்டு காலம் வரை நீடித்தது. ஆனால் தற்போது வழக்கில் இல்லை எனக் கோயில் பணியாளர்கள் குறிப்பிடுகின்றனர். படைக்கப்பட்ட உணவு அதன் செயற்பாட்டுத் தன்மையை இழந்த போது கோயில் அச்சடங்கினை நடைமுறையிலிருந்து நீக்கி விட்டது எனலாம்.

### 3.2.3. வெந்நீர்த் திருமஞ்சனம்

*'திருக்குருகூரில் (ஆழ்வார் திருநகரியில்) ஆதிநாதப்பெருமாள் திருக்கோவில் அருகேயுள்ள ஒரு புளியமரத்தின் கீழே மாறன்(நம்மாழ்வார்) உணவின்றி நீரின்றிக் கண்மூடிக்கிடந்தவாறு காற்றை உணவாக உண்டு*

*தமது வாழ்வின் முதல் பதினாறு பிராயத்தைக் கழித்தார்'* (ஆ.சீனிவாசராகவன்: 1996:12) என்பது வைணவமரபுக் கதையாகும். இக்கதை நம்மாழ்வார் இத்தலத்தில் சிறு குழந்தையாக வாழ்ந்தார் எனக்கூறுகின்றது. தமிழகத்தில் கார்த்திகை, மார்கழி, தை, மாசி, பங்குனி ஆகிய மாதங்கள் குளிர் மாதங்களாகும். 'மாசிப் பனி மச்சு(மாடி) துளைக்கும்', 'தைப் பனி தரையைத் துளைக்கும்' என்பது பருவகாலம் குறித்த சொல்லடை ஆகும். இம்மாதங்களில் பச்சிளம் குழந்தைகளை வெந்நீரில் குளிப்பாட்டுவது மக்களின் வழக்கமாகும். இத்தலத்து நம்மாழ்வாரும் வைணவக்கதை மரபுகளின்படி சிறு குழந்தை என்பதால், அவருக்கு இம்மாதங்களில் மிதமான வெந்நீரால் திருமஞ்சனம் செய்யப்படுகின்றது.

*புராணத்தின் பண்புகளில் ஒன்று அதனை மக்கள் உண்மையானதாகவும், புனிதமானதாகவும் கருதுவதாகும்* (லூர்து.தே.1988:141). புனிதர்கள் குறித்த புராணக்கதையினை நினைவுபடுத்தவும், நினைவுகளில் பேணிக்கொள்ளவும் புராணமரபிற்கேற்ப கோயில்களில் இதுபோன்ற சடங்குகள் நிகழ்த்தப்படுகின்றன.

## 3.2.4. குடும்ப அமைப்புச் சடங்குகள்

### 3.2.4.1. திருக்கலியாணம்

பெருங்கோயில்களில் பரவலாக நடத்தப்படும் சடங்குகளில் ஒன்று திருக்கலியாணம் ஆகும். இச்சடங்கு ஒவ்வொரு ஆண்டும் ஐப்பசி மாதம் நிகழ்த்தப்படுகிறது. இது கோயிலின் பொருளாதார நிலைக்கு ஏற்ப சிறு சடங்காகவோ அல்லது பெரும் திருவிழாவாகவோ அமைகின்றது. கோயில் கருவறை, அதற்கென உருவாக்கப்பட்டுள்ள மண்டபங்கள், கோயில் வளாகத்திற்கு வெளியேயுள்ள திறந்தவெளி ஆகிய இடங்களில் ஏதேனும்

ஒன்றில் இச்சடங்கு நிகழ்த்தப்படுகிறது. வருவாய் குறைந்த கோயில்களில் அம்மனுக்குப் புத்தாடைகள் உடுத்தி 'பொட்டுத் தாலி' எனப்படும் சிறிய தாலியைக் கட்டும் நிகழ்வாக இச்சடங்கு அமைகின்றது. இது ஒரு வகையாகும். கோபாலசமுத்திரம் கைலாசநாதர், கருபந்துறை அழியாபதி ஆகிய கோயில்கள் இவ்வகைக்கு உதாரணங்களாம்.

பத்தமடை, வீரவநல்லூர் போன்ற ஊர்களில் கோயில் வளாகத்திற்கு அருகிலுள்ள திறந்த வெளியில் 'தட்டுப்பந்தல்' என அழைக்கப்படும் உயர்ந்த பந்தலிட்டு இச்சடங்கு நிகழ்த்தப்படுகின்றது. அங்கு அம்மனையும் சாமியையும் சப்பரங்களில் எழுந்தருளச் செய்கின்றனர். பின்னர் 'தாலிகட்டுதல்' நடைபெறுகின்றது. இது மற்றொரு வகையாகும்.

நெல்லையப்பர், குற்றாலநாதர், தென்காசி காசிவிசுவநாதர் போன்ற கோயில்களில் அச்சடங்கு பெரும் திருவிழாவாக நடத்தப்படுகின்றது. இதற்கு கோயிலுக்கு அருகிலுள்ள ஊர்க்குடிகள் பெரும் எண்ணிக்கையில் கூடுகின்றனர். இது மூன்றாம் வகையாகும். ஒவ்வொரு கோயில் நிகழ்த்துதல்களிலும் உள்ளூர் மரபுகள் கடைபிடிக்கப்படுகின்றன. நெல்லையப்பர் கோயிலில் இச்சடங்கு நிகழ்த்தப்படும் முறையாவது:

திருக்கலியாணத்திற்கு முந்தையநாள் நகரின் தெற்குப்பகுதியில் அமைந்துள்ள 'காட்சி மண்டபம்' என்ற இடத்திற்குக் காந்திமதியம்மன் தவமிருக்க வருகிறார். அங்கு அணிகலன்கள் அணியாமல், வெள்ளை நிற ஆடை உடுத்தி (காண்க: ஒளிப்படம் எண்.06.) நெல்லையப்பரைக் காணத் தவம் செய்கிறார். தவத்தின் விளைவாக மறுநாள் இறைவனான நெல்லையப்பர் காந்திமதியம்மனுக்குக் காட்சிகொடுக்க வருகிறார். பின்னர் இருவரும் மண்டபத்திற்கு அருகிலுள்ள தனிப்பந்தலில் எழுந்தருளுகின்றனர். அங்கு இருவருக்கும் திருக்கலியாணம் நடைபெறுகிறது. இருவரும்

கோயிலுக்குத் திரும்புகின்றனர். அப்போது வழியில் அமைந்துள்ள சாதிய ரீதியிலான மண்டபங்களில் மக்கள் திரளாக நின்று தேங்காய் உடைத்தும், அம்மனுக்குப் பட்டு சாத்தியும் வழிபடுகின்றனர். இச்சாதிய மண்டபங்கள் ஆசாரி சாதி தொடங்கி நாடார், நாவிதர், வண்ணார், செட்டியார், ஆயிரம் வைசியச் செட்டி, பிள்ளைமார் எனச் செல்கின்றன. சப்பரங்கள் ரதவீதியை அடைந்தவுடன் துணிக்கடைக்காரர்கள் அம்மனுக்குப் பட்டு, தாலி ஆகிய பொருட்களை வழங்குகின்றனர். இவ்வாறாக, காலை 12 மணியளவில் புறப்படும் சப்பரம் இரவு 11-12 மணியளவிலேயே கோயிலை அடைகின்றது. அதாவது சுமார் இரண்டு கி.மீ. தொலைவைக் கடக்க 12 மணி நேரத்தை எடுத்துக் கொள்கின்றது. இத்திருவிழா குறித்த முரணான கருத்து ஒன்று இப்பகுதி மக்களிடம் வழக்கிலுள்ளது. அதாவது திருமணத்தில் தடை ஏற்பட்டது என்ற கருத்து மக்களிடம் காணப்படுகிறது.

முற்காலத்தில் ஒருவர் தும்மியதால் இறைவனது திருமணம் நின்று விட்டதாகவும், அதன் நினைவாக இன்றும் அம்மன் அர்ச்சகர் தாலி கட்டும் போது தாமே மூன்று முறை வலுக்கட்டாயமாகத் தும்மி ‘கலியாணம் அடுத்த ஆண்டு நடைபெறும்’ எனக் கூறுவதாக மக்கள் கருதுகின்றனர். ஆனால் நடைமுறையில் கோயில் சடங்கில் இவ்வாறாகத் திருமணத் தடை ஏற்படுவதில்லை. நடைபெறாத திருமணத் தடையை நடைபெற்றது போன்ற கருத்தினை மக்கள் கொண்டுள்ளனர். திருமணத்திற்குத் தடை ஏற்பட்டதை ஒரு அபசகுனமாகக் கருதாமல் அடுத்த ஆண்டு கலியாணத்தைக் காணலாம் என்ற மனநிலையுடன் மக்கள் வீடு திரும்புகின்றனர். இது பெருங்கோயில் சடங்கு ஒன்றினைத் தொடர்ந்து பல ஆண்டுகள் காண்பதற்காக மக்கள் மனதளவில் ஏற்படுத்திக் கொண்ட தந்திரமாகும். இத்தந்திரமே இப்பகுதி மக்கள் மீண்டும் மீண்டும் இச்சடங்கில் பங்கேற்க வழிவகுக்கின்றது.

மறுநாள் அதிகாலையில் இறைவனுக்கும் இறைவிக்கும் அம்மன் சந்நிதியில் வைத்துத் தாலி கட்டுதல் என்னும் சடங்கு நடத்தப்படுகிறது. இதில் பிராமணச் சாதிப் பெண்கள் மட்டும் மிகக் குறைந்த அளவில் பங்கெடுக்கின்றனர். 'காட்சிகொடுத்தலின்' போது ஊர்க்குடிகள் பெருமளவில் பங்கேற்கின்றனர். தாலிகட்டுதல் 'கோயில் சடங்காகவும்' காட்சிகொடுத்தல் 'ஊர்த் திருவிழாவாகவும்' நிகழ்த்தப்படுகின்றன. இத்திருவிழா குறித்த நம்பிக்கைகள் மக்களிடம் காணப்படுகின்றன.

சில காலங்களுக்கு முன்னர் வரை இத்திருவிழாவிற்குப் புத்தாடை எடுக்கும் வழக்கம் மக்களிடம் இருந்துள்ளது. அன்று மக்கள் புலால் உணவு உண்பதில்லை. திருமணமான பெண்ணைத் திருவிழாக் காலத்தில் தாய் வீட்டார் விருந்துக்கு அழைக்கின்றனர். ஆனால் அவர்களை காட்சிகொடுத்தல் சடங்கினைக் காண அழைத்துச் செல்வதில்லை. வேளாண்மைத் தொழிலில் ஈடுபடும் சாதியார் அன்று உணவுக்காக நெல் அவிப்பதில்லை. செட்டியார் சாதியார் எள் ஆட்டி எண்ணெய் எடுப்பதில்லை.

சைவ, வைணவ மதங்கள் சமணம், பௌத்தத்திற்கு எதிராக எழுந்த மதங்களாகும். இவை அவைதீக மதங்களின் துறவுநிலையை எதிர்த்தன. கணவன், மனைவி, குழந்தைகள் என்ற உறுப்பினர்களைக் கொண்ட 'குடும்பம்' என்ற அமைப்பை ஆதரித்தன. மதங்கள் தம்முடைய துணை நிறுவனமான பெருங்கோயிலில்களினூடாக இக்கருத்தினை வெளிப்படுத்தின. இதன் ஒரு முறையாக இறைவனைக் குடும்ப உறவுக்குள் கொண்டு வந்தன. கோயிலில் 'பள்ளியறை' என்ற கட்டடஅமைப்பை உருவாக்கின. தெய்வங்கள் திருமணம் செய்து கொள்வது போன்றும் இறைவியர் கருவுற்றிருப்பது போன்றும் சடங்குகளை நிகழ்த்துகின்றன.

### 3.2.4.2. சீர்வரிசை

மணமான பெண்ணிற்கு அவளுடைய தாய் வீட்டிலிருந்து வழங்கும் பொருட்களே 'சீர்வரிசை' என அழைக்கப்படுகின்றன. திருமணத்தன்று மணமகளுக்குத் தாய் வீட்டிலிருந்து வழங்கிய சீர்வரிசைப் பொருட்களைப் பார்வைக்கு வைக்கும் வழக்கம் தமிழகத்தில் சில சாதியாரிடம் இன்றும் காணப்படுகின்றது. இதனை 'ஒலிசை' என அழைக்கின்றனர். மணமான பெண்ணிற்குத் தைப் பொங்கல் திருவிழாவில் தாய்வீட்டிலிருந்து வழங்கும் சீர்வரிசை தென்மாவட்டங்களில் 'பொங்கல்படி' என அழைக்கப்படுகின்றது. இச்சமூகக்கட்டுகள் 'கனுஉற்சவம்', 'சீர்வரிசை கொடுத்தல்' என்னும் பெயரில் வைணவக் கோயில்களில் சடங்காக நிகழ்த்தப்படுகின்றன.

#### 3.2.4.2.1. கனுஉற்சவம்

'கனுஉற்சவம்' என்பது சீர்வரிசைச் சடங்காகும். தைப்பொங்கல் நாளுக்கு மறுநாளான 'மாட்டுப்பொங்கல்' தினத்தன்று தாயார் தனியாக வீதிஉலா வருகின்றார். அப்போது அடியவர்கள் அவருக்கு மஞ்சள் குலையைக் காணிக்கையாக (சீர்) வழங்குகின்றனர். ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் கோயிலில் இச்சடங்கு பின்வருமாறு நிகழ்த்தப்படுகின்றது:

இச்சடங்கன்று கோயில் தாயாரான 'குருகூர் நாச்சியார்' கோயிலிருந்து ஜீயர் திருமாளிகைக்குச் செல்கின்றார். ஜீயர் திருமாளிகை தாயாருக்குத் தாய்வீடாகக் கருதப்படுகின்றது. அங்கு அவருக்கு வழிபாடுகள் செய்யப்படுகின்றன. தாயாருக்கு ஜீயர் மஞ்சள் குலை, அரிசி, *சித்ரான்னங்களை* ஆகியனவற்றைச் சீதனமாகக் கொடுத்து, அவரைக் கணவன் வீட்டிற்கு (கோயிலுக்கு) அனுப்பி வைக்கிறார். தாய் வீட்டிலிருந்து பெற்ற பொருட்களைக் கணவனிடம் (பெருமாளிடம்) சேர்ப்பிப்பது போன்று அவை கோயிலில் பெருமாள் எழுந்தருளியிருக்கும் இடத்திற்கு எடுத்துச்

செல்லப்படுகின்றன. இதுவே பெரும்பாலான பெருமாள் கோயில்களில் கனுஉற்சவம் நடத்தப்படும் முறையாகும்.

### 3.2.4.2.2. பிரம்மோற்சவ சீர்வரிசை

நாங்குநேரி வானமாமலைப் பெருமாள் கோயிலில் 'சீர்வரிசை கொடுத்தல்' என்னும் சடங்கு சித்திரை மாதம் பிரம்மோற்சவத் திருவிழாவின் ஒன்பதாம் நாள் காலையில் நிகழ்த்தப்படுகின்றது.

இச்சடங்கன்று ஜீயர் மடத்திற்கருகிலுள்ள திண்ணையில் வெள்ளிப் பாத்திரங்களான பானை, சட்டி, நாழி (அளவுகருவி), சமையல்பாத்திரங்கள், பலசரக்குப் பொருட்கள், காய்கறிகள், பருப்பு வகைகள், உப்பு ஆகியன அடியவர்களின் பார்வைக்காக வைக்கப்படுகின்றன. தாயார் ஸ்ரீவரமங்கை அவ்விடத்திற்குச் சப்பரத்தில் எழுந்தருளி, சீர்பொருட்களைப் பார்வையிடுகின்றார். அப்போது தாயார் எழுந்துள்ள சப்பரத்தை விரைவாகக் கொண்டு செல்கின்றனர். (மக்கள் தங்களுக்கிடையில் தாயார் ஏதோ கோபத்துடன் செல்வதாகக் கூறுகின்றனர்). ஜீயர் சார்பாக அர்ச்சகர் ஒருவர் தாயாரை நோக்கிச் சென்று, சமாதானம் பேசி தாயாரை மீண்டும் ஜீயர் மடத்திற்கு அழைத்து வருகிறார். சீர்வரிசையில் குறைவாக இருப்பதாகத் தாயார் கோபித்துக் கொண்ட கறிவேப்பிலை இப்போது சற்று அதிகமாக வைக்கப்படுகின்றது. தாயார் ஜீயர் மடத்தில் தங்குகிறார். மாலையில் தாயார் மீண்டும் அவரது இடத்திற்கு எடுத்துச்செல்லப்படுகின்றார்.

ஒரு மகள் தனது தாய்வீட்டுச் சீர்வரிசையில் கறிவேப்பிலை குறைவாக இருந்ததற்காகக் கோபப்பட்டுச் செல்வது போன்று இச்சடங்கு நிகழ்த்தப்படுகின்றது. 'கறிவேப்பிலை' என்பது விலைமலிவான, விரைவில் காய்ந்து போகக் கூடிய, சமையலில் வாசனைக்காக மட்டும் பயன்படுத்தப்படும் ஒரு பொருள் ஆகும். சீர்வரிசை என்பது ஒரு, 'கட்டாய

நடைமுறை' என்பதை இச்சடங்கு எடுத்துரைக்கிறது. அதில் குறை கண்டு கோபப்படுவதற்கான உரிமையும் பெண்ணிற்கு உண்டு என்பதை இச்சடங்கு வெளிப்படுத்துகிறது.

நமது சமூகம் ஆணாதிக்கச் சமூகமாகும். ஆணாதிக்கச் சமூகத்தில் குடும்பத்தின் சொத்துக்கள் அனைத்தும் ஆண்களுக்கு மட்டுமே உரிமையுடையனவாகும். அவை பெண்களுக்கு மறுக்கப்பட்டுள்ளன. *'பெண்ணுக்குச் சொத்துரிமை மறுக்கப்பட்ட சமூக அமைப்பில் பெண் தனக்குரிய பங்கினைத் திருமணத்தின் போது நகைகளாகவும் பின்னர் 'சீர்வரிசை' என்ற பெயரிலும் தொடர்ந்து பெற்றுக்கொள்ள முயல்கிறாள். அப்பொழுதும் நிறைவடையாது பிறந்த வீட்டிலிருந்து பெண் எடுத்தோ, பிறந்த வீட்டுக்குப் பெண் கொடுத்தோ தன் சொத்துடைமை உணர்வை நிறைவுசெய்து கொள்ளப்பார்க்கிறாள்'* என்கிறார் தொ.பரமசிவன் (2001:163).

### 3.2.4.3. **சீமந்தம் / வளைகாப்பு**

கருவுற்றிருக்கும் பெண்ணிற்குக் கருவுற்ற ஏழு அல்லது ஒன்பதாம் மாதத்தில் செய்யப்படும் சடங்கு 'வளைகாப்பு' ஆகும். இதனைச் 'சீமந்தம்' என்றும் மக்கள் அழைக்கின்றனர். 'சூல்வளையல் அணிவிப்பதும்' 'மடிநிறைத்தலும்' இச்சடங்கின் முக்கிய நிகழ்வாகும். இச்சடங்கின் போது கருவுற்றிருக்கும் பெண் அன்றைய சூலதிசைக்கு ஏற்ப அமரவைக்கப்பட்டு முதலில் 'நாத்தனார்' உறவுடையவர்களும் பின்னர் மங்கலப்பெண்களும் அவளுக்குச் சூல்வளையல்களை அணிவிக்கின்றனர்.

இதனை அடுத்த நிகழ்வாகப் பெண் உடுத்தியுள்ள சேலை முந்தானையில் விருந்தினர்கள் கொண்டு வந்த தின்பண்டங்கள் பொதியப்படுகின்றன. இதனை 'மடிநிறைத்தல்' என அழைக்கின்றனர். இந்த நிறைந்தமடியுடன் கருவுற்றபெண் தன் தாய் வீட்டிற்குச் செல்கிறாள்.

கருவுற்ற பெண்ணை உறவினர்கள் தட்டை, சீடை, முருக்கு, அதிரசம் போன்ற சிறுவகைத் தின்பண்டங்களுடன் பார்க்க வருகின்றனர். இதைப் போன்ற செயல்முறைகளுடன் சைவக்கோயில்களில் அம்மனுக்கு 'வளைகாப்புச் சடங்கு' நிகழ்த்தப்படுகின்றது.

நெல்லையப்பர் கோயிலில் இச்சடங்கு ஒவ்வொரு ஆண்டும் 'ஆடிமாத பூரத் திருவிழா'வின் மூன்றாம் நாள் தொடங்கி எட்டு நாட்கள் மாலைநேரத்தில் ஆயிரங்கால் மண்டபத்தில் நடத்தப்படுகின்றது. (இக்கோயிலில் திருக்கலியாணம் ஐப்பசி மாதம் நடைபெறுகின்றது. அதிலிருந்து ஒன்பதாவது மாதமான ஆடி மாதம் இச்சடங்கு செய்யப்படுகின்றது). இச்சடங்கின் போது ஊற வைத்து முளைகட்டிய பச்சைப்பயிறு (பாசிப்பயிறு) அம்மனது வயிற்றில் பட்டுத் துணியில் கட்டப்பட்டு அவர் கருவுற்றிருப்பது போன்று அலங்காரம் செய்யப்படுகிறார்.(காண்க ஒளிப்படம் எண்:03) அவருக்குச் சூல்வளையல்கள் அணிவிக்கின்றனர். அடியவர்கள் அம்மனுக்குப் பூவும், வளையல்களும் வழங்கி வழிபடுகின்றனர். பிராமணப் பெண்கள் தங்கள் வீடுகளிலிருந்து சீடை, அதிரசம், முருக்கு, போன்ற தின்பண்டங்களைக் கொண்டு வந்து அம்மனுக்குப் படைக்கின்றனர். வழிபாடுகள் முடிவடைந்தவுடன் அம்மன் சப்பரம் மிக மெதுவாகத் தூக்கப்பட்டு சாமி சந்நிதிக்கு எடுத்துச் செல்லப்படுகின்றது. அங்கு 'படிகளைதல்' நடைபெறுகிறது. (*படிக்கோலம் - இயற்கையான புனைவு, படிகளைதல் - புனைவை நீக்குதல் எனலாம்* (சு.வேங்கடராமன்:2002:114)). இது நிறைவு பெற்றவுடன் அம்மன் வயிற்றில் வைத்துக் கட்டப்பட்ட பச்சைப்பயிறு அடியவர்களுக்குப் பிரசாதமாக வழங்கப்படுகின்றது. இத்திருவிழாவின் முதல்நாள் கட்டளைதாரர் கம்பர் (இசைகாரர்)சாதியினர். அவர்களைத் தொடர்ந்து ஆசாரியார், பிள்ளைமார் எனத் தொடர்ந்து திருவிழாவின் பத்தாம் நாள் வரை இச்சடங்கு நடத்தப்படுகின்றது.

கோபாலசமுத்திரம் காசிவிசுவநாதர் கோயிலில் விசாலாட்சி அம்மனுக்கு இதைப் போன்ற சடங்கு ஆண்டில் ஒரு நாள் மட்டும் நிகழ்த்தப்படுகின்றது. இது வருவாய் குறைந்த கோயிலாகும்.

ஊற வைத்த பாசிப்பயிற்றினை அம்மன் வயிற்றில் கட்டுதல் 'ஒத்த மந்திரச் செயல்பாடாகும் (imitative or mimetic magic). இது 'ஒத்தது ஒத்ததை உருவாக்கும்' என்ற மந்திரத்தின் அடிப்படையில் செய்யப்படுகின்றது. உலகின் பல்வேறு பகுதிகளில் சேகரித்த தரவுகளின் அடிப்படையில் மந்திரம் பின்வரும் இரண்டு கோட்பாடுகளைக் கொண்டுள்ளது என்கிறார் பிரேசர் (Frazer:1976:52-53).

*'1.ஒத்தது ஒத்ததை உருவாக்குகின்றது*

*2.ஒரு தடவை தொடர்பு கொண்டது எப்போதும் தொடர்பு கொண்டிருக்கும்'*

முதல் வகையில் ஏற்படவேண்டிய விளைவும் அதனை அடையச் செய்யப்படுகின்ற செயலும் ஒத்திருக்கும் என்கிறார் பிரேசர். ஊற வைத்த பயிர் நன்றாக முளைவிட்டு வளரக்கூடியது. அதே போன்று அம்மனின் (காந்திமதி, விசாலாட்சி) வயிற்றில் வளரும் கருவும் நன்றாக வளர வேண்டும் என்பதற்காக இவ்வாறு சடங்கு செய்யப்படுகிறது எனலாம். அம்மனின் வயிற்றில் கட்டப்பட்ட பயிறு நன்றாக முளைவிட்டு வளருவது போன்று அதனை உண்ணும் அடியவர்களின் வயிற்றிலும் குழந்தைகள் வளரும் என்ற உணர்வில் குழந்தை இல்லாத பெண்கள் இப்பயிற்றை பிரசாதமாகக் கருதுகின்றனர்.

பெருங்கோயில்கள் சமண பௌத்தத் துறவுநெறிக்கு மாற்றாகக் குடும்பம் என்ற அமைப்பை ஆதரிக்கும் நிறுவனங்களாகும். இந்த முயற்சியின்

மற்றொரு புள்ளியாக திருமணம், வளைகாப்பு போன்ற சடங்குகள் பெருங்கோயில்களுக்குள் நிகழ்த்தப்படுகின்றன.

### 3.2.5. அரசதிகாரச் சடங்குகள்

*'கோயில்களின் அன்றாட அலுவல்களில் துணைபுரிதல், கோயில்களின் வருவாயை மிகுத்தல், கோயில்களின் உற்பத்திச் சக்தியைப் பெருக்குதல், கோயில்களை எதிர்ப்போரைத் தடுத்தல், கோயில் என்ற பொது நிறுவனத்தைக் காத்தல், கோயிலின் நிலவுடைமை நலன்களைப் பேணுதல் என்று அரசின் பங்கு பல்வேறு முனைகளிலும் இருந்துவந்ததை நாம் தெளிவாகக் காணமுடியும்'* (2004:30) எனக் கோயிலை அரசு பேணிக்காத்ததை மே.து.ராசுகுமார் விளக்குகிறார். கோயில்கள் அரசதிகாரத்தின் துணைகொண்டு வாழ்ந்ததோடு அதன் துணை நிறுவனமாகவும் செயல்பட்டன. இதன் காரணமாக பெருங்கோயில்களில் அரசதிகாரச் சடங்குகள் நிகழ்த்தப்படுகின்றன.

#### 3.2.5.1. செங்கோல் வழங்குதல்

கோயில் திருவிழா நடைமுறைகளான கொடியேற்றம், தெய்வங்களின் ஆடை, அணிகலன்கள், வீதிஉலாக்கள் போன்றவை அரண்மனைச் செயல்பாடுகள் போன்று இருப்பதை முன்னர் கண்டோம். அதன் மற்றொரு வடிவமான 'செங்கோல் வழங்கு விழா' கோயில்களில் நடத்தப்படுவதைக் காண்போம்.

'செங்கோல்' என்பது அரசநீதியோடு தொடர்புடையதாகும். அரசன் நீதி வழுவாமல் (செங்கோல் வளையாமல்) ஆட்சி புரிந்தான் என்பது மக்கள் வழக்காகும். 'செங்கோல் வழங்குவிழா' என்பது அரசதிகாரத்தை ஏற்கும் விழாவாகும். இது சடங்காக நெல்லையப்பர் கோயிலில் நடத்தப்படுகிறது.

நெல்லையப்பரும், காந்திமதியம்மனும் ஆயிரங்கால் மண்டபத்தில் முருகன், பாண்டியமன்னனுடன் எழுந்தருளுகின்றனர். சாமிக்கு அருகில் பூச்சரம் சுற்றப்பட்ட கோல் (செங்கோல்) ஒன்று வைக்கப்படுகிறது. தெய்வங்களுக்கும் செங்கோலுக்கும் தீபாராதனைகள் காட்டப்படுகின்றன. செங்கோல் சாமியிடமிருந்து முருகன், பாண்டியமன்னன் வழியாகத் தற்போதைய கோயில் செயல்அலுவலரிடம் (E.O-Executive officer) ஒப்படைக்கப்படுகின்றது. கோயிலின் நிகழ்கால அதிகாரத்தைக் கையில் வைத்திருக்கும் அதிகாரியான அவர் பரிவட்டம் கட்டியநிலையில் செங்கோலைக் கையிலேந்தியவாறு ஆயிரங்கால் மண்டபத்தை மேளதாளங்களுடன் சுற்றி வருகின்றார் (காண்க ஒளிப்படம் எண்.11). பின்னர் செங்கோல் அவரிடமிருந்து பெறப்பட்டு மீண்டும் இறைவன் முன் வைக்கப்படுகிறது. கோயில் அதிகாரியே அன்றைய நாள் முதல் மரியாதைக்குரியவராவார். இச்சடங்கு ஒவ்வொரு ஆண்டும் பங்குனி உத்திரத் திருவிழாவின் பத்தாம் நாள் இரவு நடத்தப்படுகின்றது.

மன்னராட்சிக் காலத்தில் அரசனோ அல்லது அவரது பிரதிநிதியோ செங்கோல் பெறும் உரிமையைப் பெற்றிருக்கவேண்டும். மன்னராட்சி ஒழிந்து குடியரசு தோன்றியவுடன் பெருங்கோயில்கள் இச்சடங்கில் சில நெகிழ்வுகளை ஏற்படுத்திக்கொண்டன. தற்கால அரசாங்க அதிகாரத்தைக் கையில் கொண்டுள்ள செயல்அலுவலரை மன்னனின் பிரதிநிதியாகப் பாவித்து இச்சடங்கினைச் செய்கின்றனர். மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் சித்திரை, ஆவணி மூலத்திருவிழாக்களில் செங்கோல் ஏந்திச் செல்லும் உரிமை கைமாறிய நிலையை சி.ஜே.புல்லர் பின்வருமாறு எடுத்துக்காட்டுகிறார்:

*முதன்மைப் பூசகர்கள் பல காலமாக இந்தச் செங்கோலை ஏந்திவந்திருக்கின்றனர். கோயில் நுழைவு வழக்கின்போது திருக்கோயில்*

*நிர்வாகத்தின் செயல் ஆட்சியாளர் இதை எடுத்துக்கொண்டார். இன்று இந்து அதிகாரியோ, அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட அறநிலையத் துறை அதிகாரியோ அல்லது அதன் தலைவரோ இந்தச் செங்கோலை ஏந்துகிறார்* (1999:96).

இது பெருங்கோயில் அரசதிகார மையமாகச் செயல்பட்டதற்கான மற்றுமொரு சான்றாக அமைகின்றது.

### 3.2.5.2. முடிசூட்டுவிழா

'முடிசூட்டுதல்' என்பது அரசப்பதவி ஏற்றலின் அடையாளமாகும். மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் *சித்திரைத் திருவிழாவின் 8ஆவது நாள் விழாவில் மீனாட்சி பாண்டியநாட்டு அரசியாக முடிசூட்டப்படுகிறாள்* என்கிறார் சி.ஜே.புல்லர்(1999:24). அன்று அரசியான மீனாட்சி செங்கோலுடன் இருப்பது போன்று அலங்காரம் செய்யப்படுகிறார். இது மேற்கூறிய கருத்திற்குரிய மற்றுமொரு சான்றாக அமைகின்றது.

### 3.2.5.3. பாதம் வழங்குதல்

பெருங்கோயில்களில் இறைவனின் 'பாதம் வழங்குதல் (திருவடி நிலைகள்)' என்னும் சடங்கு நிகழ்த்தப்படுகிறது. செங்கோல் அரசநீதியோடு தொடர்புடையது. 'பாதம்' மரியாதையோடு தொடர்புடையது ஆகும். ஆய்வுப்பகுதியான நெல்லையப்பர் கோயிலில் பங்குனி உத்திரத் திருவிழாவின் பத்தாம் நாள் செங்கோல் வழங்கும் சடங்கினை அடுத்து 'பாதம் வழங்குதல்' நடத்தப்படுகின்றது. வெள்ளியால் செய்யப்பட்ட இறை பாதத்திற்குப் (காண்க: ஒளிப்படம் எண்.10) பூசை செய்து அதனைத் 'தக்கார்' என அழைக்கப்படும் கோயில் நிர்வாகியிடம் வழங்குகின்றனர். தக்கார் என்பவர் அரசால் நியமிக்கப்படும் கோயில் நிர்வாக உறுப்பினராவார்.

இது கௌரவப் பதவியாகும்.

காலடி வணங்கும் நிலை தமிழகத்தில் தோன்றி வளர்ந்த முறையை, தொ.பரமசிவன் 'அடிதொழுதல்' (2001:131) என்னும் கட்டுரையில் விரிவாகப் பேசுகிறார். ஒருவரின் கடைநிலை உறுப்பான காலடியினை மற்றவர் தம் தலைமேல் தாங்குதல் என்பது ஒரு அதிகாரத்தை அடங்கி ஏற்றுக்கொள்ளுதல் என்பதாகும். எல்லாம் வல்ல இறைவனின் திருவடியினைத் 'தீட்சை' ஆக உடம்பில் ஏற்றுக்கொள்ளும் மரபு இன்றுவரை சைவ, வைணவ மரபில் காணப்படுகிறது. இறைவனின் திருவடிநிலைகளை அடியவர் தம் தலையில் தாங்கும் செய்தி சிலப்பதிகாரத்திலேயே பதிவாகி உள்ளது.

'தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்'

(கால்கோட்காதை, 64-65)

என்பது அவ்வடியாகும். பக்தி இலக்கியங்களில் இச்செய்தி பலமுறை பேசப்படுகின்றது. இதனை அப்பர் தேவாரத்து திருநல்லூர் திருத்தாண்டகப் பதிகம்,

*'நனைந்தனைய திருவடி என் தலைமேல் வைத்தார்*
*நல்லூர் எம்பெருமானார் நல்லவாறே'*

என்று குறிப்பிடுகின்றது.

இவ்வழக்கத்தின் உச்சகட்ட வளர்ச்சியாக இராமனின் திருவடிகளை அரியணை மேல் வைத்து பரதன் ஆட்சி செய்தான் என்பதை இராமாயணக்கதை காட்டுகிறது. அரசு என்ற நிறுவனத்தின் வளர்ச்சியோடு வளர்ந்த இவ்வழக்கம் அதன் துணை நிறுவனமான பெருங்கோயிலிலும் சடங்காக நடத்தப்படுகின்றது.

### 3.2.6. கருடசேவை

வைணவத் தலங்களில் பெருமாள் கருடவாகனத்தில் புரட்டாசி மாதச் சனிக்கிழமைகளில் வீதிவலம் வருவது 'கருடசேவை' என அழைக்கப்படுகின்றது. ஆய்வுக்களமான ஆழ்வார் திருநகரியில் வைகாசித் திருவிழாவின் ஐந்தாம் நாள் நடைபெறும் 'ஒன்பது கருடசேவை' மற்ற வைணவக் கோயில்களில் நடைபெறும் கருடசேவையிலிருந்து வேறுபட்டதாகும்.

ஆழ்வார் திருநகரியைச் சுற்றியுள்ள ஒன்பது வைணவத் தலங்களின் பெருமாள் நம்மாழ்வாரைக் காண ஆழ்வார்திருநகரிக்கு வருகின்றனர். இத்தலங்கள் நம்மாழ்வாரால் பாடப்பட்டவையாகும்.

1. மதுரகவியாழ்வார்- திருக்கோளூர்
2. வைத்தமாநிதி- திருக்கோளூர்
3. நிகரில்முகில்வண்ணன்-தென்திருப்பேரை
4. மாயக்கண்ணன்- திருக்குளந்தை
5. தேவர்பிரான்-இரட்டைத்திருப்பதி
6. செந்தாமரைக்கண்ணன்-தொலைவில்லிமங்கலம்
7. எம்மிடர்கடவான்-வரகுணமங்கை
8. காய்சினவேந்தன்-திருப்புளிங்குடி
9. கள்ளப்பிரான்-திருவைகுண்டம் ஆகியோர் அந்த ஒன்பதின்மர் ஆவர்.

இத்திருவிழா அன்று இரவு நம்மாழ்வார் 'அம்சவாகனத்தில்' கோயில் கோபுர நுழைவாயிலுக்கு எதிராக மேற்கு (கோயில் கருவறையை) நோக்கியவராகவும் அவருக்கு அருகில் அவரது சீடரான மதுரகவியாழ்வார்

'பரங்கிநாற்காலி' வாகனத்தில் தெற்கு நோக்கியவராகவும் நிற்கின்றனர். கோயில் உள்ளே எழுந்தருளியுள்ள ஒவ்வொரு பெருமாளும் தனித்தனியாக நம்மாழ்வாருக்குக் கோபுரநிலைக் கதவைத் திறந்தவுடன் காட்சிகொடுக்கின்றனர். இந்நிகழ்விற்காக கோயில் கோபுரநிலைக் கதவு ஒவ்வொரு முறையும் திறந்து மூடப்படுகிறது. இவ்வாறு ஒன்பது பெருமாள்களும் காட்சிகொடுத்தவுடன் அனைத்துச் சப்பரங்களும் (ஆதிநாதர், நம்மாழ்வார் ஆகிய இருவர் உட்பட) கோயிலை வலம் வருகின்றன. இதுவே சடங்கு நிகழ்வுகளாகும்.

இறைவனை நோக்கி(காண) மனிதர்கள் செல்வது பக்தியின் ஒரு செயல் ஆகும். இதற்கு மாறாக நம்மாழ்வார் என்ற மனிதரைக் காண ஒன்பது தலத்துப் பெருமாளும் இங்கு வருகின்றனர். நம்மாழ்வார் மற்ற தலங்களுக்குச் செல்லாதவர். ஆனால் அத்தலங்களைத் தனது ஞானக் கண்ணால் கண்டு பாடினார் என்பது வைணவர்களின் நம்பிக்கையாகும். அந்த நம்பிக்கையின் அடிப்படையில் பிறதலத்துப் பெருமாள்கள் நம்மாழ்வாருக்குக் காட்சிதர இத்தலத்திற்கு வருகின்றனர். இது சடங்கு முறையில் ஓர் எதிர் அமைப்பாக இறைவன் மனிதரைத் தேடிவருவதாக அமைகின்றது.

### 3.2.7. பாரி(பரி)வேட்டை

'பாரிவேட்டை' என்னும் சடங்கு இம்மாவட்டத்து சைவ, வைணவக் கோயில்களில் புரட்டாசி மாதம் விசயதசமி நாளன்று நடத்தப்படுகின்றது. *'இத்திருவிழா அன்று தெய்வம் வேட்டைக்குச் செல்வது போன்று அலங்காரம் செய்யப்படுகின்றது. இறைவன் குதிரை (அஸ்வவாகனம்) வாகனத்தில் எழுந்தருளி கையில் கத்தி, அரசுரிமைச் சின்னங்களுடன் பயணம் செய்கின்றார்'* என்கிறார் திருப்பதி வேங்டேசப்பெருமாள் கோயிலை ஆராய்ந்த

எம்.எஸ். ரமேஷ் (2000: 62).

ஆய்வுக்களத்தில் நெல்லையப்பர் குதிரை வாகனத்தில் 'வேடர்' வேடம் தரித்து 'சத்திரம் புதுக்குளம்' என்னும் இடத்திற்கு வேட்டையாடச் செல்கின்றார். இவ்வூர், நெல்லையப்பர் கோயிலிலிருந்து சுமார் 3கி.மீ தொலைவில் வடக்கில் அமைந்துள்ளது. இது குடியிருப்புகள் அற்ற காட்டுப்பகுதியாகும். இறைவன் வேட்டைக்குச் செல்லுகையில் இறைவனின் வில் அம்புகள் பயன்படுத்தும் நிலையில் இருப்பது போன்று அலங்காரம் செய்யப்படுகின்றது. அங்கு இறைவன் கோலப்பொடியால் வட்டமிட்ட இடத்தில் மூன்று முறை அம்பு விடுகிறார் (காண்க ஒளிப்படம் எண்.08.). பின்னர் கோயிலுக்குத் திரும்புகையில் அம்புகள் பயன்படுத்திய நிலையில் இருப்பது போன்று தொங்கவிடப்படுகின்றன.

சேரன்மாதேவி இராமசாமி கோயிலில் இராமர், குதிரை வாகனத்தில் வில்லினைப் பயன்படுத்தும் நிலையில் ஊரின் தெற்குப் புறத்திலுள்ள மண்டபத்திற்குச் செல்கின்றார். அங்கு சில மரக்கிளைகள் நடப்படுகின்றன. இராமர் அக்கிளையினை நோக்கி மூன்று முறை அம்பு விடுகின்றார்(காண்க ஒளிப்படம் எண்.09.). பின்னர் அங்கு கட்டளைதாரருக்கு மரியாதை செய்யப்படுகின்றது.

இராமன் மராமரத்தின் மீது அம்புவிட்டான் என்பது இராமாயணச் செய்தியாகும். இப்புராணச்செய்தியினை நினைபடுத்தும் விதமாகவே பாரிவேட்டையின் போது இராமர் மரக்கிளையில் அம்பு விடுவது போன்ற சடங்கு இக்கோயிலில் நிகழ்த்தப்படுகிறது.

நெல்லை, தூத்துக்குடி மாவட்டங்களில் இம்முறையிலேயே பெரும்பாலான கோயில்களில் இவ்விழா நடத்தப்படுகிறது. சமூகம் இனக்குழுவாக இருந்தபோது நடைபெற்ற வேட்டைச் சடங்கின்

போலச்சடங்காக (mimetic ritual), அல்லது சடங்கு எச்சமாக இச்சடங்கு உள்ளது எனலாம். இது வழிபாட்டில் நிலவிவருகின்ற தொடர்ச்சியைக் காட்டுகின்றது.

### 3.2.8. பூசத்திருவிழா

தைமாதம் பூசம் நட்சத்திரத்தன்று தலத்து இறைவனை அருகிலுள்ள நீர்த்துறைக்கு எடுத்துச் சென்று நீராட்டுவதே ‘பூசத்திருவிழா’ ஆகும். திருநெல்வேலி (நெல்லையப்பர்), அத்தாளநல்லூர் (ஆனைகாத்தருளிய பெருமாள்), திருப்புடைமருதூர் (நாறும்பூ நாதர்) ஆகியன பூசத் தலங்களாகும். தமிழ்நாடு ஒரு வெப்பமண்டலப் பகுதியாகும். இங்குள்ள மக்கள் வெப்பத்திலிருந்து தங்களைக் காப்பாற்ற நாள்தோறும் நீராடும் பழக்கமுடையவர்கள். மக்களின் அன்றாட வழக்கமே பெருங்கோயிலில் சடங்காக நிகழ்த்தப்படுகிறது.

அத்தாளநல்லூர் தலத்தில் நடைபெறும் இந்தத் தெய்வத் திருமேனிகளின் நீராட்டுதலின் போது இக்கோயிலைச் சுற்றியுள்ள கிராமமக்கள் பெருமளவில் பங்கேற்று தாமும் நீராடுகின்றனர் (காண்க ஒளிப்படம் எண்.005.). நெல்லையப்பர் கோயிலில் ‘அஸ்திரதேவர்கள் (சிவனின் ஆயுதமான திரிசூலம்)’ மேள தாளங்களுடன் தாமிரபரணியில் நீராட்டப்படுகிறார்கள்.

### 3.2.9. பெருங்கோயில்- நாட்டார் தெய்வ உறவு

பெருங்கோயில்களுக்கும் நாட்டார் தெய்வங்களுக்கும் இடையிலான வழிபாட்டு வேறுபாட்டை கோயில் ஆய்வாளர்கள் பலர் விவரித்துள்ளனர். இருப்பினும் பெருங்கோயில் தன் அதிகார வளாகத்திற்குள் நாட்டார் தெய்வத்தை அங்கீகரித்து அதனோடு தொடர்பு கொண்டுள்ளதையும்

காணமுடிகின்றது. பெருங்கோயிலுக்கும் நாட்டார் தெய்வத்திற்கும் இடையிலான உறவுகள் ஆகம விதிக்கு உட்பட்டவை அல்ல. அவை பண்பாட்டு உறவே ஆகும். பெருங்கோயில்கள் ஏதேனும் ஒரு நாட்டார் தெய்வத்துடன் சடங்கியல் உறவினைக் கொண்டுள்ளன.

### 3.2.9.1. தேரடிமாடன்

தேரினைக் கொண்டுள்ள எல்லாப் பெருந்தெய்வக் கோயில்களிலும் 'தேரடிமாடன்' என்ற நாட்டார் தெய்வம் குடிகொண்டுள்ளது (காண்க ஒளிப்படம் 18). இத்தெய்வத்தை மர வேலைகளைச் செய்யும் 'தச்சாசாரி' எனப்படும் சாதியினர் வழிபடுகின்றனர். இவர்களே அத்தெய்வத்திற்குரிய பூசாரிகளாகவும் உள்ளனர். ஆய்வுப்பகுதியில் அமைந்துள்ள பெரும்பான்மையான பெருங்கோயில்கள் தேரினையும் தேரடிமாடனையும் கொண்டுள்ளன. ஆனால் நெல்லை, நாங்குநேரி, திருவைகுண்டம், தென்காசி போன்ற குறைந்த எண்ணிக்கையிலான கோயில்களில் மட்டும் தேர்த்திருவிழா நடத்தப்படுகிறது. தேர்த்திருவிழா நின்று போன கோயில்களின் எண்ணிக்கையே அதிகமாக உள்ளன.

நாங்குநேரி வானமாமலைப் பெருமாள் கோயிலில் வருடத்தில் இரண்டு முறை தேர்த்திருவிழா நடத்தப்படுகின்றது. தேரோட்டத்திற்கு முந்தையநாள் பொங்கலிடுவதற்கான பொருட்கள், பலியிடப்படும் ஆடு ஆகியவற்றை தச்சாசாரி பெருங்கோயிலிருந்து பெற்றுச் செல்கின்றார். மறுநாள் (தேர்திருவிழா அன்று) அதிகாலையில் தேரடிமாடன் முன்பு பொங்கலிட்டு, ஆட்டினைப் பலியிடுகின்றார். நாட்டார் தெய்வங்களுக்குப் படைப்பது போன்று ஆடு கழுத்தறுத்துப் படைக்கப்படுவதில்லை. ஆட்டின் காதில் சிறு வெட்டு ஏற்படுத்தி அதிலிருந்து வரும் குருதியைத் தேரடிமாடனுக்குப் படைக்கின்றனர். இதுவே பெரும்பான்மையான கோயில்களின் வழிபாட்டு முறையாகக் காணப்படுகிறது.

### 3.2.9.2. கொடிமரத்துத் தெய்வம்

பெருங்கோயில்களில் வழிபடப்படும் மற்றொரு தெய்வம் 'கொடிமரத்துத் தெய்வம்' ஆகும். கொடிமரம் அமைக்க மரம் காட்டிலிருந்து வெட்டி எடுத்து வரும் போது அதனுடன் நாட்டார்தெய்வம் வந்தது என்பது இத்தெய்வம் குறித்த மக்களின் பொதுவான நம்பிக்கையாகும். இதன் காரணமாக கொடிமரத்துத் தெய்வத்தை 'கொடிமரத்து இசக்கி', 'கொடிமரத்து மாடன்', 'கொடிமரத்துத் தேவதை', 'வனப்பேச்சி', 'கொடிமரத்தாள்' எனப் பல பெயர் கொண்டு அழைக்கின்றனர். 'மரத்துடன் தெய்வம் வருதல்' என்பது நாட்டார் தெய்வக்கதையின் ஒரு கதைக்கூறு ஆகும். மரம் அல்லது தாவரம் என்பது நாட்டார் தெய்வம் இடம்பெயருவதற்கான ஊர்தியாக அமைகின்றது. இத்தெய்வம் குறித்த பல்வேறு கதைகள் மக்களிடம் காணப்படுகின்றன. திருச்செந்தூர் முருகன் கோயில் கொடிமரம் குறித்த வட்டாரக் கதையினை ந.கல்யாணசுந்தரம் (1998:15-18) விளக்குகிறார்.

'*கடவுளர்களும் ஆவிகளும்* உறையும் *இருப்பிடமாகக் கருதி, மரங்களை வழிபடும் வழக்கம் ஒரு காலத்தில் மிகவும் பரவலாக இருந்தது*'. என்கிறார் கே.ஆர்.சீனிவாசன் (1996:7). இது நாட்டார் வழிபாட்டு மரபாகும். தொல்வழிபாட்டின் தொடர்ச்சியாக இன்றும் பெருங்கோயில்களில் கொடிமரத் தெய்வம் ஒன்று வழிபடப்படுகின்றது எனலாம்.

### 3.2.9.3. தனித்தெய்வங்கள்

பெருங்கோயில் தன் அருகிலுள்ள நாட்டார் தெய்வக்கோயிலோடு கொண்டுள்ள உறவினைக் காண்போம். பெருங்கோயில் வளாகத்திற்குள்ளோ அல்லது வளாகத்திற்கு வெளியிலோ நாட்டார்கோயில்கள் இருக்கலாம்.

| பெருங்கோயில் | நாட்டார் தெய்வம் | இடம் |
|---|---|---|
| நெல்லையப்பர் | புட்டாகரத்தியம்மன்(பெ) | திருநெல்வேலி |
| மாயக்கூத்தன் | கழுநீர் சாஸ்தா(ஆ) | பெருங்குளம் |
| அம்பலவாணர் | போத்திரெட்டி(ஆ) | மானூர் |
| பூமிநாதர் | வீரமங்கை(பெ) | வீரவநல்லூர் |
| அழகிய நம்பிராயர் | குத்துப்பிறை இசக்கி(பெ) | திருக்குறுங்குடி |
| காய்சின வேந்தன் | தர்மசாஸ்தா(ஆ) | திருப்புளிங்குடி |
| ஆனைகாத்தருளியதேவர் | சட்டைநாதர்(ஆ) | அத்தாளநல்லூர் |
| வானமாமலை | வரகுணநாச்சியார்(பெ) | நாங்குநேரி |
| சங்கரநாராயணர் | காப்பறையன்(ஆ) | சங்கரன்கோவில் |

நெல்லையப்பர், பூமிநாதர் ஆகிய இருவரும் தமது வளாகத்திற்கு வெளியே இடது புறத்தில் வடக்குத் திசைநோக்கியவாறு அமைந்துள்ள நாட்டார் பெண் தெய்வத்தோடு உறவு கொண்டுள்ளனர். இந்த நாட்டார் தெய்வங்களை ‘வடக்குவாசல் செல்வி’ என அழைக்கப்படும் காவல் தெய்வமாகக் கருதலாம். பெருங்கோயிலிருந்து இந்த அம்மனுக்கு ஆண்டிற்கு ஒரு முறை ‘பட்டு வழங்குதல்’, ‘பொட்டுத் தாலி வழங்குதல்’ என்ற சடங்குகள் நடைபெறுகின்றன. பெருங்கோயில் இறைவன் இந்த நாட்டார் பெண் தெய்வக் கோயிலுக்கு வருடத்தில் ஒரு நாள் சென்றுவருகின்றார். இந்நிகழ்வின் காரணமாக அடியவர்கள் இத்தெய்வங்களைப் பெருங்கோயில் இறைவனின் ஆசைக்குரியவள் எனக் கருதுகின்றனர். வீரவநல்லூர் மக்கள் ‘வீரமங்கை’ என்ற இந்த நாட்டார் தெய்வத்தை இறைவியின்(மரகதத்தின்) மற்றொரு வடிவம் என்றே கூறுகின்றனர். இறைவியான மரகதம் பள்ளி ஒருத்திக்கு பேறுகாலம் பார்த்ததால் அவள் தீட்டு காரணமாகக் கோயிலுக்குள் வராது அங்கேயே குடியேறினாள் என்கின்றனர்.

அத்தாளநல்லூர், ஆனைகாத்தருளிய பெருமாள் கோயில் வளாகத்திற்கு உள்ளே 'சட்டைநாதர்' என்ற நாட்டார் தெய்வம் குடிகொண்டுள்ளார். கல் தூண் ஒன்றே சட்டைநாதராக வழிபடப்படுகின்றது. தைப்பூசம் அன்று இரவு அந்த சட்டைநாதருக்கு 'சட்டைசாத்துதல்' என்ற சடங்கு நடத்தப்படுகின்றது. தூண் முழுவதிலும் சந்தனம்பூசி, பூமாலையிட்டு, தீபாராதனைகள் செய்யப்படுவதையே சட்டைசாத்துதல் என்கின்றனர். இச்சட்டை சாத்துதலில் முதல், இரண்டாவது என்ற வரிசை முறைகள் பின்பற்றப்படுகின்றன. தூத்துக்குடி மாவட்டம் முக்காணி 'சேனைத்தலைவர்' சாதியினரே முதலில் சட்டை சாத்தும் உரிமையைப் பெற்றுள்ளனர். அடுத்து, தேவர் சாதியாரும் அடுத்து, பிற சாதிகளும் சட்டை சாத்துகின்றனர். சட்டை சாத்துதல் நிறைவுபெற்றவுடன் இரவு 12மணிக்குக் கோயில் பின்புறமுள்ள ஆற்றங்கரையில் 'குறிசொல்லுதல்' என்ற நிகழ்வு நடைபெறுகின்றது. சட்டைநாதனின் சாமியாடிகள் தம்குல மக்களுக்குக் குறிசொல்கின்றனர். பெண்களே பெரும்பான்மையாக சாமியாடிகளாக உள்ளனர்.

பெருங்குளம் மாயக்கூத்தன் பெருமாள் கோயில் தென்புறச் சுற்றுச் சுவரின் வளாகத்திற்கு வெளியே 'கழுநீர் சாஸ்தா' என்ற நாட்டார் தெய்வம் உள்ளது. இது மடைப்பள்ளி சமையல் நீர் செல்லும் பாதைக்கருகில் அமைக்கப்பட்டதற்கான காரணத்தை விளக்கும் கதையொன்று அப்பகுதி மக்களிடம் வழக்கிலுள்ளது.

*'பெருங்கோயில் உணவினைத் தனக்கு முதலில் படைக்கவேண்டும் என அப்பகுதியிலுள்ள நாட்டார் தெய்வம் ஒன்று உரிமை கொண்டாடியது. இதனால் மாயக்கூத்தருக்கும் அத்தெய்வத்திற்கும் இடையில் சண்டை ஏற்பட்டது. சண்டையில் நாட்டார் தெய்வம் தோற்றது. உணவுக்குப் பதிலாகக் கோயில் மடைப்பள்ளியிலிருந்து வரும் கழிவு நீரினை உண்டு*

*வாழ அனுமதி வேண்டியது. இறைவன் அதற்கு சம்மதித்து அவ்விடத்தில் குடியிருக்க அனுமதி வழங்கினார்'* (பேட்டி: தேவபிரான், பெருங்குளம்).

பெருங்கோயில் உணவில் ஏற்படும் திருட்டைக் கண்காணிக்க இந்த நாட்டார் தெய்வம் நிறுவப்பட்டுள்ளது எனலாம். பெருங்கோயில் தெய்வங்கள் உண்டுகழித்ததையும், சாத்திக் கழித்ததையும் நாட்டார் தெய்வத்திற்குப் படைத்தல் என்பது பெருங்கோயில் மரபில் ஒன்றாகும். *திருச்செந்தூர் முருகன் கோயிலில் முருகனுக்குச் சாத்திக்கழித்த பூமாலைகளை சண்டிகேசுவரருக்கு அணிவிப்பர். 'சாத்திக்கழித்தது சண்டிகேசுவரருக்கு' என்பது திருச்செந்தூர் வட்டார வழக்கு* (கல்யாணசுந்தரம்.ந:1998:37). மாயக்கூத்தன் கோயிலில் சமைக்கப்படும் உணவின் அளவினை அதன் கழுநீரைக் கொண்டு தந்திரமாக அளவிடுவதற்காகப் பிராமணர் அல்லாதாரால் ஏற்படுத்தப்பட்டுள்ள தெய்வமாகவும் கழுநீர் சாஸ்தாவைக் காணலாம். இனி, சங்கரநாராயணன் கோயிலோடு தொடர்புடைய நாட்டார் தெய்வத்தைக் காணலாம்.

''காப்பறையன்' என்பவன் புன்னைவனத்திலுள்ள புற்று ஒன்றினை வாளால் வெட்டிய போது புற்றிலிருந்த பாம்பு வெட்டுப்பட்டு இறைவன் தோன்றினான்' என்பது சங்கரநாராயணர் கோயில் தலபுராணக்கதையாகும்.

சங்கரநாராயணர் கோயிலுக்கு வலது புறத்தில் காப்பறையனுக்கு தனிக்கோயில் ஒன்று கட்டப்பட்டுள்ளது. சங்கரநாராயணர் கோயிலில் சித்திரைத் திருவிழா காப்பறையனிடம் அனுமதி பெற்றே தொடங்கப்படுகின்றது. காப்பறையனுக்கு நடத்தப்படும் கொடைவிழாவிற்குரிய புத்தாடைகள், பொங்கலுக்குரிய அரிசி ஆகியனவற்றை பெருங்கோயிலே வழங்குகின்றது.

திருக்குறுங்குடி அழகியநம்பி கோயில் வளாகத்திற்குள் 'குத்துப்பிறை இசக்கியம்மன்' என்னும் நாட்டார் கோயில் அமைந்துள்ளது. பெருங்கோயில்

கொடி மரத்தோடு இத்தெய்வம் வந்தது என்பது மக்களின் நம்பிக்கையாகும். இக்கோயிலின் அன்றாட பூசைகளைப் பெருங்கோயிலே தன் செலவில் கவனித்துக்கொள்கிறது.

நான்குநேரி வானமாமலைப் பெருமாள் கோயிலுக்கு இடது புறத்தில் நாட்டார் பெண் தெய்வம் ஒன்றுள்ளது. இது 'வரகுணநாச்சியார்' என அழைக்கப்படுகின்றது. அத்தெய்வம் பெருமாள் கோயில் தாயார் ஒருவரின் பெயரைக்கொண்டுள்ளது என்பது கவனத்திற்குரியதாகும்.

மானூர் அம்பலவாணர் கோயிலின் வளாகத்தின் நடுவில் தூண் வடிவில் 'திருவடிப் போத்தி' என்னும் தெய்வம் உள்ளது. *இதனை பாண்டிய அரசன் ஒருவன் மெக்காவிலிருந்து கொண்டு வந்தார் என்பது மக்களின் நம்பிக்கையாகும்'* என பேட்(H.R.Pate) குறிப்பிடுகிறார்(1916:476).

ஒவ்வொரு வருடமும் ஆவணி மாதம் மூல நட்சத்திரத்தன்று திருநெல்வேலி நெல்லையப்பர், கருவூர்ச் சித்தருக்கு காட்சிகொடுக்க இக்கோயிலுக்கு வருகிறார். அச்சடங்கு 'மூலத்திருவிழா' எனப் பொதுமக்களாலும் 'கருவூர்ச் சித்தருக்கு காட்சி' என பிராமணர்களாலும் அழைக்கப்படுகின்றது. அத்தினத்தன்று திருவடிப்போத்தியை அப்பகுதி மக்கள் பெருமளவில் வழிபடுகின்றனர். அவருக்கு தங்களது நிலத்தில் விளைந்த பொருட்களை காணிக்கையாகச் செலுத்துகின்றனர். தேங்காய் உடைத்தல், குறி கேட்டல் ஆகியனவும் திருவிழாவின் சடங்குக் கூறுகளாகும். அதாவது திருவிழாவில் நெல்லையப்பரை விட திருவடிப்போத்தியே முதன்மை பெறுகின்றார்.

பெருங்கோயில்கள் இத்தகைய நாட்டார் தெய்வ வழிபாடுகளை தன் வழிபாட்டு எல்லைக்குள் அனுமதித்துள்ளது ஏன்?

பெருங்கோயிலை வழிபடும் மக்களில் பெரும் எண்ணிக்கையிலானவர்கள் பிராமணர் அல்லாதாரே. இவர்களது பூர்வீக வழிபாட்டு முறை நாட்டார் தெய்வவழிபாட்டு முறையாகும். குறிசொல்லுதல், உயிர்ப்பலியிடுதல், சாமியாடுதல், தெய்வத்தைத் தொட்டு வணங்குதல், தாமே பூசைசெய்தல் ஆகியன இத்தெய்வ வழிபாட்டுக் கூறுகளாகும். இக்கூறுகளே இம்மக்களின் வழிபாட்டு உணர்வை நிறைவு செய்கின்றன. பெருங்கோயில்கள் இந்த நாட்டார் வழிபாட்டுக் கூறினை ஏற்றுக்கொள்ள இயலாத நிலையில் உள்ளன. ஆனால் இத்தகைய நாட்டார் தெய்வவழிபாட்டு முறையினைக் கொண்ட பெரும் எண்ணிக்கையிலான மக்களை இழக்கவும் முடியாத நிலையில் உள்ளன.

நாட்டார் தெய்வம் ஒன்றினைத் தன் வளாகத்திற்குள் ஏற்படுத்துவதும், அதனை வழிபட அனுமதிப்பதும், அதன் வழிபாட்டிற்குரிய பொருளாதாரச் செலவினை ஏற்பதும், அதனிடம் அனுமதிபெற்றுத் தன்திருவிழாவினைத் தொடங்குவதும், அதன் இருப்பிடத்திற்கு வருடத்தில் ஒன்று அல்லது இருமுறை செல்வதும் பெருங்கோயில்கள் நாட்டார் மரபுகளோடு செய்துள்ள சமரச நடவடிக்கைகளாகும். நாட்டார் தெய்வ வழிபாட்டைப் பின்பற்றும் பெரும் எண்ணிக்கையிலான மக்களைத் தம்மோடு இணைத்துக்கொள்ள இத்தகைய சமரச நடவடிக்கைகளில் பெருங்கோயில்கள் ஈடுபடுகின்றன எனலாம்.

# இயல் நான்கு

# கோயில்களும் அடியவர் வாழ்வியலும்

## 4.0 முன்னுரை

தமிழகத்துப் பெருங்கோயில்கள் அனைத்தும் கற்கட்டுமானம் உடையவைகளே. 'வழிபடும் இடம்' என்ற எல்லையினைத் தாண்டி கற்கட்டுமானத்தைக் கோயில் பெற்றபோது அவ்விடம் 'கோட்டம்' என்பதிலிருந்து 'கோயில்' என்ற பெயரினைப் பெற்றது. அதாவது அரசன் அல்லது இறைவன் குடியிருக்கும் இடம் எனப் பொருள் கொள்ளப்பட்டது. கற்கட்டுமானம் நிலைத்த தன்மையினை உடையதால் அதுவே பின்வரும் தலைமுறையினருக்கும் வழிபடும் இடமாக அமைந்தது. வழிபடும் இடம் எளிதில் மாற்றம்பெற இயலாதபோது அது கட்டுமான அளவில் பெரியதாக வளர்ந்து கொண்டே போனது. கோயில் வளாகம் பெரிதாகின்றபோது அதற்கு இசைவாகக் கோயில் சொத்துக்களின் அளவும் வழிபடும் அடியவர்களின் எண்ணிக்கையும் பெருகிக்கொண்டே போயின. தமிழகத்தில் நாயக்கர் ஆட்சிகாலம் வரை கோயில்களின் வளர்ச்சி நிலை இவ்வாறாகவே இருந்தது.

## 4.1. கோயில் பணியாளர்களும் மரியாதை முறைமைகளும்

கோயில்களின் இந்த வளர்ச்சி நிலையோடு அவை கொண்டுள்ள இசைக்கருவிகள், பண்டபாத்திரங்கள், வீதிஉலா வாகனங்கள், தெய்வத் திருமேனிகள், திருவிழாக்கள் ஆகியவற்றின் எண்ணிக்கைகள் அதிகமாயின. கோயில்களின் அதிகாரபலத்தை வெளிக்காட்டவும் தேவை காரணமாகவும் இப்பொருட்களை அளவில் பெரியதாகச் செய்தனர். இப்பண்பு கோயிலுக்குப் பலமானதாகவும் இதுவே பலவீனமானதாகவும் இருந்தது. அதாவது பெரும் எண்ணிக்கையில் அடியவர்களைச் சார்ந்திருக்க வேண்டிய தேவையை

ஏற்படுத்தியது. அடியவர்களைத் தக்கவைத்துக்கொள்ள வேண்டிய தேவைக்காகக் கோயில் சில வழிமுறைகளைக் கையாளுகின்றது. அவற்றுள் ஒன்று, அடியவர்களுக்கு மரியாதை அளித்தல் ஆகும். பெருங்கோயில் திருவிழாக்களில் தேர் விழா கோயிலுக்குப் பலமானதாகவும் பலவீனமாகவும் உள்ளதைத் தெளிவாகக் காணமுடிகின்றது.

**தேர் வீதிஉலா**

'தேர்' என்பது ஒரு வாகனம் என்றாலும் அது வலம் வருதல் என்ற பயன்பாட்டின் எல்லையைத் தாண்டி வடிவில் பெரியதாக வடிவமைக்கப்படுகிறது. தீர்த்தங்கரர்கள் இயற்கைக்கு மாறுபட்டு அதிகஉயரமும் அதற்கேற்ற பருமனும், உடையவர்களாக வடிவமைக்கப்பட்டதற்கான காரணத்தை, *'சமயங்கள் தம்முடைய பெரியார்களின் பெருமை, ஆற்றல், சிறப்பு, தெய்விகத்தன்மை முதலியவற்றை அதிகப்படுத்த வேண்டும் என்னும் சமய ஆர்வத்தினால் ஒவ்வொரு சமயத்தாரும் தத்தம் சமயப் பெரியாரைப் பற்றிப் பலவித செய்திகளைக் கற்பித்து விடுகிறார்கள்'* என மயிலை.சீனிவேங்கடசாமி(2000:5) விளக்குகிறார். வைதீகச் சமயத்தில் இறைவனின் பேராளுமையைக் காட்ட தேர்கள் பெரியதாகச் செய்யப்படுகின்றன எனலாம். இதனால் இறைவன் தேரில் வலம்வருவது ஆண்டிற்கு ஒருமுறை மட்டுமே நிகழக்கூடியதாக அமைகின்றது.

பெருங்கோயில்கள் யாவும் தேரினை இழுப்பதற்கு வட்டாரக் குடிமக்களையே சார்ந்துள்ளன. ஏனென்றால் பிற வாகனங்களைச் சுமக்கும் கோயில் பணியாளர்களின் எண்ணிக்கை தேருக்குப் பொருந்துவதாக இல்லை. எனவே பெருங்கோயில்கள் அவை அமைந்துள்ள ஊர்க்குடிகள் அல்லது அவர்களோடு அருகாமையிலுள்ள ஊர்க்குடிகள் ஆகியோரையே

சார்ந்திருக்கின்றன. தேர் இழுக்கும் பணிக்காக ஊர்க்குடிகளாகிய அடியவர்கள் சம்பளமோ, கூலியோ பெறுவதில்லை. கோயிலிலிருந்து மரியாதையினையும் சில உரிமைகளையும் மட்டும் பெறுகின்றனர். இதுவே தமிழகத்தின் அனைத்துக் கோயில் தேர்த்திருவிழாவின் நடைமுறையாக உள்ளது.

ஆய்வுக்களமான நாங்குநேரி வானமாமலைப் பெருமாள் கோயிலில் ஒவ்வொரு ஆண்டும் 'பெரிய தேர்திருவிழா' நடத்தப்படுகிறது. இக்கோயிலில் பெரிய தேரோடு இரண்டு சிறிய தேர்களும் உள்ளன. சிறிய தேர்த் திருவிழாவிலிருந்து இதனை வேறுபடுத்திக் காட்ட இத்திருவிழாவைப் 'பெரிய தேர்த்திருவிழா' என அழைக்கின்றனர். பெரியதேர்த் திருவிழாவில் தேரினை இழுக்கும் உரிமை 'ஏழூர்ப் பங்கு' ஆக வகுக்கப்பட்டுள்ளது. அதாவது இக்கோயிலைச் சுற்றியுள்ள ஆறு ஊர்களில் வாழும் ஏழுபங்கு தேவர் சாதியார் இப்பணியினை ஏற்றுக் கொண்டுள்ளனர். இவர்கள் ஆண்டுக்கு ஒரு ஊராகச் சுழற்சி முறையில் கோயிலின் தேரினை இழுக்கும் கடமையைச் செய்கின்றனர்.

தேரோட்டம் அன்று கோயில் ஜீயர் முதலில் தேரின் சக்கரத்தடியில் தேங்காய் உடைத்துத் திருவிழாவைத் தொடங்கி வைக்கின்றார். அவ்வூர் பிராமணர் சாதியார் முதலில் தேர்வடம் பிடித்து சிறிது தூரம் இழுத்துச் செல்கின்றனர். பின்னர் ஊரின் எல்லையில் கூடியிருக்கும் ஏழூர்ப் பங்குகாரர்களை ஜீயர் சார்பாகக் கோயிற் பணியாளர்கள் சென்று மேளதாளங்களுடன் அழைத்து வருகின்றனர். அவர்கள் நேர்த்திக்கடனாகத் தேரின்சக்கரத்தில் தேங்காயை உடைத்துத் தேரினை இழுக்கின்றனர். உடைத்த தேங்காயை பொறுக்கிக்கொள்ளும் உரிமை அவ்வூர் கோனார் சாதியாருக்கு கொடுக்கப்பட்டுள்ளது. ஏழூர்ப் பங்குகாரர்களில் ஆண்டுக்கு

ஒரு பங்கினர் மட்டும் தேரினை வடம்பிடித்து இழுத்து நிலையம் சேர்க்கின்றனர். நிறைவாக அவர்களுள் முதியவர் ஒருவர் பரிவட்டம் கட்டி மரியாதை செய்யப்படுகிறார். தேர் இழுக்கும் அடியவர்களுக்கு மதிய உணவு வழங்கும் கடமையை கோயில் ஏற்றுக்கொண்டுள்ளது.

'மக்களை மேளதாளங்களுடன் அழைத்து வருதல்', 'அவர்களுக்கு உணவளித்தல்', 'மரியாதைசெய்தல்' ஆகிய நடவடிக்கைகளைக் கோயில் மேற்கொள்வதன் மூலமே அது தனது திருவிழாவைத் தொடர்ந்து நடத்த முடிகிறது. இந்த நடவடிக்கைகளில் குறைவு ஏற்படும்போது திருவிழாக்களில் முரண்கள் ஏற்படுகின்றன. 1993ஆம் ஆண்டு திருப்பூவனம் கோயில் பங்குனித் தேர் திருவிழாவின் போது காவல்துறைக்கும் மக்களுக்கும் இடையில் கலவரம் ஏற்பட்டது. இதனால் மக்கள் தேர் இழுப்பதை நிறுத்தினர். அரசு தேரினை நகர்த்த இயலாமல் தவித்தது. பின்னர் உயர்அதிகாரிகள் தலையிட்டு இருவருக்கும் இடையில் சமரசம் ஏற்படுத்தினர். மீண்டும் தேர் இழுக்கப்பட்டு நிலையம் சேர்க்கப்பட்டதை சுந்தர்காளி (1998:81) குறிப்பிடுகிறார்.

தேரின் உயரத்தையும் எடையையும் குறைத்தல், அரசு அலுவலர்களான காவல்துறை மூலம் தேரினை நகர்த்துதல், தேரின் மரத்தாலான சக்கரங்கள் மாற்றப்பட்டு இரும்பிலான சக்கரங்கள் பொருத்துதல், திருவிழாவிற்கு முன் அரசாங்க அதிகாரிகளுடன் கலந்தாலோசித்தல் ஆகிய நடைமுறைகளையும் அரசதிகார நிறுவனமான கோயில் கடைப்பிடிக்கின்றது. இதன் மூலம் தேர் நகர்வது எளிதாக்கப்படுகிறது.

தேரினை எளிதாக நகர்த்துவதற்காக மேற்கொள்ளப்படும் முயற்சிகளின் எண்ணிக்கை ஒவ்வோர் ஆண்டும் அதிகரித்துக் கொண்டே

வருகின்றன. இது மக்களுடன் அதிகாரமின்றி உறவு கொள்ள மறுக்கும்போது கோயில் தனது இருத்தலை இழப்பதைத் தெளிவாகக் காட்டுகிறது. இதனாலேயே பெரும்பாலான கோயில்களில் பெரும் திருவிழாக்கள் நிறுத்தப்பட்டுள்ளன. மக்களுடன் அதிக அளவிலான சமரசங்களைச் செய்துள்ள கோயில்கள் தம் ஆன்மீக அதிகாரத்தைத் தக்கவைத்துக் கொள்கின்றன.

கோயில் வளாகங்களைச் சுத்தம் செய்தல், இசைக்கருவிகள் வாசித்தல், சமையல்செய்தல், தெய்வத்திற்குத் திருமுழுக்காட்டுதல், ஆடைஅலங்காரங்கள் செய்தல் ஆகியன கோயிலின் அன்றாடப் பணிகளாகும். இப்பணிகளோடு வாகனங்களைத் தூக்குதல், தேர்இழுத்தல், உடைமைகளுக்குப் பாதுகாப்பளித்தல் ஆகியன திருவிழாக்களின் கூடுதல் பணிகளாகும். இப்பணிகளைப் பணியாளர்களால் மட்டும் நிறைவு செய்து கொள்வதில்லை. இதற்காகக் கோயில் கட்டளைதாரர், மண்டகப்படிதாரர், உபயதாரர், நன்கொடையாளர் என்ற பெயர்களில் பல அடியவர் குழுக்களைக் கொண்டுள்ளது.

இவர்கள் சாதியத் திரள்கள், ஊர்க்குடிகள், அரசுஅலுவர்கள் எனக் குழுவாகவும் மடாதிபதிகள், தனிநபர்கள் எனத் தனிஉறுப்பினராகவும் கோயிலுக்கு உதவிபுரிகின்றனர். இவர்களைத் தன்னுடன் நிலையாக நிறுத்திக்கொள்ள பரிவட்டம் கட்டுதல், தீர்த்தம் வழங்குதல், மாலையணிவித்தல், வெற்றிலை பாக்கு வழங்குதல், செங்கோல் வழங்குதல், கோயில் வருவாயில் உரிமை அளித்தல் என அம்மரியாதைகள் அமைகின்றன.

### 4.1.1. கோயில் பணியாளர்கள்

கோயில்களில் பொதுவாக அர்ச்சகர்கள் (பூசைகள் செய்வர்கள்),

கருவூலர்கள் (பணம் வசூலிப்பவர்கள்), கணக்கர்கள் (கோயில் வரவு, செலவு பார்ப்பவர்கள்), இசைவாணர்கள் (இசைக்கருவி இசைப்பவர்கள்), கூத்தர்கள் (நாடகம், நடனம் ஆடுபவர்கள்), குயவர்(மட்கலம் வழங்குபவர்), கன்னார் (இரும்புப் பொருட்கள் வழங்குபவர்), வண்ணார் அல்லது ஈரங்கொல்லி (துணி வெளுப்பவர்), பொற்கொல்லர் (தங்கவேலைக்காரர்), தச்சர் (மரவேலைக்காரர்), காவலாளி (பாதுகாவலர்), கொத்தனார்(கட்டடம் கட்டுபவர்), காரளப்பான் (நெல் அளப்பவர்), அருளப்பாடு செய்பவர் (அடியவர்களை அழைப்பவர்), இராமானுசன் பிடித்தான் (தீபத்தட்டு ஏந்துபவர்) எனப் பல்வேறு நிலைகளில் பணியாளர்கள் இருந்தனர்.

திருவரங்கம் கோயிலில் பணியாற்றும் முப்பது வகையான பணியாளர்களையும் அவர்களது துணைப் பணியாளர்களையும், அவர்களது பணியினையும் அதற்காக அவர்கள் பெறும் ஊதியத்தையும் தலவரலாறு (திருவரங்கம் திருக்கோயில்:35-58) விரிவாக விளக்குகின்றது. மதுரை அழகர் கோயில் ஆட்சி மரபு பதினான்கு பணிப்பிரிவுகளாக முப்பத்திரண்டு நிருவாகங்களுடன் அமைந்தது என தொ.பரமசிவன்(1989:213) ‘தொழில் சுதந்திர அட்டவணை’ மூலம் விளக்குகிறார். மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் 14 பணிப்பிரிவுகள் இருந்ததாக ஏ.வி ஜெயச்சந்திரன்(1985:145-146) குறிப்பிடுகிறார்.

கோயில்களில் பணியாளர்களின் எண்ணிக்கை அவற்றின் வருவாய்க்கு ஏற்ப அமைகின்றன. ஆய்வுக்களப்பகுதியில் திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலிலும், ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் கோயிலிலும் பல்வேறு பணியாளர்கள் உள்ளனர். ஆய்வுப்பரப்பில் ஒரு பணியாளரைக் கொண்ட கோயில்களே எண்ணிக்கையில் அதிகமாக உள்ளன.

கோயில் பணியாளர்களைப் பிராமணப் பணியாளர்கள், பிராமணர் அல்லாதார் என வகைப்படுத்தலாம். கோயில் கருவறை, மடைப்பள்ளிப்

பணிகளைப் பிராமணப்பணியாளர்கள் மட்டுமே செய்கின்றனர். சிவத்தலங்களில் கருவறைப் பணிக்காக சிவாச்சாரியார்களும் வேதம் ஓதுவதற்காக சுமார்த்தப் பிராமணர்களும் நியமிக்கப்படுகிறார்கள். வைணவத் தலங்களில் பாஞ்சராத்திரம் அல்லது வைகானச ஆகமங்களைப் பின்பற்றும் பிராமணர்கள் கருவறையிலும் மடைப்பள்ளியிலும் பணியாற்றுகிறார்கள். பிறவேலைகளில் பிராமணர் அல்லாதார் பணியாற்றுகின்றனர். ஆய்வுப்பகுதியில் பொருளாதார நிலையில் நலிந்த கோயில்கள் பெருமளவில் காணப்படுவதால் இப்பொதுத் தன்மையில் விதிவிலக்குகளும் காணப்படுகின்றன. கோயில் பணியாளர்களை அரசுசார் பணியாளர்கள் அரசுசாராப் பணியாளர்கள் என வகைப்படுத்தலாம். அரசுசார் பணியாளர்கள் கோயில் சடங்கு முறைகளில் பங்கேற்காது அதன் பொருளாதார நடவடிக்கைகளில் மட்டும் பங்கேற்கின்றனர்.

### 4.1.2. **மரியாதை வகைகள்**

கோயில்கள் பலவகையான மரியாதைகளை அடியவர்களுக்கு வழங்குகின்றன. கோயிலின் வருவாய்க்கு ஏற்ப இம்மரியாதைகள் அமைகின்றன. வருவாய் நிறைந்த கோயில்களில் நாள்வழிபாட்டின் போது மரியாதை வரிசை முறைகள் பின்பற்றப்படுகின்றன. ஒவ்வொரு பணியாளருக்கும் ஓர் ஆண்டில் குறிப்பிட்ட நாட்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. திருவிழாவின் தன்மைக்கேற்பவும் மரியாதை பெறும் அடியவர்கள் அமைகின்றனர். எடுத்துக்காட்டாக ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் கோயிலில் தேர்த்திருவிழாவின் நிறைவின் போது அவ்வூர் காவல்துறை அதிகாரி மரியாதை பெறுகிறார்.

**பரிவட்டம் கட்டுதல்**

திருவிழாவினை நடத்தியவர்கள் அல்லது அதற்கு உறுதுணையாக

இருந்தவர்களுக்குக் கோயில் பரிவட்டம் கட்டி மரியாதை செய்கின்றது. 'பரிவட்டம் கட்டுதல்' என்பது பட்டுத் துணியால் மரியாதைக்குரியவருக்குத் தலைப்பாகை கட்டுவதாகும். 'தலைப்பாகை' என்பது அதிகாரத்தின் குறியீடாகும். கோயிலில் இந்த மரியாதையே மிக உயர்ந்ததாகக் கருதப்படுகின்றது.

**தீர்த்தம், திருநீறு வழங்குதல்**

சைவக் கோயில்களில் இறைவனை வழிபடும் அடியவர்களுக்கு மரியாதை செய்வதற்காகத் திருநீறும் சேசப்பிரசாதமும் (இறைவன் உண்டு எஞ்சிய உணவும் இறைவன் உடுத்திக் களைந்த மாலைகளும்) வழங்கப்படுகின்றன. வைணவத் தலங்களில் தீர்த்தமும், 'திருத்துழாய்' என அழைக்கப்படும் துளசியும், வழங்கப்படுகின்றன.

**திருமாளிகை அனுப்புதல்**

கோயில் பணி செய்தவரை மேளதாளங்களுடன் அவரது இல்லத்திற்கு அழைத்துச் செல்வது 'திருமாளிகை அனுப்புதல்' என அழைக்கப்படுகின்றது. இது வைணவக்கோயிலுக்கு மட்டுமேயுரிய மரபாகும். ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் கோயிலில் 'அரையர் சேவையின்' போது சேவை நிகழ்த்திய அரையரைக் கோயில் நிர்வாகத்தினர் மேளதாளங்களுடன் அவரது இல்லத்திற்கு அழைத்துச் செல்கின்றனர். இக்கோயிலில் கார்த்திகை மாதம் கௌசிக ஏகாதசி அன்று ஏடு வாசித்தல் என்னும் சடங்கு நடைபெறுகின்றது. அன்று 'அண்ணாவி' என அழைக்கப்படுபவர் ஏடு வாசிக்கின்றார். அன்று அவரை மேளதாளங்களுடன் அவரது திருமாளிகைக்கு அனுப்பி வைக்கின்றனர். திருவைகுண்டம் கள்ளப்பிரான் கோயிலில் கார்த்திகை மாதம் சுக்லபட்ச ஏகாதசி நாளன்று நம்பாடுவான் கதை பாடிய அர்ச்சகர் அவரது திருமாளிகைக்குக் கோயில்

மரியாதையுடன் அனுப்பி வைக்கப்படுகிறார்.

ஆதிநாதர் கோயில் தேரோட்டத்திருவிழாவின் போது காவல்துறை அதிகாரி மேளதாளங்களுடன் காவல் நிலையம் வரை அழைத்துச் செல்லப்படுகிறார். ஆனால் இதனைத் திருமாளிகை அனுப்புதல் எனக் குறிப்பிடுவதில்லை.

**சடாரி சாத்துதல்**

வைணவக் கோயிலில் அடியவர்களுக்குத் தினசரி சடங்கின் போது 'சடாரி சாத்துதல்' என்னும் மரியாதை செய்யப்படுகிறது. இறைவனின் திருப்பாதமான சடாரியை அடியவர்களின் தலையில் சிறிது நேரம் வைப்பதைச் சடாரி சாத்துதல் என்கின்றனர். ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் கோயில் சடாரியில் நம்மாழ்வார் உருவம் பொறிக்கப்பட்டிருப்பதால் அச்சடாரி சாத்துதல் மக்களால் மிக மரியாதைக்குரியதாகக் கருதப்படுகின்றது (காண்க ஒளிப்படம் எண்.07.).

**வெற்றிலை, பாக்கு, தேங்காய், வாழைப்பழம் வழங்குதல்**

வருவாய் குறைந்த கோயில்களில் இச்சடங்குமுறை பின்பற்றப்படுகின்றது. அதாவது மரியாதைக்காரருக்கு வெற்றிலை, பாக்கு மட்டும் வழங்கப்படுகின்றன. சில கோயில்களில் இவற்றுடன் தேங்காய் முறியும் வழங்கப்படுவதுண்டு. திருவைகுண்டம் ஏகாந்தலிங்கர் கோயில் வருவாய் குறைந்த கோயிலாகும். இங்கு ஒவ்வொரு ஆண்டும் மார்கழி மாதம் முப்பதாம் நாள் அங்குள்ள பணியாளர்களான நிர்வாகஅதிகாரி, தக்கார், எழுத்தர், அர்ச்சகர், மேளம், நாகசுர கலைஞர் ஆகியோர் மரியாதை பெறுகின்றனர். இவர்கள் அனைவருக்கும் தேங்காய், வெற்றிலை, பாக்கு, பழம் ஆகியன கொடுத்து மரியாதை செய்யப்படுகின்றது.

இவையாவும் சைவ, வைணவக் கோயில்கள் அடியவர்களுக்குச்

செய்யும் மரியாதைகளாகும். ஆய்வுப் பரப்பில் சில கோயில்களில் இப்பொதுவான மரியாதைகளோடு சிறப்பு அல்லது விதிவிலக்கான மரியாதைகளும் வழங்கப்படுகின்றன.

**செங்கோல், பாதம் வழங்குதல்**

தமிழகத்தின் அரசியல் தலைநகர்களாக இருந்த சிவத்தலங்களில் ‘செங்கோல் வழங்குதல்’ என்னும் சடங்கு நிகழ்த்தப்படுகிறது. இது தற்போது கோயில் நிர்வாக அதிகாரிக்குச் செய்யப்படும் மரியாதையாக அமைகின்றது. திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் கோயில் செயல் அலுவலர் செங்கோலைப் பெற்று அதனைக் கையில் ஏந்தியவாறு கோயில் மண்டபத்தை வலம் வருகிறார்(காண்க ஒளிப்படம் எண்.11.). ‘செங்கோல்’ என்பது அரசதிகாரத்தின் குறியீடாகும். (இச்சடங்கு நடைபெறும் முறை இயல் நான்கில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது). மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் ‘செங்கோல் வழங்கும்’ விழாவில் மரியாதை பெற்றவர்களின் வரலாற்றை சி.ஜே.புல்லர் தனது நூலில் குறிப்பிடுகின்றார்.

*‘சித்திரை, ஆவணி மூலத் திருவிழாக்களில் முதன்மை பூசகர்களுக்கு செங்கோல் ஏந்தும் உரிமை இருந்தது. பண்டைக் காலங்களில் மதுரை அரசனே இந்தச் செங்கோலை ஏந்தி வந்திருக்கலாம். நாயக்க ஆட்சிக் கால முடிவில் இந்தப் பொறுப்பை முதன்மைப் பூசகர்கள் பெற்றனர். கோயில் நுழைவு வழக்கின் போது திருக்கோயில் நிர்வாகத்தின் செயல் ஆட்சியாளர் இதை எடுத்துக் கொண்டார். இன்று இந்து அதிகாரியோ, அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட அறநிலையத் துறை அதிகாரியோ, அதன் தலைவரோ இந்தச் செங்கோலை ஏந்துகிறார்’* (1999:96).

**பாதம் வழங்குதல்**

நெல்லையப்பர் கோயிலில் நடத்தப்படும் 'பாதம் வழங்குதல்' என்னும் சடங்கு தக்காருக்கு அளிக்கப்படும் மரியாதையாகக் கருதப்படுகிறது. 'தக்கார்' என்பது மதிப்புறு பதவியாகும். இச்சடங்கன்று தக்கார் கோயில் இறைவனின் பாதத்தைப் பெறுகிறார். (இச்சடங்கு நடைபெறும் முறை இயல் நான்கில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது).

**மடைப்பள்ளி நெருப்பு வழங்குதல்**

இது கோயில், தனது இறந்த பணியாளருக்குச் செய்யும் மரியாதையாகும். இறந்த பணியாளருக்கு அணிவிக்க இறைவன் உடுத்திக் களைந்த மாலையும் பணியாளரது உடலைத் தீ மூட்ட மடைப்பள்ளி அடுப்பிலிருந்து நெருப்பும் வழங்கப்படுகின்றன. கோயிலிலிருந்து பெறப்பட்ட நெருப்பைக் கொண்டே இறந்தவரின் உடல் தீ மூட்டப்படுகிறது. இதுவே கோயில் தமக்குச் செய்யும் மிக உயர்ந்த மரியாதையாகக் கோயில் பணியாளர்களர் கருதுகின்றனர். இது வைணவக் கோயிலுக்கு மட்டுமேயுரிய நடைமுறையாகும்.

மதுரை மீனாட்சியம்மன் கோயில் முதன்மைப் பூசகர் இறந்து விட்டால் பல்லக்கில் உடல் வைக்கப்பட்டுப் பூக்களால் அலங்கரிக்கப்பட்டுத் திருக்கோயிலைச் சுற்றி ஊர்வலம் செல்கிறது. ஆனால் மற்றவர்களுக்குச் சாதாரணப் பாடை நேரடியாகசச் சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்லப்படுகிறது என்கிறார் சி.ஜே.புல்லர்(1999:97). ஆனால் இதனைத் தான் பார்த்ததில்லை என்பதால் இது உண்மைதான் என்று தன்னால் உறுதிகூற முடியவில்லை என்கிறார்.

### 4.1.3. சடங்குகளில் பங்கேற்பு

கோயிலில் நிகழ்த்தப்படும் சடங்குகள், நாடகங்களில் பங்கேற்கும் உரிமை அடியவர்களுக்கு வழங்கப்படுகிறது. திருக்குறுங்குடி நம்பி கோயிலில் கார்த்திகை மாதம் சுக்ல பட்ச ஏகாதசி நாளன்று கைசிகப்புராணத்தை நாடகமாக்குதல் நடைபெறுகிறது. அப்போது கைசிகப் புராணத்தை ஏட்டிலிருந்து வாசிக்கும் உரிமையும் நாடகத்திற்குரிய கதாபாத்திரங்களாக வேடமிடும் உரிமையும் குறிப்பிட்ட குடும்பத்தாருக்கு மட்டுமே உரியதாகும். ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் கோயில் 'மன்னன் மடிபிடி' திருவிழாவில் திருமங்கை மன்னன் சப்பரத்தைத் தூக்கும் உரிமையும் கள்ளர்களாக வேடமிடும் உரிமையும் அவ்வூர்த் தேவர் சாதியினருக்கே வழங்கப்பட்டுள்ளது. திருவிழாக்களில் பங்கேற்க அழைப்பு விடுத்தலும், சடங்கினைத் தொடங்கி வைக்க அனுமதிப்பதும் கோயில், அடியவர்களுக்குச் செய்யும் மரியாதைகளாகும்.

### 4.1.4. மரியாதை வரிசைகள்

அடியவர்கள் மரியாதை செய்யப்படவேண்டிய முறையையும் வரிசையையும் அதற்குரிய காலத்தையும், இடத்தையும் கோயில்கள் திடமாக வரையறுத்துள்ளன. அதாவது இந்தச் சடங்கின் போது இவர் இவ்விடத்தில் வைத்து மரியாதை பெறுவார் எனத் தெளிவாக வகுக்கப்பட்டுள்ளது. மரியாதை பெறுவர்கள் வரிசைமுறையின் அடிப்படையில் 'முதல் மரியாதைக்காரர்', 'இரண்டாம் மரியாதைக்காரர்' என ஒவ்வொரு கோயிலிலும் உள்ளனர். வைணவக் கோயில்களில் மடத்து ஜீயரே முதல் மரியாதைக்குரியவர். அடுத்து கோயில் அர்ச்சகர்கள், கோஷ்டினர், எதிர்க்கோஷ்டியினர் என்ற வரிசையில் மரியாதை அளிக்கப்படுகின்றது.

கோயில்கள் தம் பணியாளர்களுக்கு வருடத்தில் ஒருமுறையோ அல்லது இரு முறையோ மரியாதை அளிக்கின்றன. இந்த மரியாதை கோயில் பணியாளர் இறந்த பின்பும் அவரது உடலுக்கு 'மாலையணிவித்தல்' அல்லது தீ மூட்ட 'நெருப்பு வழங்குதல்' என நீண்டு செல்கின்றது.

'மரியாதை' என்பது நிலமானிய மதிப்பீடுகளில் ஒன்றாகும். கோயில் அல்லது ஊர்களில் மரியாதை அல்லது 'முதல் மரியாதை' பெறுதல் என்பது ஒரு சமூகத் தகுதியாகக் கருதப்படுகிறது. காலனிய ஆட்சிக்காலத்தில் இம்மரியாதை பெறுவதற்காக எல்லா கோயில்களிலிருந்தும் நீதிமன்றங்களில் வழக்குகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. இவை உணர்வு ரீதியாகக் கோயில் மரியாதை மீது அடியவர்கள் கொண்டுள்ள பற்றினைக் காட்டுகின்றன.

### 4.2. அடியவர்களின் கோயிலை நோக்கிய நகர்வு

கோயில் அடியவர்களை நோக்கிச் செல்வது போன்று அடியவர்களும் கோயிலோடு உரிமை கொண்டாடுகின்றனர். அடியவர்கள் கோயிலோடு தம்மை அடையாளப்படுத்த சில வழக்கங்களைக் கடைப்பிடிக்கின்றனர். திருவிழாவின் போது 'கொடித்தடை' கடைப்பிடித்தல், உள்ளூர்த் தெய்வப்பெயரை மக்களுக்குச் சூட்டுதல், கோயில் சடங்கு குறித்த வழக்காறுகளை மனத்தில் கொண்டிருத்தல் என்பன அந்த நடவடிக்கைகளில் சிலவாகும்.

#### 4.2.1. கொடித்தடை

பெருங்கோயில்களில் திருவிழாவின் தொடக்கமாகக் கொடி ஏற்றப்படுகின்றது. கொடி ஏற்றத்திற்குப் பின்னர் தடை செய்யப்பட்ட செயல்கள் 'கொடித்தடை' என அழைக்கப்படுகின்றது. இதனைக் கோயில்

அமைந்துள்ள நிலப்பகுதி மக்கள் மட்டுமே கடைப்பிடிக்கின்றனர்.

1.புலால் உண்ணுதல்

2.வெளியூர் சென்று இரவு தங்குதல்

3.நெல் அவித்தல்

4. எண்ணெய்ச் செட்டியார் 'எள் ஆட்டி' எண்ணெய் எடுத்தல் ஆகியன கொடித்தடையாகக் கருதப்படுகின்றன.

'அவித்தல்', 'ஆட்டுதல்' என்பன உயிர்க் கொலைச் செயல்களாகும். நெல்லை அவித்தலும், எள்ளை ஆட்டுதலும் உயிருள்ள ஒன்றை உயிரற்றப் பொருளாக ஆக்குவதாகும். தெய்வ அருள் வேண்டும் திருவிழா நாட்களில் நெல்அவித்தலையும், எள்ஆட்டுதலையும் கொடித்தடை என்னும் பெயரில் பெருங்கோயில் தடைசெய்துள்ளது எனலாம்.

### 4.2.2. மக்கட்பெயர்

பெருங்கோயில் தெய்வப் பெயரை அப்பகுதியில் வாழ்கின்ற மக்கள் அல்லது கோயிலோடு தொடர்புடைய மக்கள் தம் பெயராகச் சூட்டிக் கொள்கின்றனர். இறைவன் பெயரை ஆண் மக்களுக்கும் இறைவி பெயரை பெண் மக்களுக்கும் சூட்டுவது பொது வழக்கமாகும். ஊர் அடையாளத்தைத் தெளிவாகக் காட்டும் பெயர்களாக அவை உள்ளன.

| மக்கட்பெயர் | வட்டம் | இறைப்பெயர் |
|---|---|---|
| நெல்லைவடிவு, சங்கரவடிவு, | | வடிவு |
| சண்முகவடிவு | நெல்லை | (காந்திமதியம்மன்) |
| குழல்வாய்மொழி(குழலாமணி) | குற்றாலம் | குழல்வாய்மொழி |
| மகரபூஷணம் | தென்திருப்பேரை | மகரநெடுங்குழைக்காதர் |
| வானமாமலை, தோதாத்திரி | நாங்குநேரி | வானமாமலை |
| நாறும்பூநாதன் | திருப்புடைமருதூர் | நாறும்பூநாதர் |

| | | |
|---|---|---|
| கோமதி சங்கர் | சங்கரன்கோவில் | கோமதி, சங்கரநாராயணன் |
| பால்வண்ணம் | கரிவலம் வந்தநல்லூர் | பால்வண்ணநாதர் |

இப்பெயர்களைக் கொண்டு அடியவர்களின் முந்தைய வாழ்விடத்தை அடையாளப்படுத்த முடிகிறது. அடியவர்கள் பெருங்கோயிலை நினைவுபடுத்தும் விதமாக சில வழக்காறுகளைக் கொண்டுள்ளனர். அவை

### 4.2.3. பிறவழக்காறுகள்

#### 4.2.3.1. அளவிடுதல்

வேளாண் பொருட்களை முகந்து அளவிடும் போது ஒன்று என்பதற்குப் பதிலாக உள்ளூர் இறைவன் அல்லது இறைவி பெயரை அழைப்பது சில பகுதிகளில் வழக்கமாக உள்ளது.

இவ்வாய்வுக் களமான நெல்லையில் ஒன்று என்பதற்குப் பதிலாக 'காந்திமதி' என்றும் பாளையங்கோட்டையில் 'கோபாலா' என்றும் வீரவநல்லூரில் 'பூமிநாதா' என்றும் கூறி நெல்லை அளக்கின்றனர். இது வேளாண் மதிப்பீடாகும்.

மக்கள் தம் அன்றாடச் செயல்பாட்டின் போது இறைப் பெயரைப் பயன்படுத்தும் முறையைக் காணமுடிகிறது. மக்கள் தும்மும் போதும் அம்மா, அப்பா என்பதற்குப் பதிலாக இறைவன் அல்லது இறைவி பெயரை உச்சரிக்கின்றனர். உரையாடலின் போது தமது பேச்சின் நம்பகத்தன்மையை அதிகப்படுத்த பெருங்கோயில் தெய்வப் பெயரைப் பயன்படுத்துகின்றனர். எடுத்துக்காட்டாக நெல்லை மக்கள் 'வடிவாள் அறிய....', 'வடிவாள் சத்தியமாக' என்ற தொடர்களைப் பயன்படுத்துகின்றனர். வடிவாள் என்பது தலத்து இறைவி பெயராகும்.

சங்கரன் கோவில் விசத்தன்மை நீங்கும் தலமாக மக்களால் கருதப்படுகிறது. இதனால் விசப்பூச்சிகளான தேள், பாம்பு போன்றவற்றைக் கண்டால் இக்கோயிலுக்குக் காணிக்கை நேர்ந்து வைக்கின்றனர். விசப்பூச்சிகளை அடித்துக் கொல்லும் போது அவை அசையாமல் இருக்க இக்கோயில் இறைவி பெயரான ஆவுடையாள் பெயரைக்கூறி 'ஆவுடையாள் மீது ஆணையிட்டேன்' நகராமல் இரு எனக் கூறுவதுண்டு.

பெருங்கோயில் குறித்த பழமொழிகள், நம்பிக்கைகள், கதைகள், சொல்லாடல்கள் போன்ற வழக்காறுகள் உள்ளூர் மக்களிடம் ஏராளம் காணப்படுகின்றன. இவை பெருங்கோயில் சடங்குகள், கட்டடஅமைப்புகள், உணவுமுறை ஆகியனவற்றை விளக்குவதாக உள்ளன.

### 4.2.3.2. சொல்லடைவு

'குற்றால நாதருக்கும், குழல்வாய்மொழிக்கும்

தீராத தலைவலி, நித்திய கசாயம்'

என்பது குற்றாலநாதர் கோயிலில் படைக்கப்படும் 'சுக்குவெந்நீர்' என்ற மருந்துக்குடிநீர் குறித்த சொல்லடைவு ஆகும். 'வடிவாள் அறிய வஞ்சகம் இல்லை' என்பது நெல்லை பகுதி சொல்லடைவு ஆகும்.

### 4.2.3.3. நம்பிக்கைகள்

திருவிழாவின் போது தெய்வங்கள் பச்சை உடுத்திக் காட்சியளித்தால் பச்சைக் காய்கறிகளும் சிவப்பு உடுத்திக் காட்சியளித்தால் மிளகாய் பயிரும் அவ்வருடம் நன்கு விளையும் என்பது பொதுவான நம்பிக்கையாகும். விவசாயத்திற்கு விதை பாவச் செல்லும் போது பெருமாளின் வாகனமான 'கருடன்' கண்ணில் பட்டால் அவ்வருடம் விளைச்சல் நன்றாக இருக்கும் என்பது நாங்குநேரி மக்களின் நம்பிக்கையாகும். நாங்குநேரித்

தேரோட்டத்தில் முதல் மரியாதை பெறுபவர் அடுத்த ஆண்டு உயிருடன் இருக்கமாட்டார் என்பது போன்ற நம்பிக்கைகளும் காணப்படுகின்றன. சேவல் முருகனின் வாகனம் என்பதால் திருச்செந்தூர்ப் பகுதி தச்சுஆசாரியார் தச்சுக்கழித்தலின் போது பிறபகுதிகளில் நடைபெறுவது போன்று சேவலைப் பலியிடுவதில்லை.

4.2.3.4. **உறவுமுறை**

பெருந்தெய்வத்தோடு அடியவர்கள் ஏதேனும் ஒரு உறவு முறையினை ஏற்படுத்திக்கொள்கின்றனர். இதன் காரணமாகச் சில கதைகளை உருவாக்கி அதனைச் சடங்குகளாகவும் நிகழ்த்துகின்றனர்.

நாங்குநேரி வானமாமலைப் பெருமாள் கோயிலை பிராமணத் துறவியான ஜீயர் நிர்வாகம் செய்து வருகிறார். இவர் அக்கோயில் இறைவனுக்கு மாமனார் உறவு உடையவராகக் கருதப்படுகிறார். இவர்கள் இந்த உறவு பெற்றதை விளக்கும் கதையொன்று இப்பகுதி மக்களிடம் வழக்கிலுள்ளது.

*'கோயில் தாயாரான ஸ்ரீவரமங்கை சிலகாலத்திற்கு முன்னர் காணாமல் போய்விட்டார். இத்தாயார் ஜீயர் கனவில் தோன்றி, தாம் திருப்பதியில் இருப்பதாகவும் தன்னை இத்தலத்துத் தெய்வநாயகனுக்குத் திருமணம் செய்து வைக்கும்படியும் அறிவித்தார். ஜீயர் கனவிலிருந்து விழித்தெழுந்து திருப்பதி சென்று தாயாரை அழைத்து வந்து அவரைத் தெய்வநாயகனுக்குத் திருமணம் செய்து வைத்தார். இதனால் ஜீயர் கோயில் தாயாருக்குத் தந்தை உறவும் தெய்வநாயகனுக்கு மாமனார் உறவும் பெற்றார்' (பேட்டி: எத்திராஜ், நாங்குநேரி. நாள் 2002)*

இக்கதை நிகழ்வினை உறுதிப்படுத்தும் விதமாக ஜீயர் தமது மாளிகை (மடம்)யில் தாயாருக்குச் 'சீர்வரிசை கொடுத்தல்' என்னும்

சடங்கினை நிகழ்த்துகிறார். இச்சடங்கு ஒவ்வோர் ஆண்டும் சித்திரை மாதம் பிரம்மோற்சவத் திருவிழாவின் ஒன்பதாம் நாள் காலையில் சடங்காக நிகழ்த்தப்படுகிறது.

தஞ்சை மாவட்டம் திருக்கண்ணபுரம் சவுரிராஜப்பெருமாளை காரைக்காலை அடுத்த திருமலைராயன் பட்டினத்து மீனவர்கள் 'மாப்பிள்ளை' என்ற உறவு முறையுடனே அழைக்கின்றனர். இறைவனான சவுரிராஜப்பெருமாள் மாசி மாதம் மக நட்சத்திரத்தில் காரைக்காலை அடுத்த திருமலைராயன் பட்டினத்திற்குக் கடலாட எழுந்தருளுகின்றார். *'அப்போது அங்குள்ள மீனவர்கள் அவரைத் தங்களது இருப்பிடத்திற்கு அழைத்துச் சென்று 'மாப்பிள்ளை, மாப்பிள்ளை' என்று அழைக்கின்றனர். மேலும் பரதவர்களில் பெண்கள் இவ்வூருக்குப் பெருமாள் சப்பரம் வரும் போது நேர் எதிரே நின்று வழிபடாமல் தெருவின் இருபக்கங்களிலும் மறைந்திருந்து பெருமாளை வழிபடுகின்றனர்'* (தொ.பரமசிவன்:2001:167). வாழ்வியல் நெறிமுறை வழிபாட்டுச் சடங்கிலும் பிரதிபலிக்கிறது எனலாம்.

இறைவன், இறைவியுடன் உணர்வு ரீதியாக ஓர் உறவினை ஏற்படுத்திக் கொள்ள இவ்வாறான கதைகளை உருவாக்கி அது சார்ந்த சடங்குகளையும் நிகழ்த்துகின்றனர் எனலாம். இனி, கோயில் பணிகளைச் செய்வதற்காக மக்கள் ஏற்படுத்திக் கொண்டுள்ள அமைப்பினைக் காண்போம்

### 4.2.3.5. மண்டகப்படிகள்

பெருங்கோயில் தனது திருவிழாக்களைச் சிரமமின்றி நடத்த அதனைப் பல்வேறு சிறுசிறு கூறுகளாகப் பிரித்து ஒவ்வொரு கூறின் பணியையும் ஒரு தனியன் அல்லது சாதியத் திரளிடம் ஒப்படைத்துள்ளது. இவ்வாறான பொறுப்புக்களை ஏற்றுக் கொண்டவர்கள் 'கட்டளைதாரர்கள்', 'மண்டகப்படிதாரர்கள்' என அழைக்கப்படுகின்றனர். இந்தப் பணிகளைச்

செய்பவர்கள் தனிநபர், சாதித்திரள், ஊர்மக்கள், வியாபாரிகள், அரசாங்க அலுவலர்கள் என அமைகின்றனர். கோயிலின் கட்டளைகளை நிறைவேற்ற மண்டபங்கள் கட்டப்பட்டுள்ளன. ஆய்வுப்பகுதியில் திருச்செந்தூர் சுப்பிரமணிய சுவாமி கோயிலே எண்ணிக்கையில் அதிகமான சாதிய ரீதியிலான மண்டபங்களைக் கொண்டுள்ளது. இந்த மண்டபங்கள் கோயிலைச் சுற்றி அல்லது தெய்வம் பயணம் செய்யும் வழியில் அமைக்கப்பட்டுள்ளன.

நெல்லையப்பர் ஐப்பசி மாதத் திருக்கலியாணச் சடங்கில் இறைவிக்கு காட்சி கொடுத்து இறைவியுடன் கோயிலுக்குத் திரும்பும் வழியில் மண்டகப்படிகள் நிறைய உள்ளன. ஆசாரியார், செட்டியார், பிள்ளைமார், சிவகாசி நாடார், ஆயிரவைசியச் செட்டி, நாவிதர் எனச் சாதிய ரீதியில் மண்டபங்கள் அமைந்துள்ளன. பாபநாசர் கோயிலில் சித்திரைத் திருவிழாவினை நடத்த 'சேனைத்தலைவர் மண்டபம்' உள்ளது. ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் கோயிலில் ஐந்தாம் நாள் திருவிழா நடத்த யாதவர் மண்டபம் உள்ளது.

#### 4.2.3.6. **ஊர்ப்பெயர்கள்**

பெருங்கோயிலோடு தொடர்புடைய பெயர்கள் சில இடங்களுக்குச் சூட்டப்பட்டுள்ளது. திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலின் அபிசேகத்திற்குரிய கால்நடைகளை வளர்த்த இடம் 'அபிசேகப்பட்டி' எனப் பெயரிடப்பட்டுள்ளது. இது போன்று அபிசேகப்பாலிற்காக விடப்பட்ட இடம் 'பால்கட்டளை' என்றும் பெயரிடப்பட்டுள்ளது.

#### 4.2.3.7. **கோயில் வருவாயில் பங்கு**

கோயில் வருவாயில் பங்கேற்கும் உரிமை அடியவர்களுக்கு

வழங்கப்பட்டுள்ளது. நான்குநேரி வானமாமலைக் கோயிலின் தேரோட்டத்தில் போது முதல் தேங்காயை விடலை போடும் உரிமையைத் தேவர் சாதியினர் பெற்றுள்ளனர். அதனை எடுத்துக்கொள்ளும் உரிமையை அவ்வூர்க் கோனார் சாதியைச் சார்ந்த குடும்பம் ஒன்றிற்குக் கோயில் வழங்கியுள்ளது.

#### 4.2.3.8. கோயில் உணவில் பங்கு

கோயிலில் நாள்தோறும் படைக்கப்படும் உணவில் பணியாளர்களுக்குப் பங்கு பிரிக்கப்பட்டுள்ளது. ஆதிநாதர் கோயிலில் ஆதிநாதர், தாயார், நம்மாழ்வார் ஆகியோருக்குத் தோசை, தயிர்ச்சாதம், அத்தாளதோசை, வடை, அப்பம் ஆகியன நாள்தோறும் படைக்கப்படுகின்றன. இவற்றில் தோசை ஆதிநாதர்கோயில் அர்ச்சகர், மடைப்பள்ளிப் பணியாளர் ஆகிய இருவரும் நபருக்கு இரண்டு வீதம் பங்கிட்டுக் கொள்கின்றனர். தயிர்ச்சாதம் நம்மாழ்வார் அர்ச்சகர், கோஸ்டி, எதிர்க்கோஷ்டி ஆகியோர் பங்கிட்டுக் கொள்கின்றனர். இவ்வாறு படைப்புப்பொருள்கள் அனைத்தும் பங்கிட்டுக்கொள்ளப்படுகின்றன. இதனைப் பணியாளர்கள் மரியாதைகலந்த உரிமைகளாகக் கருதுகின்றனர்.

### 4.3. முடிவுரை

கோயிலுக்கும் அடியவர்களுக்கும் இடையிலான உறவு இருவழித் தன்மை உடையதாக உள்ளது. அதாவது அடியவர்களைத் தம்முடன் இணைத்துக் கொள்ள கோயில்கள் சில சமரசங்களைச் செய்கின்றன. கோயிலோடு தம்மை இணைத்துக் கொள்ள சில சடங்கு முறைகளை அடியவர்கள் செய்கின்றனர். இது இருவருக்கும் இடையில் நிலவும் இருவழி உறவினைக் காட்டுகிறது.

# ஆய்வு முடிவுரை

இவ்வாய்வு திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்களின் பெருந்தெய்வக் கோயில்களில் காணப்படும் உள்ளூர் மரபுகளை முன்னிலைத் தரவுகளாகக் கொண்டுள்ளது. இந்நிலப்பகுதியின் ஊடாகப் பாயும் தாமிரபரணி ஆற்றின் இருகரைகளிலும் அமைந்துள்ள கோயில்களும் இதன் துணை ஆறுகளான கட(னை)னா, சிற்றாறு, தென்பகுதியில் ஓடும் நம்பியாறு ஆகிய ஆற்றங் கரைகளில் அமைந்துள்ள கோயில்களும் ஆய்வுக் களமாக அமைந்துள்ளன. இக்கோயில்களிலிருந்தே ஆய்வுக்குரிய தரவுகள் சேகரிக்கப்பட்டுள்ளன. இங்கு கொடுக்கப்படும் முடிவுகளும் அக்கோயில்களுக்குரியதாக அமைகின்றன.

நெல்லை, தூத்துக்குடி அகிய இரு வருவாய் மாவட்டங்களிலும் தாமிரபரணி பாயும் நிலப்பகுதியினை ஒரு ‘பண்பாட்டுப் பகுதி’(culture area)’ எனலாம். *“ஒத்த பண்பாட்டுக் கூறுகள் காணப்படும் நிலத்தைப் பண்பாட்டுப் பகுதி”* என அழைக்கலாம் என்கிறார் ஹெர்ஸ்கோவிட்ஸ் ஜே.மெல்வில் (Herskovits .J. Melville:1969:387). மேலும் அப்பகுதியைப் *‘பண்பாட்டு மையம்’, ‘பண்பாட்டு விளிம்பு’* என இரண்டாக அவர் வகைப்படுத்துகிறார் (1969:408). ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள கோயில்கள் முதல் வகையான பண்பாட்டு மையத்தில் அமைந்துள்ளன.

பொதுவாக, தமிழகத்தின் ஆய்வுத்துறைகளில் கோயில் ஆய்வு என்பது வரலாற்றுத் துறை சார்ந்ததாக அமைந்திருந்தது. பின்னர் வந்த தமிழ்த்துறை கோயில் ஆய்வுகளும் அவ்வாறே அமைந்தன. ஆனால் அவை கோயில் சார்ந்த உள்ளூர் மரபுகள் ஒன்றிரண்டை மட்டும் பதிவுசெய்ததோடு அமைந்துவிட்டன. இது கோயில் ஆய்வின் ஒரு புறம். உள்ளூர் நாட்டார் மரபுகளைத் தேடும் நாட்டார் வழக்காற்றியலர், பெருங்கோயில்கள் நாட்டார் மரபிற்குப் புறம்பானவை என்ற தவறான

கருத்தைக் கொண்டிருந்தனர். இதனால் அவர்களது கவனம் பெருங்கோயிலில்களின்மீது படமறுத்தது. இது,கோயில் ஆய்வின் வேறொரு பக்கம். இந்த இருவகையான கருத்தோட்டங்களையும் இணைக்கும் வகையில் இந்த ஆய்வேடு சில முடிவுகளைப் பெற்றுள்ளது.

## கோயில் வகைகள்

ஆய்வுக்களத்தில் கோயில்கள் அமைந்துள்ள நிலப்பகுதி பரப்பளவில் தமிழ்நாட்டின் ஒரு சிறிய பகுதியாகும். இங்கு மழையளவு மிகக் குறைவு. இருப்பினும் இங்கு பாயும் ஆறுகள் மற்றும் அவற்றின் துணையாறுகள், அவற்றிலிருந்து வெட்டப்பட்ட கால்வாய்களின் எண்ணிக்கை ஆகியவை காரணமாக இப்பகுதியில் ஆண்டு முழுவதும் வேளாண்மை நடைபெறுகிறது. இங்குள்ள கோயில்களின் எண்ணிக்கையைப் பொருத்தமட்டில் பிறபகுதிகளோடு ஒப்பீட்டளவில் மிகுதியே. இக்கோயில்கள் நிகழ்காலத்தில் பல்வேறுபட்ட பொருளாதார நிலைகளில் வாழ்கின்றன. அவற்றைப் பொருளாதார நிலையினைக் கொண்டு பின்வருமாறு பிரித்துப்பார்க்கலாம்.

### அழிந்த கோயில்கள்

ஆய்வுப்பகுதியில் இருந்த சில கோயில்கள் கட்டட நிலையில் முற்றிலும் அழிந்து விட்டன. இவை வெள்ளம், புயல் போன்ற இயற்கைச் சீற்றங்களினால் அழிந்தவையல்ல. வழிபடுவோரும், வழிபாடுகளும் அற்ற நிலையில் பேணுகையின்றி அழிந்தவையாகும். அவை இருந்ததற்கான சுவடுகள் மட்டும் தற்போது காணப்படுகின்றன. ‘கோயில் மாநகரம்’ எனக் கருதப்படும் சேரன்மாதேவியில் ஊரின் நடுவில் கோயில் ஒன்று இருந்ததற்கான சுவடுகளாக அக்கோயிலின் கல்தூண்கள் மட்டும் உடைந்த நிலையில் சிதறிக் காணப்படுகின்றன. அதே தலத்தில் இராஜகோபாலசுவாமி என அழைக்கப்படும் கோயிலின் கோபுரம் அழிந்த நிலையில் உள்ளது.

## வழிபாடு நின்றுபோன கோயில்கள்

ஆய்வுப்பகுதியில் சிலகோயில்கள் வருவாய்யின்மை காரணமாக அற்றநிலையால் வழிபாடுகளோ, சடங்குகளோ நடைபெறாத நிலையில் உள்ளன. இக்கோயில்கள் தற்போது ஊருக்குப் புறம்பாக அமைந்துள்ளன. முன்பு இக்கோயில்கள் கட்டப்பட்ட போது அவை குடியிருப்புகளுக்கு நடுவிலேயே எழுப்பப்பட்டிருக்க வேண்டும். ஏற்படுத்தப்பட்ட குடியிருப்புகள் தற்போது அழிந்து போன காரணத்தால் கோயில் ஊருக்குப் புறம்பாக அமைந்துள்ளது போல் தோற்றமளிக்கின்றது. இங்கு வழிபாடுகளோ, சடங்குகளோ நடத்தப்படுவதில்லை.

ஆழ்வார்குறிச்சி (வன்னியப்பர்), திருவாலீஸ்வரம் (வாலீஸ்வரர்), தருவை (வாளவல்ல பாண்டீசுவரர்), சேரன்மாதேவி (பக்தவத்சலர்), தென்திருப்பூவணம் (பூவணநாதர்) ஆகிய தலங்களில் அமைந்துள்ள கோயில்களை இதற்கு உதாரணமாகக் கொள்ளலாம். இக்கோயில்கள் அனைத்தும் ஊருக்குப் புறம்பாகவே அமைந்துள்ளன. இக்கோயில்களில் திருவாலீஸ்வரர், பக்தவத்சலர் ஆகிய இருகோயில்கள் மட்டும் அவற்றின் கட்டடக்கலைச் சிறப்பிற்காக மையஅரசின் தொல்லியல் துறையினரால் புதுப்பிக்கப்பட்டுப் பாதுகாக்கப்படுகிறன. மற்ற கோயில்கள் முட்செடிகள் வளர்ந்து கட்டடங்கள் அழிந்து கொண்டிருக்கும் நிலையிலேயே உள்ளன.

## நிலைகுன்றிய கோயில்கள்

ஆய்வுப்பகுதியில் அமைந்துள்ள சில கோயில்களில் நாள் வழிபாடுகள் நடைபெறுகின்றன. ஆனால் இக்கோயில்களுக்கு வந்து வழிபடுவோர் மிகமிகக் குறைவு. இக்கோயில்களைச் சுற்றியிருந்த அக்கிரகாரங்கள் ஆளரவமற்றுப் போய் விட்ட காரணத்தால் கோயில்கள் வழிபடுவோர் இன்றி உள்ளன. ஆண்டு தோறும் நடைபெறும் குறிப்பிட்ட திருவிழாவிற்கு மட்டும் மக்கள் பெருமளவில் வருகின்றனர். அத்தாளநல்லூர்

‘ஆனைகாத்தருளிய பெருமாள்’, திருப்புடைமருதூர் ‘நாறும்பூ நாதர்’ கோயில்களை இதற்கு எடுத்துக்காட்டாகக் குறிப்பிடலாம்.

அத்தாளநல்லூர் ஆனைகாத்தருளிய பெருமாள் கோயிலின் தேர்த்திருவிழாவிற்கும், திருப்புடைமருதூரில் நடைபெறும் தைப்பூசத் திருவிழாவிற்கும் அக்கோயிலைச் சுற்றியுள்ள கிராமமக்கள் பெருமளவில் வந்து பங்கேற்கின்றனர்.

**நிலைகுன்றி வரும் கோயில்கள்**

ஆய்வுக்களத்தின் சிலகோயில்கள் கடந்த பதினைந்து ஆண்டுகளாக நலிவடைந்த நிலையினை நோக்கி வருகின்றன. வருவாயும், பணியாளர்களும் நிறைந்திருந்த இக்கோயில்களில் தற்போது வருவாய் குறைந்த காரணத்தினால் குறைந்த எண்ணிக்கையிலான பணியாளர்களே உள்ளனர். பாளை இராசகோபாலன் கோயில், மன்னார்கோயில் இராசகோபாலன் கோயில் ஆகிய கோயில்களை இவ்வகையில் அடக்கலாம்.

**வாழும் கோயில்கள்**

ஆய்வுப்பகுதியில் சிலகோயில்களில் நாள்வழிபாடும், ஆண்டுத் திருவிழாக்களும் இன்றுவரை சிறப்பான முறைகளில் நடத்தப்படுகின்றன. இங்கு வழிபடவரும் அடியவர்களின் எண்ணிக்கையும் நிறைந்தளவில் உள்ளன. குற்றாலம் (குற்றாலநாதர்), தென்காசி (காசிவிசுவநாதர்), நெல்லை (நெல்லையப்பர்), ஆழ்வார்திருநகரி (ஆதிநாதர்), திருவைகுண்டம் (கள்ளப்பிரான்), ஆத்தூர் (சோமநாதர்) போன்ற கோயில்களே இவ்வகையான கோயில்களுக்கு எடுத்துக்காட்டுகளாம்.

ஒத்த பண்பாட்டுப்பகுதியில் அமைந்துள்ள கோயில்களில் சில செல்வச் செழிப்புடனும் சில நிலைகுன்றியநிலையிலும் சில அழிந்தும் வெவ்வேறுபட்ட நிலைகளில் இருப்பதற்கான காரணங்கள் யாவை? சில

கோயில்கள் மட்டும் தம் அடியவர்களுடன் கொண்டுள்ள உறவினை எவ்வாறு தக்கவைத்துக் கொண்டன? என்ற கேள்விகளுக்கு இவ்வாய்வேட்டுத் தரவுகள் விடையளித்துள்ளன.

இவ்வாய்வேடு முன்னுரை முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களைக் கொண்டுள்ளது. முதல் இயல் முதல் நான்காம் இயல் வரையிலான நான்கு இயல்களும் களப்பணி செய்து பெறப்பட்ட தரவுகளை முதன்மைச் சான்றாதாரமாகக் கொண்டு ஆய்வு முடிவுகளைப் பெற்றுள்ளன.

முதல் இயல் தெய்வப்பெயரிடுதலில் காணப்படும் உள்ளூர் மரபினை எடுத்துரைத்துள்ளது. பக்தி இயக்கத்தின் விளைவாகத் தமிழகத்தில் பெருங்கோயில் தெய்வங்கள் தனித்த பெயர்கொண்டு அடையாளம் சுட்டப்பட்டன. பெருங்கோயில்கள் நிலவுடைமை நிறுவனம் என்பதை வெளிப்படுத்துவதாக நிலம் என்னும் பொருளைக் குறிக்கும் சொற்களிலும் பயிரின் வண்ணத்தைக் குறிக்கும் சொற்களிலும் தெய்வங்கள் பெயரிடப்பட்டுள்ளன. ஆய்வுக்களம் வரலாற்றில் சேர, சோழ, பாண்டிய மன்னர்களாலும் பின்வந்த நாயக்கர் மன்னர்களாலும் ஆளப்பட்டது. இதன் காரணமாக சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் இயற்பெயர்களும், குலப்பெயர்களும், பட்டப்பெயர்களும், அரசியர் பெயர்களும் தெய்வங்களுக்குச் சூட்டப்பட்டுள்ளன.

இடப்பெயரைத் தெய்வப்பெயராகச் சூட்டுவதில் வைணவம் தனிக்கவனம் செலுத்தியுள்ளதை ஆய்வுத் தரவுகள் வெளிப்படுத்துகின்றன. சைவத்தில் இம்முறை அரிதாகவே உள்ளது. வைணவம் தான் சார்ந்துள்ள மண்ணின் மீது நெருக்கமான உறவினை ஏற்படுத்த இவ்வகையான பெயரிடு முறையினைக் கடைப்பிடிக்கிறது எனலாம். இடம்சார்ந்து பெயரிடுதல் என்பதன் தோற்றம் நாட்டார் மரபாகும்.

பிராமணர்களால் பூசைபெறும் பெருங்கோயில் பண்புகளில் ஒன்று அது நாட்டின் வடபகுதியை உயர்ந்ததாக மதிப்பதாகும். இப்பண்பு கோயில் தெய்வப் பெயரிடுதலிலும் காணப்படுகிறது. கோயில்கள் வடமொழியைப் புனிதமாகக் கருதும் பிராமணர்களால் பூசை செய்யப்படுவதாலும் அவை பிராமணர்களின் ஆதிக்கத்தில் இருப்பதாலும் அங்குத் தமிழ்ப் பெயர்களுக்குச் சமமான வடமொழிப்பெயர்களையும் சூட்டியுள்ளனர். வடமொழிப்பெயர்கள் பொதுவாக மக்கள் வழக்கில் இடம்பெறுவதில்லை. அவை பிராமணப் பணியாளர்களிடமும், தலபுராணங்களிலும் மட்டுமே பேசப்படுகின்றன.

கோயில்கள் தமது இருப்பினைப் புராணங்கள், பழமரபுக்கதைகள், கதைகள் வழியாக வெளிப்படுத்துகின்றன. இக்கருத்தினை இவ்வாய்வேட்டின் இரண்டாம் இயல் விளக்கியுள்ளது. கோயில் புராணங்கள் வெளிப்படுத்தும் கருத்துக்கள் பெரும்பான்மையாகப் பிராமணச் சார்புடையவையாகவே உள்ளன. இக்கதையாடல்கள் நீர்வளம் பெருக்கி நாடு ஆக்கிக் கோயில் கட்டிய வரலாற்று நிகழ்வுகளையும் ஆற்றங்கரைக் கோயில்கள் வெள்ளத்தால் மூழ்கியதையும் எடுத்துரைக்கின்றன. பிராமணர்களின் 'அகமண' உறவு முறை மாற்றம் போன்ற நுட்பமான பண்பாட்டு நிகழ்வுகளையும் தமக்குள்ளாகப் பொதிந்து வைத்துள்ளன. பிராமண மேலாண்மையை எடுத்துரைக்கும் கதைகளே தலபுராணங்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

தலபுராணங்களில் தலம், தீர்த்தம், மூர்த்தி ஆகிய மூன்றும் போற்றப்படுவதோடு இக்கதைகள் யாவும் 'வாய்மொழி மரபைச் சார்ந்தவை' எனக் கூறுகின்றன. கோயில்களின் காலத்தைத் தொன்மையானதாகக் காட்ட புராணங்கள் இக்கதைக் கூறினைப் பயன்படுத்துகின்றன. பெருங்கோயில்கள் தீட்டுக் கோட்பாட்டைக் கடைப்பிடிக்கும்

நிறுவனமாதலால் அவை 'தெய்வங்கள் விண்ணிலிருந்து இறங்கிப் பூமிக்கு வந்தவை' என்ற கதைக் கூறினைப் புராணங்களில் ஏற்படுத்தியுள்ளன. கோயில்கள் தம்மைச் சுற்றியுள்ள ஊர்க்குடிகளைத் தம்முடன் நெருக்கமாக இணைத்துக்கொள்ள விலங்கு, மனிதன், அரசன், எளிய- மனிதர் ஆகியோருக்கு முக்தியளித்ததான (அருள் செய்ததான) கதைகளைப் படைத்துள்ளன. கோயில் குறித்து மக்கள் கொண்டுள்ள நாட்டார் கதைகள் பண்பாட்டு அசைவுகளை வெளிப்படுத்துவனவாக உள்ளன.

பெருங்கோயில்களில் ஆகம அடிப்படையிலான சடங்கு முறைகளோடு 'குறவன் கொண்டை சாத்துதல்', 'வெந்நீர் திருமஞ்சனம்', 'வளைகாப்புச் சடங்கு' போன்ற உள்ளூர் மரபிலான சடங்குகளும் நடத்தப்படுகின்றன. இச்சடங்கு முறைகள் குறிப்பிட்ட அடியவர் திரள் ஒன்றினைக் கோயிலோடு நெருக்கமாக இணைத்துக் கொள்ள உதவுகின்றன. இந்த உள்ளூர்ச் சடங்குகளிலே மக்களின் பங்கேற்பு உணர்வு ரீதியில் ஆர்வமுடன் இருப்பதைத் தரவுகள் வெளிப்படுத்துகின்றன. பெருங்கோயில்களில் பொதுக்கதையாடல்கள் சில உள்ளூர்த் தன்மையுடன் நிகழ்த்தப்படுகின்றன. இதனைச் 'சடங்குகளும் உள்ளூர் மரபுகளும்' என்ற மூன்றாம் இயல் விளக்கியுள்ளது. பெருங்கோயில்களில் நிகழ்த்தப்படும் சடங்குகளில் பெரும்பான்மையானவை 'கோயில்கள் நிலவுடைமை நிறுவனம்' என்ற கருத்திற்கு வலுசேர்ப்பனவாகவே அமைகின்றன.

ஆய்வேட்டின் நான்காம் இயல் (கோயில்களும் அடியவர் வாழ்வியலும்) கோயிலுக்கும் அடியவர்களுக்கும் இடையிலான உறவு இருவழித் தன்மையுடையதாக உள்ளதை எடுத்துரைக்கின்றது. அடியவர்களுக்காகக் கோயில் பண்பாட்டுச் சமரசங்களைச் செய்து கொண்டிருப்பது போன்று அடியவர்களும் கோயிலுடன் தங்களை இணைத்துக் கொள்ள சில வழக்கத்தைக் கடைப்பிடிக்கின்றனர்.

‘கொடித்தடையைக் கடைப்பிடித்தல்’, ‘திருவிழாக் கட்டளைகள் அமைத்தல்’, ‘கோயில் மரியாதையை மதித்தல்’, ‘கோயில் குறித்த வழக்காறுகளை அடுத்த தலைமுறைக்கு எடுத்துச்செல்லுதல்’ ஆகியன அவ்வழக்கங்களாம்.

*“வழிபடுமிடங்களாகச் சைவ, வைணவக் கோயில்கள் சிறப்புப் பெற்றிருந்ததையும் இந்த வழிகளில் நம்பிக்கை கொண்டிருந்தவர்கள் விளக்கெரிப்பதற்கும் வேறுவகையான அறப்பணிகளுக்கும் ஈடுபாட்டுடன் கொடைகளை வாரி வழங்கியிருந்ததையும், பக்தி இயக்கம் போன்ற உணர்வுமிக்க வீச்சுடன் வழிபடுவோர் கடவுள்களோடு ஒன்றிக் கிடந்ததையும் திருமுறைகள், பிரபந்தம் போன்ற பாடல்களில் நெக்குருகப்பாடியிருந்ததையும் கிடைத்திருக்கின்ற பதிவுகளும் சான்றுகளும் தெளிவாகவே காட்டுகின்றன என்பது உண்மை தான் என்றாலும் தஞ்சைப் பெரிய கோயில், கங்கை கொண்ட சோழபுரம், தாராசுரம் போன்ற மையக் கோயில்கள் மட்டுமன்றி வேறுபல உள்ளூர்க் கோயில்களும் காலப் போக்கில் வழிபாடின்றி, வழிபடுவோரின்றிப் புறக்கணிக்கப்பட்டுக் கிடந்தது ஏன் என்பது புலப்படாமலேயே இருக்கிறது’* என்கிறார் மே.து.ராசுகுமார். மேலும் அவர் *நிலவுடைமைப் பிரிவினர் நாட்டார் கடவுளை வழிபடும் கீழ்த்தட்டு மக்களுடன் சமூக-பொருளிய இணக்கம் இல்லாத போது இது இயற்கைதான்’* என்கிறார் (2004:204).

இதற்கான காரணத்தைப் பண்பாட்டு வழியில் இவ்வாய்வேடு ஆராய்ந்துள்ளது.

பெருங்கோயில் அதிகாரம் என்பது அரசதிகாரத்தோடு தொடர்புடையது என்பதை முன் இயல்களில் கண்டோம். கோயில் வளாகத்தில் அரசதிகாரம் போன்று ஆன்மீக அதிகாரமான மூலத்திருமேனியைத் தொடும் தனியுரிமை பிராமணர்களுக்கு மட்டுமே வழங்கப்பட்டது. எனவேதான் கோயிலைத் தொட்டு எடுக்கப்பட்ட குடியிருப்புகள் ‘அக்கிரகாரம்’ என்னும் பெயரில்

பிராமணர்களுக்கு அளிக்கப்பட்டது. இது காலனியக் காலத்திற்கு முந்தைய வரலாறாகும். காலனிய ஆட்சியின் தொடக்கம் முதல் ஆட்சியாளர் புறமதத்தவர் என்பதால் கோயில் தன் அதிகாரத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக இழக்கத் தொடங்கியது. இதன் விளைவாகப் பிராமணர்கள் கோயில் உழுகுடிகளிடமிருந்து முன்புபோல் தங்கள் வருவாயினைப் பெறமுடியாமல் தவித்தனர். பெருங்கோயில் உடைமை சார்ந்து அரசு நிலஉச்சவரம்புச் சட்டம், நிலச்சீர்திருத்தச் சட்டம் போன்ற பல்வேறு வகையான கட்டுப்பாடுகளை அரசு சட்டங்களாக்கியது. அரசு *"கி.பி 1817 முதல் பல சட்டங்களை இயற்றியது. அவற்றுள் குறிப்பிடத்தக்கது 1927 இல் இயற்றப்பட்ட சென்னை இந்து அறநிலையத் துறைச் சட்டம்"* (Chandra Mudaliar:1976:22-81) ஆகும். விடுதலைப் போராட்டக் காலத்திலும் நாட்டு விடுதலைக்குப் பிறகும் நிலக்குத்தகைச் சட்டங்கள் பல இயற்றப்பட்டன. இதன் விளைவாகப் பிராமணர்கள் ஒரே நேரத்தில் அரசதிகாரத்தையும் வருவாயினையும் இழந்தனர். இதன் காரணமாக ஆங்கிலக் கல்வி பெறுவதற்காகப் புதிய அதிகார மையமான நகரங்களுக்குக் குடிபெயர்ந்தனர். இவையே கோயில்களின் சரிவிற்கான முதற் காரணமாயிற்று. பிற்காலங்களில் மக்களிடம் எழுந்த சனநாயகத் தன்னுணர்ச்சி, திராவிட இயக்கத்தின் எழுச்சி ஆகியவை கோயில்களின் நலிவிற்கான துணைக் காரணங்களாக ஆயின.

ஆய்வுக்களத்தில் கிடைக்கப்பெற்ற தரவுகளின் அடிப்படையில் நோக்கும் போது சில கோயில்கள் மட்டும் வாழ்வதற்கான காரணம் புலப்படுகிறது. அதாவது உள்ளூர்மரபுகளை ஏற்றுக்கொண்டு நடைமுறைப் படுத்தும் கோயில்கள் உயிருடன் வாழ்கின்றன. மற்றவை மக்களிடமிருந்து அந்நியப்பட்டு வருகின்றன எனலாம். கோயில்கள் கொண்டுள்ள நிலபுலங்களோ, அரசஆதரவுகளோ, நன்கொடைகளோ, இந்து அறநிலையத் துறைகளின் பாதுகாப்போ கோயில்களைக் காக்க முடியும் எனக்

கருதஇடமில்லை. கோயில்கள் சடங்கியல் மூலம் மக்களோடு கொண்டுள்ள உறவும், அவை அடியவர்களுக்காகச் செய்துள்ள சமரசங்களும், அடியவர்களோடு கொண்டுள்ள இருவழி உறவுகளுமே அவற்றை வாழ வைக்கின்றன. களஆய்விலிருந்து பெறப்பட்ட தரவுகளும் கருத்து விளக்கங்களும் ஆய்வேட்டின் கருதுகோளை மெய்ப்பித்துள்ளன எனலாம்.

# தமிழ் நூல்கள்


| | | |
|---|---|---|
| 1.அரங்கராஜன், இரா., | *'தமிழகக் கோயிற்கலை'* | 8 ஏ அக்கிரகாரம் தெரு, மதுரை,2000. |
| 2. .... .... ... | 'தென்பாண்டி நாட்டில் அரையர் கலை' | மதுரை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு III, வரலாற்றுப் பேரவை, சென்னை, 1983 |
| 3.அருணாசலம், மு., | *'தமிழிலக்கிய வரலாறு'* | பார்கர் பதிப்பகம், சென்னை, (மறு.பதி,2005). |
| 4.ஆறுமுகநாவலர்., | *'இந்துமத இணைப்பு விளக்கம்'* | சுந்தரேசுவரர் திருக்கோயில் வெளியீடு, மதுரை, 1999 |
| 5.இராசமாணிக்கம்,தி., | *'தமிழகக் குடைவரைக் கோயில்கள்'* | சை.சி.நூ.ப.கழகம் சென்னை 18, 1984. |
| 6.இராசமாணிக்கம்,தி. | *'சைவ வைணவத் தெய்வத்திருவுருவங்கள்'* | சை.சி.நூ.ப.கழகம் சென்னை 18, 1989 |
| 7.இராசவேல், சு. சேஷாத்திரி, அ.கி. | *'தமிழ்நாட்டுக் குடைவரைக்கோயில்கள்'* | பண்பாட்டு வெளியீட்டகம், சென்னை 09, 2000. |
| 8.உமாமகேசுவரி.பு.பா. | *'நெல்லையப்பர் கோயில்'* | திரு.சை.சி.நூ.ப.கழகம் சென்னை 18, 1990. |
| 9.எத்திராஜ், ஆ. | *'108 வைணவ திவ்யதேச வரலாறு'* | வை.சி.நூ.ப.கழகம், காரைக்குடி |
| 10.கல்யாணசுந்தரம்.ந., | *'திருச்செந்தூர் முருகன் கோயில் வரலாறு'* | சுப்பிரமணியசுவாமி கோயில், திருச்செந்தூர், 1998(மூன்றா.பதி). |
| 11.கலைக்கோவன், இரா . | *'கலைவளர்த்த திருக்கோயில்கள்.* | சை.சி.நூ.ப.கழகம் சென்னை 18, 1984. |
| 12.கிருஷ்ணசாமி.,வே. | *'தமிழில் தலபுராண இலக்கியம்.'* | அ.வேலுக்கோனார், முத்துசாமிபுரம், நெல்லைமாவட்டம் 1974. |
| 13.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், எஸ்.(ப.ஆ) | *'கோயிலொழுகு'* | புத்தூர்அக்ரஹாரம், திருச்சி-17, 1976. |
| 14.கிருஷ்ணமூர்த்தி, ச. | 'கல்லிடைக்குறிச்சிக் கலைக்கோயில்கள்' | ஆ.உண்ணாமலை, சிதம்பரம்-01, 1996. |
| 15.கேசவன்.கோ., | 'மண்ணும் மனித உறவுகளும்' | சென்னை புக் ஹவுஸ், சென்னை-21,1979. |

16.கேசவன்.கோ., 'பள்ளு இலக்கியம் ஒரு சமுகவியல் பார்வை' அன்னம் பிரைவேட் லிட், சிவகங்கை. 1991(இரண்.பதி)

17.கேசவன்.கோ., 'கோயில் நுழைவுப் போராட்டங்கள்' சரவணபாலு பதிப்பகம், விழுப்புரம், 1997

18.கோவிந்தராசன்.சி கல்வெட்டுக்கலைச்சொல் அகரமுதலி பதிப்புத்துறை, காமராசர் பல்கலைக்கழகம். மதுரை,1987.

19.கோபாலன்.தே. 'நெல்லை மாவட்டம் கையேடு' தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை. 1997.

20.கைலாசபதி,க., 'சமூகவியலும் இலக்கியமும்' என்.சி.பி.எச், சென்னை-98. 1979.

21.சதாசிவ பண்டாரத்தார்T.V., 'பாண்டியர்வரலாறு' சை.சி.நூ.ப. கழகம், திருநெல்வேலி,1969.

22.சந்திரமூர்த்தி.மா., 'கட்டுவெட்டு கூறும் மருத்துவச் செயதிகள்' 'தொல்லியல் நோக்கில் தமிழகம், தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை. 1999.

23.சாமி. பி.எல்., *'தமிழ் இலக்கியத்தில் தாய்த்தெய்வ வழிபாடு'* என்.சி.பி. ஹைச், சென்னை 98. 1986 (நான்.பதி)

24.சாமி. பி.எல்., 'சங்க நூல்களில் முருகன்' சேகர்பதிப்பகம், சென்னை-78, 1990.

25.சிவசுப்பிரமணியன்.ஆ மந்திரமும் சடங்குகளும் மக்கள் வெளியீடு, சென்னை, 1999.

26.சீனிவேங்கடசாமி. மயிலை., 'சமணமும் தமிழும்' சை.சி.நூ.ப.கழகம், சென்னை, 2000

27.சீனிவாச ராகவன்,அ., 'நம்மாழ்வார்' சாகித்திய அக்காதெமி, புதுதில்லி,1996 (இரண்.பதி).

28.சீனிவாசன்.கே.ஆர். 'தென்னிந்தியக் கோயில்கள்' நேஷனல் புக்டிரஸ்ட், புதுதில்லி, 1996.

29.சுந்தரசோபிதராஜ்,கே.கே, தமிழில் தலமரங்கள் (தொகுதி-1) சோபிதம் வெளியீடு, நாகர்கோவில்,1991

30.சுந்தரசோபிதராஜ்,கே.கே, தமிழில் தாவரச்செய்திகள் (தொகுதி-2)சோபிதம் வெளியீடு, நாகர்கோவில்,1991

| | | |
|---|---|---|
| 31.சுந்தரம்.பி.எம்., இரா.சுப்பராயலு(மொ.பெ) | 'தேவதாசிமரபு' | மருதம் பதிப்பகம், ஒரத்தநாடு, 2002 |
| 32.சுப்பிரமணியபிள்ளை., இ.மு | 'சென்னை மாவட்டக்கோயில் வரலாறு' | அறநிலையத்துறை, அரசாங்கம், 1964 |
| 33.சுப்பிரமணியம்,பூ. | 'மெய்க்கீர்த்திகள்' | சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1983. |
| 34.சுப்ரமண்யன்.ந. | 'தமிழக வரலாறு(கி.பி1565வரை)' | உடுமலை,என்னெஸ் பப்ளிகேசன்ஸ், 1991 |
| 35.சுவர்ணலதா,க. (மொ.பெ) | 'சொத்துடைமை என்றால் என்ன?' | முன்னேற்றப் பதிப்பகம் மாஸ்கோ, 1989 |
| 36.செந்தில்செல்வக்குமரன்.மா, சந்திரவாணன். சொ., | 'சிதம்பரனார் மாவட்டம் ஓர் ஆய்வு' | தொல்பொருள் தொழில் நுட்பப் பணியாளர் பண்பாட்டுக் கழகம் மதுரை, 1986. |
| 37.செந்தில் செல்வக்குமரன்.மா., | 'மனோமயன் ஏரி' | மதுரை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, வரலாற்றுப் பேரவை, சென்னை, 1983 |
| 38.தனஞ்செயன்.ஆ. | 'குலக்குறியியலும் மீனவர் வழக்காறுகளும்' | அபிதா பப்ளிகேசன்ஸ் பாளையங்கோட்டை |
| 39. நீலகண்ட சாஸ்திரி (மொ.பெ) கே.வி.ராமன் | | என்.சி.பி.எச். சென்னை, 1989 |
| 40.பக்தவத்சலபாரதி, சீ. | பண்பாட்டு மானிடவியல் | மணிவாசகர் பதிப்பகம், சென்னை01,1990 |
| 41.பரந்தாமனார்.அ.கி | மதுரை நாயக்கர் வரலாறு | பாரிநிலையம், சென்னை, 1971 |
| 42.பரமசிவன் தொ., | 'சமயங்களின் அரசியல்' | கங்கு வெளியீடு, சூளைமேடு, சென்னை 94, 2005 |
| 43. ,, ... | 'பண்பாட்டு அசைவுகள்' | காலச்சுவடு, நாகர்கோவில், 2001 |
| 44. ,, .. | 'அழகர் கோயில்' | மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,மதுரை 21,1989 |
| 45. .. ... | தெய்வங்களும் சமூக மரபுகளும் | என்.சி.பி.எச் சென்னை-1995 |

| | | |
|---|---|---|
| 46. ... .... | தெய்வம் என்பதோர் | யாதுமாகி பதிப்பகம், பாளையங்கோட்டை, 2006 |
| 47.பழநியப்பன்,கி., | கோயில் மாநகர் | திருப்பணிக்குழு, மீனாட்சி திருக்கோயில், மதுரை, 1963 |
| 48.பாலசுந்தரம்.கே., (ப.ஆ) | *குருபரம்பரை பிரபாவம்* | திருமலை-திருப்பதி தேவஸ்தான வெளியீடு, 1963 |
| 49.பாஸ்கரன்.இரா. (மொழி.பெ) | உபரி மதிப்பு என்றால் என்ன? | முன்னேற்றப் பதிப்பகம் மாஸ்கோ,1989. |
| 50.பாஸ்கரன்.கா. | தமிழியல் ஆய்வில் மக்கட்பெயர்கள் | தேன்மொழி பதிப்பகம் கோயம்புத்தூர்- 06, 2003 |
| 51.பிள்ளை.கே.கே., | 'தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்' | உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.2000 |
| 52.புல்லர்.சி.ஜே. நாகராஜபிள்ளை.சி. (மொ.பெ) | தேவியின் திருப்பணியாளர்கள் | நாட்டார் வழக்காற்றியல் மையம்,பாளையங்கோட்டை, 1999. |
| 53.மணிவண்ணன்,எல். | பாண்டியநாட்டு வைணவக்கோயில்களின் கலையும் கட்டடக்கலையும் | J.J பப்ளிகேஷன்ஸ், மதுரை-20,1999. |
| 54.மாதவன்.வே.இரா. | *'தமிழில் தலபுராணங்கள்'* (முதற் பகுதி, இரண்டாம் பகுதி) | பாவை வெளியீட்டகம், தஞ்சாவூர்-05,1995 |
| 55.மாதையன்.பெ. சித்திரபுத்திரன்.எச், | மர இனப்பெயர்த் தொகுதி (தொகுதி 1) | தஞ்சாவூர், தமிழ்ப் பல்கலைக்கழகம், 1986 |
| 56.மாதையன்.பெ. | 'தொன்மமும் சங்காலப் பெண்டிர் நிலையும்' | புதுவிசை (இதழ்-12) டெலிகாம் குடியிருப்பு, ஒசூர் |
| 57.முகம்மது அலி.மு.ஈ, | 'சேரன்மகாதேவி ஓர் கோவில் நகரம்' | வரலாற்று ஆய்வுமற்றும் பதிப்புக் கழகம், நாகர்கோவில் 04,(ஆ.இ) |
| 58.முத்தையா,இ., | நாட்டுப்புறப் பண்பாட்டு மரபு மாற்று மரபு | அரசு பதிப்பகம், அவனியாபுரம், மதுரை,1998 |
| 59.முத்துமோகன்.ந. | இந்தியத் தத்துவங்களின் அரசியல் | கங்குவெளியீடு, சென்னை94, 2005 |

60.முத்துசாமிபிள்ளை.கோ.மு (சி.ஆ) 'கோயிற்களஞ்சியம் (வடஆற்காடு மாவட்டம்) தமிழ்ப் பல்கலைக்கழகம் தஞ்சாவூர், 1991

61.ராசுகுமார்.மே.து., 'சோழர் கால நிலவுடைமைப் பின்புலத்தில் கோயில் பொருளியல்' மக்கள் வெளியீடு சென்னை- 02, 2004

62.ராசேந்திரன்.ம. 'தமிழ்நாட்டு வரலாறு (பாண்டியர் பெருவேந்தர் காலம்)' தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் சென்னை, 2000

63.வானமாமலை,நா. 'தமிழர் வரலாறும் பண்பாடும்' என்.சி.பி.எச், சென்னை, 1990 (இரண்.பதி).

64.வேலுப்பிள்ளை,ஆ. 'தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்' ல.ராமகிருஷ்ணன், சென்னை-1, 1969.

65.வேங்கடராமன்,சு.. தமிழ் வளர்த்த வைணவம் மீனா பதிப்பகம், மதுரை, 2002

66.வேங்கடராமன்,சு., என்றும் உள்ள தமிழ் மீனாட்சி புத்தக நிலையம், மதுரை01, 2004.

67.வேதாசலம்.வெ. பாண்டியநாட்டில் வாணாதிராயர்கள் தொல்பொருள் தொழில் நுட்பப் பணியாளர்கள் பண்பாட்டுக் கழகம், மதுரை,1987.

68.ராமானுஜம்.செ., தேவதாசி மரபின் கைசிகி நாடகம் அட்சரம்(இதழ்-3)

69லட்சுமிநாராயணன்,செ 'வானமாமலை மடம் தோற்றமும் வளர்ச்சியும்' ஸ்ரீவானமாமலை மடம், நான்குநேரி,.(ஆ.இ)

70.லூர்து.தே. நாட்டார் வழக்காறுகள் மணிவாசகர் பதிப்பகம், சென்னை 01,1988.

71.ஸ்டீபன்,ஞா. (தொ.ஆசி) பண்பாட்டு வேர்களைத் தேடி... நாட்டார்வழக்காற்றியல் ஆய்வு மையம், பாளையங்கோட்டை,1999

72.ஜான்பிரிட்டோ.எஸ் 'மையத் தமிழகக் களவகைத் தாவரவியல்' செயின்ட் ஜோசப் கல்லூரி, திருச்சி, 1993.

73.வரலாற்றுக்குழு, 'தமிழ்நாட்டு வரலாறு- சங்ககாலம்: அரசியல்' தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை,1983.

74. .. 'தமிழ்நாட்டு வரலாறு பல்லவர்-பாண்டியர்காலம்' (தொகுதி1,2) வரலாற்றுக்குழு தமிழ்வளர்ச்சி இயக்ககம்,சென்னை,1990.

75. .. 'பெரியபுராணம் எனப்பெறும் திருத்தொண்டர் புராணம்' காசிமடம், திருப்பனந்தாள்.,1954

76.மயிலை மாதவதாஸன் (ப.ஆ) நாலாயிர திவ்வியப்பிரபந்தம் மணலி லஷ்மண முதலியார், சென்னை, 1962.

77. .. சதுரகராதி இ.மா.கோபாலகிருஷ்ணக் கோன் (ப.ஆ), மதுரை,1928

78.சண்முகம்பிள்ளை.மு. சுந்தரமூர்த்தி.இ (ப.ஆர்). திவாகரம் ., சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1990.

79.சண்முகம்பிள்ளை.மு.,(ப.ஆ) நிகண்டுச் சொற்பொருட்கோவை மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை,1982

80.... 'தனிப்பாடல் திரட்டு தொகுதி- ஒன்று' அ.மாணிக்கம், பூம்புகார் பிரசுரம், சென்னை. 1984 (இரண்.பதி).

கல்வெட்டுகள்

SII-vol NO: V, xiv, xxii, Director General, Archaeological Survey of India , New Delhi

Epigraphica Indica XXI No 17

ஆங்கில நூல்கள்


| | | |
|---|---|---|
| 1.Arunachalam, M. | 'Festivals of Tamil Nadu' | Gandhi Vidyalayam, Tiruchitrambalam, Tanjure,1980 |
| 2.Appadurai Arjun ., | 'Worship and Conflicts Under Colonial Rule: A South Indian Case' | Cambridge University,London,1981 |
| 3.Chandra Mudaliar | 'The State and Religious Endowments in Madras' | University of Madras,Madras,1976 |
| 4.Cobley Paul, | 'Narrative' | Routledge, London ,2001 |
| 5.Caldwell.R.Bishop. | 'A History of Tinnevelly' | Asian Educational Services, Madras,1989 . |
| 6.Desayar,M., | 'Temples and Social Integration' | Aradhana Publications, Nattalam, K.K.Dist, 2000 |
| 7.Gibaldi, Joseph. | 'MLA Handbook for Writers of Research Papers' | Affiliated East-West Press Pvt Ltd 2003 . |
| 8.Frazer,James | 'The Golden Bough' Vol.1. | The Macmillan Press Ltd., London,1976. |
| 9.Frazer,G..James | 'The Golden Bough' (The roots of Religion and Folklore) | Gramercy Books, New York,1981 |
| 10.Jeyechandrun,A.V., | 'Madurai Temple Complex' | Publication Division, Madurai Kamaraj University, Madurai,1985 |
| 11.Kaliyanam,G., | 'Guide and History of Sri Andal Temple' | Sri Nachiar Devasthanam, Sri Villiputtur, 1971 |
| 12.Krishna Sastri,H. | South Indian Images of Gods and Goddesses | Asian Educational Services, NewDelhi,1986 |
| 13.Levi-Strauss Claude | 'Myth and Meaning' | Routledge& Kegan Paul London and Henley, 1978 |
| 14.Ludden,David. | 'Peasant History in South India' | Oxford University Press, Delhi, 1989 |

| | | |
|---|---|---|
| 15.Ludden,David. | 'Early Capitalism and Local History in South India' | Oxford University Press, Delhi, 2005(sec.ed) |
| 16.Nachimuthu,K., (Ed) | Studies in Dravidian Place Names | Place Name Society, Thiruvanantha puram, 1993 |
| 17.Pate H.R | 'Tinnevelly District Gazetteer' | Publication Division, Manonmaniam Sundaranar University, Tirunelveli, 1999(II-print) |
| 18.Prince Gerald., | 'Narratology' | Mouton Publishers, Berlin 1982 |
| 19.Ramesan,N. | 'The Tirumala Temple' | Tirmala Tirupati Devasthanams, Tirupati, 2004 (Third edition). |
| 20.Ramesh.M.S., | 'The Festival and Rituals at Tirumala Temples' | T.R.Publications, Chennai,2000. |
| 21.Senthil Selvkumaran.M. Chandravanan,C | 'Heritage of Chidambaranar Dist' | Thilaga Publishers, Tirunelveli-7, 1994 |
| 22.Shenoy,J.P.L | 'Madura The Temple city' | 1937 |
| 23.Shulman,David Dean | 'Tamil Temple Myths': sacrifice and divine marriage in the south Indian Saiva tradition. | Univ.Press,Princeton, 1980. |
| 24.Singer,Milton | 'When a Great Tradition Modernizes' | University of Chicago Press, London, 1972. |
| 25.Stein Burton., | 'Peasant State and Society in Medieval South India' | Oxford University Press, Newyork, 1985 |
| 26.Stuart.A.J. | 'A Manual of The Tinnevelly District in the Presidency of Madras' | Government Press,Madras, 1879 |
| 27.Subrahmanian.N. | 'Pre-Pallavan Tamil Index' | University of Madras, Madras,1990. |
| 28.Thompson Stith, | 'Motif-Index of Folk literature' | Indiana University Press Bloomington,1955 |

